**Articles**

**Managing Editor : S.VEERAKANNAN (9788175456)**

Tamilmanam International Research Journal of Tamil Studies
தமிழ்மணம் சர்வதேசத் தமிழ் ஆய்வு இதழ் ISSN: 3049-0723 (Online)
A monthly peer-reviewed online multi-disciplinary Tamil journal

Volume 1, No. 09, June 2025

# Tamil Culture through Proverbs

**Dr S. Jamuna**
*Assistant Professor of Tamil, NGM College, Pollachi*
*Email : jamunaselvaraj6@gmail.com*

**Abstract:**

Folklore has long been passed down orally, even through tradition. But now all folktales are published in print The customs, culture, proverbs, legends, beliefs, and worship of rural people constitute customs. Among these customs, proverbs are the ones that are prevalent in the daily lives of rural people. The purpose of this article is to understand that those old dialects emerge through their natural speech and also reveal their culture..

**Keywords:** culture, proverbs, legends, beliefs

# பழமொழிகளின் வழி தமிழர் பண்பாடு

**முனைவர் செ. ஜமுனா**
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை, என்.ஜி.எம் கல்லூரி, பொள்ளாச்சி,

**சுருக்கம்:** நாட்டார் வழக்காறுகள் காலங்காலமாக வாய்மொழியாகப் பரப்பப்படுவன. மரபு வழியானவையும் கூட. ஆனால் தற்போது எல்லா நாட்டுப்புற வழக்காறுகளும் அச்சுப் பிரதியில் வெளியிடப்பட்டுள்ளன. கிராமப்புற மக்களின் பழக்கவழக்கங்கள், பண்பாடு, பழமொழிகள், விடுகதைகள், நம்பிக்கைகள், வழிபாடுகள் போன்றவை வழக்காறுகளாக அமைகின்றன. இவ்வலக்காறுகளுள் கிராமப்புற மக்களின் வாழ்க்கையில் அன்றாடம் புழக்கத்தில் வெளிப்படுவது பழமொழிகளாகும். அப்பழமொழிகள் அவர்களின் இயல்பான பேச்சினூடே வெளிப்பட்டு அவர்களின் பண்பாட்டினையும் வெளிப்படுத்துகின்றது என்பதை அறிவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்..

**முக்கியச் சொற்கள்:** கலாச்சாரம், பழமொழிகள், புனைவுகள், நம்பிக்கைகள்.

## 1. முன்னுரை:

பழமொழிகள் என்பவை ஒரு சமூகத்தின் அனுபவத்தையும், அறிவையும், விழுமியங்களையும் சுருக்கமாக எடுத்துரைக்கும் கூற்றுகள். அவை தலைமுறை தலைமுறையாக வாய்வழியாக கடத்தப்பட்டு, அந்த சமூகத்தின் கலாச்சார அடையாளமாக நிலைபெற்று விடுகின்றன. தமிழ்ச் சமூகத்தைப் பொறுத்தவரை, பழமொழிகள் வெறும் சொற்கள் அல்ல; அவை வாழ்வின் சாரம், சமூகத்தின் கண்ணாடி. கிராமப்புற மக்களின் வாழ்க்கையையும், அவர்களின் பண்பாட்டையும்

பிரதிபலிக்கும் பழமொழிகள், தமிழ்ச் சமூகத்தின் ஆழமான வேர்களை நமக்கு உணர்த்துகின்றன.

**2. பழமொழிகளின் தோற்றம் மற்றும் பரிணாமம்:**

பழமொழிகள் திடீரெனத் தோன்றியவை அல்ல. அவை நீண்ட கால அனுபவங்களின் விளைவாக உருவானவை. ஒவ்வொரு பழமொழியும் ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில், ஒரு குறிப்பிட்ட தேவைக்காக உருவாக்கப்பட்டிருக்கலாம். காலப்போக்கில், அந்த பழமொழிகள் மக்களின் மனதில் பதிந்து, அவர்களின் பேச்சில் ஒரு அங்கமாக மாறிவிட்டன. உதாரணமாக, "ஆலும் வேலும் பல்லுக்கு உறுதி" என்ற பழமொழி, ஆலங்குச்சியையும், வேலங்குச்சியையும் பல் துலக்க பயன்படுத்தியதன் மூலம் பெற்ற அனுபவத்தை சுருக்கமாக எடுத்துரைக்கிறது.

**3. பழமொழிகளில் பிரதிபலிக்கும் தமிழர் பண்பாடு:**

தமிழர் பண்பாடு என்பது ஒரு பரந்த மற்றும் சிக்கலான கருத்து. விருந்தோம்பல், நீதி, நேர்மை, உழைப்பு, குடும்ப உறவுகள், இயற்கை வழிபாடு எனப் பல கூறுகளை உள்ளடக்கியது. இந்த ஒவ்வொரு கூறுகளையும் பழமொழிகளில் காண முடியும். உதாரணமாக:

- **விருந்தோம்பல்:** "விருந்தோம்பல் விந்தையானது" என்ற பழமொழி, விருந்தினரை உபசரிப்பதன் முக்கியத்துவத்தை வலியுறுத்துகிறது.
- **உழைப்பு:** "முயற்சி திருவினையாக்கும்" என்ற பழமொழி, விடாமுயற்சியின் மூலம் வெற்றி பெறலாம் என்பதை எடுத்துரைக்கிறது.
- **குடும்ப உறவுகள்:** "தந்தை சொல் மிக்க மந்திரமில்லை" என்ற பழமொழி, தந்தையின் வார்த்தைகளுக்குக் கொடுக்க வேண்டிய மதிப்பை உணர்த்துகிறது.
- **நீதி:** "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்ற பழமொழி, உலக மக்கள் அனைவரும் உறவினர்கள் என்ற உயர்ந்த எண்ணத்தை வெளிப்படுத்துகிறது.

மேலும், விவசாயம் சார்ந்த பழமொழிகள் தமிழர்களின் வாழ்க்கை முறையில் விவசாயத்தின் முக்கியத்துவத்தை உணர்த்துகின்றன. உதாரணமாக, "ஆடிப்பட்டம் தேடி விதை" என்ற பழமொழி, ஆடி மாதத்தில் விதைப்பதன் அவசியத்தை வலியுறுத்துகிறது.

**4. பழமொழிகளின் பயன்பாடும் முக்கியத்துவமும்:**

பழமொழிகள் வெறும் அலங்கார வார்த்தைகள் அல்ல. அவை அன்றாட வாழ்க்கையில் பல்வேறு பயன்பாடுகளைக் கொண்டுள்ளன.

- **அறிவுரை கூறுதல்:** பழமொழிகள் மூலம் சுருக்கமான அறிவுரைகளை வழங்கலாம்.

- **தர்க்கரீதியான வாதம்:** பழமொழிகளைப் பயன்படுத்தி ஒரு விஷயத்தை வலுவாக வாதிடலாம்.
- **கதை சொல்லுதல்:** கதைகளில் பழமொழிகளைப் பயன்படுத்துவதன் மூலம், கதையை மேலும் சுவாரஸ்யமாக்கலாம்.
- **சமூக ஒழுங்கு:** பழமொழிகள் சமூக ஒழுங்கை நிலைநிறுத்த உதவுகின்றன.

**5. புனைவுகளும் நம்பிக்கைகளும்:**

பழமொழிகளில் புனைவுகளும், நம்பிக்கைகளும் பின்னிப் பிணைந்துள்ளன. சில பழமொழிகள் இயற்கைக்கு அப்பாற்பட்ட விஷயங்களை நம்புவதையும், சில பழமொழிகள் மூடநம்பிக்கைகளை வெளிப்படுத்துவதையும் காணலாம். உதாரணமாக, "காகம் கரைந்தால் விருந்தாளி வருவார்" என்ற பழமொழி ஒரு நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டது.

**6. பழமொழி**

வாய்மொழியில் அமைந்த நாட்டார் வழக்காறுகளுள் குறுகிய வடிவமுடையது பழமொழி. தலைமுறை தலைமுறையாக வாய்மொழி வழியாகக் கடத்தப்பட்டு வரும் அறிவுச் சுரங்கமாக அவை விளங்குகின்றன. தொல்காப்பியர் பழமொழிக்கு விளக்கம் அளிக்கும்போது,

"நுன்மையும் சுருக்கமும் ஒளியுடைமையும் எண்மையும் என்று இவை விளங்கத் தோன்றி குறித்த பொருளை முடித்தற்கு வரூஉம் ஏது நுதலிய முதுமொழி என்ப"(தொல்.செய்.177)

என்று முன்னையோர் குறிப்பிடுவதாகச் சுட்டுகிறார். மூவாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட இலக்கண நூலான தொல்காப்பியத்திலிருந்து பெறப்படும் இச்செய்தியால் பழமொழியின் பழைமை குறித்து அறிய முடிகிறது. அதுமட்டுமின்றி பழமொழியைச் சுட்டும் பெயராக முதுமொழி அமைவதையும் காணமுடிகிறது. முதுமை என்பது அனுபவத்தின் சான்று. பழமொழிகள் அந்த அனுபவத்தின் வெளிப்பாடாகவே பார்க்கப்படுகின்றன.

பழமொழி என்பது ஆழ்ந்த அறிவு, சுருக்கம், தெளிவாக விளங்கச் செய்தல், எளிமை, விளங்கத் தோன்றும்படி குறிப்பிட்ட கருத்தை உணர்த்துவது ஆகிய பண்புகளை உடையதாக தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். பழமொழி மிக பழைமையானது என்பதற்குச் சங்க இலக்கியத்திலும் சான்று உண்டு.

"அம்மா வாழி தோழி இம்மை நன்று செய் மருங்கில் தீதில் என்னும் தொன்றுபடு பழமொழியின்று பொய்த்தன்று"(அகம்.101)

என்று அகநானூறு குறிப்பிடுகின்றது. இதன் மூலம் அன்றைய சமூகத்தில் பழமொழிகள் எவ்வளவு ஆழமாக வேரூன்றி இருந்தன என்பதை உணரமுடிகிறது. ஒரு கூற்றின் உண்மைத்தன்மையை உறுதிப்படுத்த பழமொழிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. "முதுசொல், முதுமொழி, பழமொழி, பழஞ்சொல், மூதுரை, சொலவடை, ஒவகதை போன்ற சொற்கள் பழமொழியைச் சுட்டும் இலக்கிய வழக்குகளாகும். இவை ஒவ்வொன்றும் பழமொழியின் வெவ்வேறு பரிமாணங்களை நமக்கு உணர்த்துகின்றன. 'முதுசொல்' என்பது முதியவர்களின் சொல்லாக, அனுபவத்தின் வெளிப்பாடாக பார்க்கப்படுகிறது. 'சொலவடை' என்பது சொல்லின் அழகையும், அதன் பயன்பாட்டையும் குறிக்கிறது.

பழமொழிகள் ஒரு சமூகத்தின் பண்பாட்டை விளக்குபவை. அவை அந்த சமூகத்தின் நம்பிக்கைகள், விழுமியங்கள், வாழ்க்கை முறைகள் ஆகியவற்றை பிரதிபலிக்கின்றன. ஒரு பழமொழி உருவாக வேண்டுமென்றால், அந்த சமூகத்தில் அந்த கருத்து பரவலாக ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்க வேண்டும். பத்துப் பக்க உரைநடையில் சொல்லி விளக்க வேண்டுவதை ஒரு பழமொழி ஒரு வரியில் பளிச்சென்று விளக்குகிறது. சிக்கலான தத்துவங்களையும், வாழ்வியல் உண்மைகளையும் எளிமையாக புரிய வைக்கும் சக்தி பழமொழிகளுக்கு உண்டு. என்றோ, எங்கோ, எவரோ கூறிய பழமொழி இன்று, இங்கே நமக்கு ஓர் அரிய கருத்தையும், முடிவெடுக்கும் ஆற்றலையும், வெற்றி பெறும் துணிவையும் தந்துவிடும். பழமொழியின் காலத்தை வெல்லும் தன்மை இங்கே புலனாகிறது.

மக்களின் பேச்சுக்கள் தான் பழமொழிகள் ஆகின்றன. மக்களின் அன்றாட வாழ்வில் ஏற்படும் அனுபவங்கள், அவர்கள் கவனிக்கும் விஷயங்கள், அவர்கள் சந்திக்கும் மனிதர்கள் என எல்லாவற்றையும் உள்ளடக்கி பழமொழிகள் உருவாகின்றன. ஆகையால், பழமொழிகள் ஒரு சமூகத்தின் கண்ணாடி போல செயல்படுகின்றன. பழமொழிகள் என்பவை மக்கள் என்றும் புழங்கும் நாணயங்கள்" என எஸ். லீலா பழமொழிகள் பற்றிக் குறிப்பிடுகிறார். இக்கருத்துக்களிலிருந்து பழமொழிகள் என்பவை அனுபவ மொழிகளாகவும், நாட்டுப்புற மக்களின் பழக்கம், பண்பாடு ஆகியவற்றை விளக்குகின்றன என்பதையும் அறியமுடிகிறது. அவை வெறும் வார்த்தைகள் அல்ல, அவை ஒரு சமூகத்தின் வரலாறு.

பழமொழிகள் வெறும் அறிவுரைகள் மட்டுமல்ல, அவை ஒரு சமூகத்தின் மனசாட்சி. அவை நம்மை சரியான பாதையில் வழிநடத்துவதோடு, நம் தவறுகளை சுட்டிக்காட்டி திருத்துகின்றன. ஒவ்வொரு பழமொழிக்கும் பின்னால் ஒரு கதை இருக்கும், ஒரு அனுபவம் இருக்கும். அந்த கதையை, அந்த அனுபவத்தை புரிந்து கொள்ளும்போது, நாம் பழமொழியின் உண்மையான அர்த்தத்தை உணர்ந்து கொள்ள முடியும். உதாரணமாக, "கல்லைக் கண்ட நாய் கதைக்கு உதவாது" என்ற பழமொழி, ஒரு விஷயத்தின் உண்மைத்தன்மையை ஆராயாமல், மேலோட்டமாக பார்ப்பது பயனற்றது என்பதை உணர்த்துகிறது.

பழமொழிகள் நம் கலாச்சாரத்தின் பொக்கிஷங்கள். அவற்றை பாதுகாப்பதும், அடுத்த தலைமுறைக்கு எடுத்துச் செல்வதும் நம் கடமை. பழமொழிகளைப் பற்றி அறிந்து கொள்வதன் மூலம், நம் முன்னோர்களின் அறிவையும், அனுபவத்தையும் நாம் பெற முடியும். அவை நம் வாழ்க்கைக்கு வழிகாட்டிகளாகவும், ஊக்கமளிக்கும் மந்திரங்களாகவும் பயன்படும். எனவே, பழமொழிகளை மதிப்போம், அவற்றின் அர்த்தத்தை உணர்ந்து வாழ்க்கையில் பின்பற்றுவோம்.

**7. வேளாண் நம்பிக்கை சார் பழமொழிகள்**

கிராமப்புறங்களில் வேளாண்மைத் தொழிலே முதுகெலும்பாக விளங்குகிறது. மக்களின் வாழ்வாதாரம், பொருளாதார நிலை, கலாச்சாரம் என அனைத்திலும் வேளாண்மை பின்னிப்பிணைந்துள்ளது. இதனால், வேளாண்மை தொடர்பான பழமொழிகள் கிராமப்புறங்களில் பரவலாக நிலவுவதைக் காண முடிகிறது. இவை வெறும் வார்த்தைகளாய் மட்டுமல்லாமல், தலைமுறை தலைமுறையாகக் கடத்தப்பட்ட அனுபவ அறிவுச் சுரங்கங்களாகவும் திகழ்கின்றன. நிலத்தின் தன்மை, பயிர்களின் வகைகள், பருவநிலை மாற்றங்கள், நீர்ப்பாசன முறைகள் என வேளாண்மையின் ஒவ்வொரு அம்சத்தையும் பழமொழிகள் தொட்டுச் செல்கின்றன. குறிப்பாக, சில பயிர்களை நடும் அளவு, அவை விளைச்சல் கொடுக்கும் திசை ஆகியவற்றை வரையறை செய்து, அவற்றின் மூலம் அதிக விளைச்சல் பெறுவதற்கான வழிகாட்டுதல்களை நம்பிக்கை சார்ந்த பழமொழிகள் வழங்குகின்றன.

**பயிர்களின் இடைவெளியும் விளைச்சலும்:**

"நெல்லு நண்டோட, கரும்பு நரியோட, வாழ வண்டியோட, தென்னை தேரோட" என்ற பழமொழி, ஒவ்வொரு பயிருக்கும் இடையே எவ்வளவு இடைவெளி விட்டு நடவு செய்ய வேண்டும் என்பதை அழகாக எடுத்துரைக்கிறது. நெற்பயிர்களை நண்டு ஓடும் வேகத்தில் நெருக்கமாக நட வேண்டும். கரும்பை நரி ஓடும் வேகத்தில் சற்று இடைவெளி விட்டும், வாழையை வண்டி செல்லும் வேகத்தில் இன்னும் அதிக இடைவெளி விட்டும், தென்னையை தேர் செல்லும் வேகத்தில் மிக அதிக இடைவெளி விட்டும் நட வேண்டும் என்பது இதன் பொருள். இந்த பழமொழி, பயிர்களின் வளர்ச்சிக்குத் தேவையான சூரிய ஒளி, நீர், மற்றும் சத்துக்கள் தடையின்றி கிடைக்க வேண்டும் என்பதற்காக எவ்வளவு இடைவெளி தேவை என்பதை அனுபவப்பூர்வமாக உணர்த்துகிறது. இதேபோல், "அணில் தாவா மரம் ஆயிரம் மரம் இருந்தால் போதும்" என்ற பழமொழி, மரங்களை நெருக்கமாக நடவு செய்வதன் முக்கியத்துவத்தை வலியுறுத்துகிறது. அதாவது, அணில் ஒரு மரத்திலிருந்து இன்னொரு மரத்திற்குத் தாவ முடியாத அளவிற்கு மரங்கள் நெருக்கமாக இருந்தால், ஆயிரம் மரங்கள் இருந்தாலும் போதுமான விளைச்சல் கிடைக்கும் என்பது நம்பிக்கை. இவ்வாறு வரையறுக்கப்பட்ட இடைவெளியில் பயிர் செய்தால் நல்ல விளைச்சல் கிடைக்கும் என்பதை கிராமப்புற மக்கள் அனுபவ முறையிலும், அறிவியல் முறையிலும் அறிந்துள்ளனர். இன்றைய நவீன வேளாண்மை முறைகள் கூட பயிர்களுக்கு இடையே சரியான இடைவெளி இருக்க வேண்டும் என்பதை பரிந்துரைக்கின்றன.

**திசை நம்பிக்கையும் விளைச்சலும்:**

பயிர்கள் விளைச்சல் கொடுக்கும் திசை குறித்தும் கிராமப்புற மக்களிடையே சில நம்பிக்கைகள் நிலவுகின்றன. "வாழை வடக்க ஈனோனும், தென்னை தெற்கு ஈனோனும், கமுகு மேக்க ஈனோனும்" என்ற பழமொழி, வாழை வடக்கு திசையிலும், தென்னை தெற்கு திசையிலும், கமுகு மேற்கு திசையிலும் முதலில் விளைச்சல் கொடுத்தால் நல்லது என்ற நம்பிக்கையை வெளிப்படுத்துகிறது. இந்த திசைகளில் பயிர்கள் செழித்து வளர்வதற்கான காரணங்கள் அறிவியல் பூர்வமாக விளக்கப்படாவிட்டாலும், பல ஆண்டுகளாக இந்த நம்பிக்கைகள் கிராமப்புற மக்களிடையே வேரூன்றி உள்ளன. ஒருவேளை, அந்த திசைகளில் சூரிய ஒளி அதிகமாக கிடைப்பதாலோ அல்லது வேறு ஏதேனும் மண் வள காரணிகளாலோ பயிர்கள் நன்கு வளரலாம். எது எப்படியிருந்தாலும், இந்த பழமொழிகள் கிராமப்புற மக்களின் ஆழ்ந்த நம்பிக்கையையும், இயற்கையுடன் அவர்கள் கொண்டுள்ள பிணைப்பையும் எடுத்துக்காட்டுகின்றன.

**8. பழமொழிகளின் முக்கியத்துவம்:**

வேளாண் பழமொழிகள் வெறும் பொழுதுபோக்கு அம்சங்கள் அல்ல. அவை கிராமப்புற மக்களின் வாழ்வோடு ஒன்றிணைந்தவை. இந்த பழமொழிகள் மூலம், அவர்கள் தங்கள் அனுபவ அறிவை அடுத்த தலைமுறைக்குக் கடத்துகின்றனர். மேலும், இவை வேளாண்மை தொடர்பான முடிவுகளை எடுப்பதில் அவர்களுக்கு வழிகாட்டியாக இருக்கின்றன. உதாரணமாக, எந்த பயிரை எப்போது நடவு செய்ய வேண்டும், எந்த நிலத்தில் எந்த பயிர் நன்றாக வளரும், எந்த திசையில் பயிர் செய்தால் அதிக விளைச்சல் கிடைக்கும் போன்ற விஷயங்களை பழமொழிகளை அடிப்படையாகக் கொண்டு அவர்கள் தீர்மானிக்கின்றனர். இதன் மூலம் அவர்கள் தங்கள் உழைப்பையும், வளங்களையும் வீணாக்காமல் சிறந்த விளைச்சலைப் பெறுகின்றனர்.

வேளாண் பழமொழிகள் காலத்தால் அழியாத பொக்கிஷங்கள். அவை கிராமப்புற மக்களின் அறிவுச் செல்வத்தையும், பண்பாட்டையும் பிரதிபலிக்கின்றன. இவற்றை பாதுகாப்பதும், அடுத்த

தலைமுறைக்குக் கொண்டு செல்வதும் நமது கடமையாகும். நவீன தொழில்நுட்பங்கள் பெருகிவிட்டாலும், பழமொழிகளில் பொதிந்துள்ள அனுபவ அறிவை நாம் மறந்துவிடக் கூடாது. ஏனெனில், அவை இயற்கையோடு இணைந்து வாழ்வதற்கான வழிகாட்டுதலை நமக்கு வழங்குகின்றன.

**9. குடும்பப் பண்பாடு**

சமூகத்தின் ஆணிவேராக விளங்கும் குடும்பம், பண்பாட்டின் உறைவிடமாகத் திகழ்கிறது. குடும்ப அமைப்பு, அதன் உறவுகள், விழுமியங்கள் என்பவை ஒரு சமூகத்தின் அடையாளமாகவும், தனித்துவமாகவும் கருதப்படுகின்றன. "நல்லதொரு குடும்பம் பல்கலைக்கழகம்" என்ற கூற்று, குடும்பத்தின் இன்றியமையாத பங்கையும், அதன் முக்கியத்துவத்தையும் உணர்த்துகிறது. குடும்ப உறவுகள் வலுவாகவும், ஒற்றுமையாகவும் இருக்கும்போது, அது தனிநபர்களுக்கும், சமூகத்திற்கும் பல நன்மைகளை வழங்குகிறது.

குடும்ப உறவுகளில் கணவன்-மனைவி உறவு மிக முக்கியமானதாகக் கருதப்படுகிறது. இது குடும்பத்தின் அடித்தளமாக அமைகிறது. ஆதிகாலம் தொட்டு "ஒருவனுக்கு ஒருத்தி" என்ற பண்பாடு வலியுறுத்தப்பட்டு வந்தாலும், இராமாயணத்தில் இது ஆணித்தரமாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது. இந்த விழுமியமானது, திருமண உறவின் புனிதத்தையும், ஒருமைப்பாட்டையும் எடுத்துக்காட்டுகிறது.

பழமொழிகளும் "ஒருவனுக்கு ஒருத்தி" என்ற பண்பாட்டை வலியுறுத்துகின்றன. உதாரணமாக, "ஒரு பொண்டாட்டி காரனுக்கு உரியில சோறு, ரெண்டு பொண்டாட்டிக்காரனுக்கு மந்தையில சோறு" என்ற பழமொழி, இருதார மணம் குடும்பத்தில் சிக்கல்களை ஏற்படுத்தும் என்பதைச் சுட்டிக்காட்டுகிறது. இதேபோல், "பொழச்ச பொழப்புக்கு பொண்டாட்டி ரெண்டு, காவேரித் தம்பிக்கு எழ வேட்டி மூணு" என்ற பழமொழி, இருதார மணத்தின் சிரமங்களையும், அதனால் ஏற்படும் விளைவுகளையும் எடுத்துரைக்கிறது. இதன் மூலம், ஒருவனுக்கு ஒருத்தி என்ற பண்பாட்டின் முக்கியத்துவத்தை பழமொழிகள் உணர்த்துகின்றன.

பெண்மையைப் போற்றும் சமூகம் மேன்மையடையும் என்பது நிதர்சனமான உண்மை. தமிழ் இலக்கியங்கள் பெண்மையைப் போற்றும் பாடல்களால் நிறைந்துள்ளன. கிராமப்புற மக்களின் வாழ்வியலை பிரதிபலிக்கும் நாட்டுப்புற இலக்கியங்களான பழமொழிகளும் பெண்ணைப் போற்றத் தவறவில்லை. "பெண் புத்தி பின் புத்தி" என்ற கூற்று, பெண்கள் எந்த ஒரு செயலையும் செய்வதற்கு முன்பு, அதன் பின்விளைவுகளை சிந்தித்து செயல்படும் ஆற்றல் படைத்தவர்கள் என்பதை விளக்குகிறது.

வாய்த்திறமை உள்ள பெண்கள் எந்த சூழ்நிலையிலும் வாழ்ந்து விடுவார்கள் என்பதைப் பின்வரும் பழமொழிகள் உணர்த்துகின்றன:

- "வாயிருந்தா எங்கம்மா வாழச் சொன்னா, வாயில்லாட்டி வாழவாடிச் சந்த மேல வந்தரச் சொன்னா"
- "வாழப்பழங் கொண்டு போனவ வாசல நிக்க, வாயக் கொண்டு போனவ வீட்டுக்குள்ள போனாளா"
- "வேய்க்கானம் இல்லாத புள்ளைய வாய்க்கால்ல புடிச்சுத் தள்ளு"

ஔவையார் "எத்திசைச் செலினும் அதிசைச்சோறே" என்று கூறியது போல், பெண்கள் அறிவை வளர்த்தால், எங்கும் சென்று தன்னை நிலைநாட்டிக் கொள்ள முடியும் என்பதை இப்பழமொழிகள்

விளக்குகின்றன. எந்த ஒரு கடினமான சூழ்நிலையிலும், தனது புத்திசாலித்தனத்தாலும், பேச்சுத் திறமையாலும் ஒரு பெண் தன்னை பாதுகாத்துக் கொள்ள முடியும் என்பதை இதன் மூலம் அறியலாம்.

உழைப்பின் மகத்துவத்தை உணர்த்தும் பழமொழிகள் மனிதனின் பொருளாதார வளர்ச்சிக்கு உழைப்பு இன்றியமையாதது. "உழைப்பே உயர்வு தரும்" என்ற பழமொழி, உழைப்பின் முக்கியத்துவத்தையும், அதன் மூலம் வாழ்க்கையில் முன்னேற முடியும் என்பதையும் உணர்த்துகிறது. சோம்பேறியாக இருப்பவர்களுக்கு உழைப்பின் மேன்மையை உணர்த்தும் வகையில் பல பழமொழிகள் உள்ளன.

திருவள்ளுவர் உழைப்பின் பெருமையை இவ்வாறு கூறுகிறார்:

"இலமென்று அசைஇ இருப்பாரைக் காணின் நிலன்னும் நல்லாள் நகும்" (குறள் – 1040)

அதாவது, "நம்மிடம் ஒரு பொருளும் இல்லை என்று சோம்பேறியாக இருப்பவர்களைப் பார்த்து, நிலமகள் கூட சிரிப்பாள்" என்கிறார். உழைக்காமல் சோம்பேறியாக பொழுதைக் கழிப்பவர்களை ஏளனம் செய்யும் விதமாகப் பழமொழிகள் அமைந்துள்ளன.

- "அறுக்க மாட்டாதவன் கையில் 58 அருவாள்"
- "வெறும் உள்ள புருஷா வேடிக்கை காரா, வெடியாள பார்த்தா கோடங்கிக்காரா"

போன்ற பழமொழிகள், உழைப்பில்லாமல் இருப்பவர்களைக் கேலி செய்கின்றன. "வினையே ஆடவர்க்கு உயிரே" என்ற சங்க இலக்கியப் பாடல் மற்றும் தொல்காப்பியம், தொழிலை ஆண்களுக்கு உயிர் போன்றது எனக் கூறுகின்றன. உழைப்பின் மகத்துவத்தை உணர்த்தும் இத்தகைய கூற்றுகள் இருந்தும், சோம்பேறியாக இருப்பவர்களை நாட்டுப்புற மக்கள் பழமொழிகள் மூலம் கண்டித்துள்ளனர்.

இவ்வாறு, தமிழர் பண்பாட்டில் சிறந்து விளங்கிய குடும்ப அமைப்பு, பெண்களின் மேன்மை, உழைப்பின் உயர்வு போன்றவற்றை நாட்டுப்புற மக்களின் அன்றாட வாழ்வில் பயன்படுத்தப்படும் பழமொழிகள் மூலம் அறியலாம். பழமொழிகள் வெறும் வார்த்தைகள் அல்ல, அவை நம் முன்னோர்களின் அனுபவங்களையும், வாழ்க்கை நெறிமுறைகளையும் உள்ளடக்கிய பொக்கிஷங்கள் ஆகும். எனவே, பழமொழிகளைப் பாதுகாப்பதும், அவற்றின் மூலம் நல்ல பண்புகளை வளர்ப்பதும் நமது கடமையாகும்.

**முடிவுரை:**

பழமொழிகள் தமிழர்களின் பண்பாட்டின் அடையாளங்கள். அவை தலைமுறை தலைமுறையாகக் கடத்தப்பட்டு, தமிழ்ச் சமூகத்தின் விழுமியங்களையும், அனுபவங்களையும் நமக்கு எடுத்துரைக்கின்றன. பழமொழிகளைப் பாதுகாப்பதும், அவற்றை அடுத்த தலைமுறைக்கு எடுத்துச் செல்வதும் நமது கடமை. அவற்றின் ஆழமான பொருளை உணர்ந்து, வாழ்க்கையில் கடைப்பிடிப்பதன் மூலம் தமிழர் பண்பாட்டை மேலும் வளப்படுத்தலாம்.

**குறிப்புகள்:**


- *தேவநேயப் பாவாணர், ஞா. தமிழ்ப் பழமொழிகள். சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 1953.*
- *பரமசிவம், கு. பழமொழி களஞ்சியம். மணிவாசகர் பதிப்பகம், 2007.*

- *அண்ணாமலை, வெ. நாட்டுப்புறவியல். உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 2000.*

**References:**

1. Jamuna, Se. "Pazhamozhigalin Vazhi Thamizhar Panbadu." *N.G.M College*, Pollachi.
2. Devaneyap Pavanar, Gna. *Tamil Pazhamozhigal.* Saiva Siddhanta Nurpathippu Kazagam, 1953.
3. Paramasivam, Ku. *Pazhamozhi Kalanjiyam.* Manivasagar Pathippagam, 2007.
4. Annamalai, Ve. *Nattupuraviyal.* Ulaga Tamizharachi Niruvanam, 2000.

தமிழ்மணம் சர்வதேசத் தமிழ் ஆய்விதழ்
**Tamilmanam International Research Journal of Tamil Studies | ISSN(o): 3049-0723**
[Impact Factor: 8.47] Monthly, Peer-Reviewed, Refereed, Indexed Journal with IC Value : 86.87
**Volume - 1, Issue - 09, June - 2025 Article ID:** TM0109202502



DOIs: https://doi.org/10.63300/tm0109202502 --:-- Research Paper

# ECOLOGY LANGUAGE TAMIL

**Mrs. K. Nandhini[1], Dr. R. Subramani[2]**

1.*PhD Research Scholar (Part Time)* **Registration No.: BDU 2220632780148**,
*Department of Tamil,* ***Government Arts College, (Autonomous)***
***Affiliated to Bharathidasan University, Karur – 639005***
*Email : nandhinikandasamy16@gmail.com*

2.***Research Guide**, Associate Professor,*
*Department of Tamil,* ***Government Arts College, (Autonomous),***
***Affiliated to Bharathidasan University, Karur - 639005..***

**Abstract:**

*Language, the cornerstone of human civilization, has evolved from rudimentary forms like sign language, coded communication, and pictorial representation to sophisticated systems imbued with complex grammatical structures and rich literary traditions. These advanced languages, particularly those with a well-established written form, serve as potent indicators of societal progress and cultural refinement. This article delves into the fascinating relationship between language and the natural world, specifically examining how Tamil, a classical language boasting a profound grammatical and literary heritage spanning centuries, has deeply embedded within its structure a reverence for nature and its inherent values. It argues that Tamil exemplifies how ecology, as the fundamental source of sustenance and well-being for all life forms, including humans, has been linguistically encoded and celebrated. By exploring this connection, we can gain a deeper understanding of the vital role language plays in shaping our perception and appreciation of the environment, underscoring the importance of linguistic heritage in fostering ecological awareness. Key concepts explored include: the characteristics of a classical language, the linguistic expression of subordination to nature, the regenerative power inherent in natural systems, the value of biodiversity, and the contribution of language to the development of civilization.*

**Keywords:** Classical language, theory of nature, renewable energy, biodiversity, civilization

# சூழலியல் மொழி தமிழ்

**திருமதி. . க.நந்தினி[1], முனைவர் இரா.சுப்ரமணி[2]**

*1.**பகுதி நேர முனைவர் பட்ட ஆய்வாளர் Registration No.: BDU 2220632780148**, தமிழாய்வுத்துறை,*
*அரசு கலைக்கல்லூரி ,(தன்னாட்சி)*
*பாரதிதாசன் பல்கலைக்கழக இணைவு பெற்றது, கரூர்* – 639005

*2.நெறியாளர், இணைப்பேராசிரியர், தமிழாய்வுத்துறை, அரசு கலைக்கல்லூரி ,(தன்னாட்சி)*
*பாரதிதாசன் பல்கலைக்கழக இணைவு பெற்றது, கரூர்* - 639005.

**ஆய்வுச்சுருக்கம்**

மனித நாகரீகத்தின் முதல் படியாக மொழி கருதப்படுகிறது. சைகை மொழி, குறியீட்டு மொழி, சித்திரமொழி ஆகியவற்றையெல்லாம் கடந்து எழுத்துரு பெற்று சிறந்த இலக்கண இலக்கிய கட்டமைப்புகளுக்கு உட்பட்ட மொழிகள் நாகரிகத்தின் சிறந்த வளர்ச்சி படிமங்களாக கருதப்படுகின்றன. அந்த வகையில் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே சிறந்த இலக்கண, இலக்கிய வளத்துடன் இருந்த மொழியான தமிழ் இயற்கையையும் அதன் விழுமியங்களையும் எப்படி தன்னுள் கட்டமைத்துக் கொண்டது என்றும், சூழலியல் மனிதன் உட்பட இந்த பூமியில் வாழும் உயிர்கள் அனைத்திற்கும் எவ்வாறு முதன்மை ஆதாரமாக விளங்குகிறது என்பதையும் இக்கட்டுரை திறம்பட விவரிக்கிறது.

**குறிப்புச்சொற்கள்** : செம்மொழி, திணைக்கோட்பாடு, புதுப்பித்துக்கொள்ளும், ஆற்றல், பல்லுயிரியம், நாகரிகம்.

**முன்னுரை**

செம்மொழித் தகுதி பெற்ற மொழிகளுள் ஒன்றான தமிழ்மொழி அதன் அமைப்பியலிலும் உள்ளடக்கத்திலும் திணை நிலம் சார்ந்தமனிதர்களின் வாழ்வியலையே ஒத்துள்ளது.மொழி என்பது மக்களுடைய எண்ண உணர்வுகளின் செயல்பாட்டு வடிவமாகவே இருக்கிறது.மக்களின் நிலம், தட்பவெப்ப நிலை சார்ந்த வாழியல் அம்சங்கள் ஒரு மொழியில் இயல்பாகவே பிரதான இடத்தைப் பெறுகின்றன.இந்த நூற்றாண்டில் தொடர்ந்து முன்னேறி வரும் அறிவியல் கண்டுபிடிப்புகள், அணு ஆயுதங்கள்,ஒரு நாட்டின் பொருளாரத்தையும் வலிமையையும் தீர்மானிக்கின்றன. அறிவியலிலும்,தொழில்நுட்பத்திலும் மனித குலம் எவ்வளவோ உயரங்களைத் தொட்டு விட்டது. ஆனால் அடிப்படைத் தேவைகளையும் உயிர் வாழ்வதற்கான இன்றியமையாத சூழலையும் எண்ணிப்பார்க்கவும், பாதுகாக்கவும் மறந்து விட்டது.வசதிகளுக்கும், இன்ன பிற ஆடம்பரங்களுக்கும் நாம் அடிமைப்பட்டு போனோமே தவிர ,அடிப்படைக் கட்டமைப்பை நாம் புரிந்து கொள்ளாமல் சேதப்படுத்தி விட்டோம். ஆனால் நமது முன்னோர்களின் வாழ்வு இயற்கையை அடிப்படையாகக் கொண்டே இருந்தது. அவர்கள் பேசிய மொழி சூழலியல் கோட்பாட்டை மையப்படுத்தியே இலக்கண இலக்கிய அமைப்புகளை பெற்றிருந்தது. அதனைப் பற்றி விரிவாக இக்கட்டுரை கூறுகிறது.

**இயற்கையும் தமிழனும்**

தூய்மையான காற்று, குடிநீர், மூலிகைகள், தாவரங்கள், வளமான உயிர்ச்சூழல் என இயற்கையுடன் மனிதர்கள் வாழத் தகுதியாக இருந்த பூமி கடந்த சில நூற்றாண்டுகளாக மனிதர்களின் பேராசையினால் தன் சுயத்தை இழந்து கொண்டே இருக்கிறது. அதீத சூழலியல் சிதைவுகள் நிகழ்ந்த வண்ணமே உள்ளன. மனித குலம் இப்போது தான் சூழலியல் என்னும் சொல்லையே நினைவு கூரத் தொடங்கியிருக்கிறது. பூமியின் முக்கியத்துவத்தை மானுட சமூகம் தன் சுய சிந்தனைகளின் வாயிலாக தோண்டத் தொடங்கியிருக்கிறது. ஆனால் சங்கத்தமிழன் வாழ்ந்திருந்த வாழ்வு இயற்கைக்கும், அவனுக்குமிருந்த உறவின் மொத்த சாராம்சமாகும். தமிழின் பழமையான இலக்கண நூலானத் தொல்காப்பிய அகத்திணையியலின் திணைக்கோட்பாடு சூழலியலின் தொடக்க மூலம் எனக் கொள்ளலாம். “தாய்மொழி என்பது சுற்றுச்சூழலிலிருந்து தோற்றம் கொள்வதால் மக்களின் பண்பாட்டில் அங்குள்ள மலைகள், காடுகள், ஆறுகள், கடல் போன்றவை ஒன்றோடொன்று பிணைந்திருக்கும். அத்துடன் அவர்கள் பேசும் மொழி அதன் இயற்கையை அதன் வளத்தை அவர்களுக்கு நினைவுறுத்திக் கொண்டே இருக்கும்” என்கிறார் சூழலியல் எழுத்தாளர் நக்கீரன்.

சங்க இலக்கியம் காட்டும் தமிழர்களின் வாழ்க்கை முறை இயற்கையோடு இயைந்த வாழ்வு. அவர்கள் இயற்கையை வெறுமனே அனுபவிக்கவில்லை, மாறாக அதன் ஒரு அங்கமாகவே தங்களை உணர்ந்தார்கள். நிலம், நீர், காற்று, நெருப்பு, ஆகாயம் ஆகிய பஞ்ச பூதங்களின் முக்கியத்துவத்தை உணர்ந்து அவற்றை போற்றி பாதுகாத்தனர். ஒவ்வொரு நிலத்திற்கும் தனித்தனியான தெய்வங்களை வணங்கி, அந்த நிலத்தின் வளத்தை காக்க தங்கள் பங்களிப்பை செய்தனர். முல்லை நிலத்தில் காடுகளை மேய்ச்சலுக்காகவும், குறிஞ்சி நிலத்தில் மலைகளை வாழ்வாதாரத்திற்காகவும், மருத நிலத்தில் வயல்களை விளைச்சலுக்காகவும், நெய்தல் நிலத்தில் கடலை மீன்பிடித்தலுக்காகவும் பயன்படுத்தி, அந்தந்த நிலத்தின் வளத்தை மேம்படுத்தும் வகையில் தங்கள் வாழ்க்கையை அமைத்துக்கொண்டனர்.

தொல்காப்பியம் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என மூன்று வகைகளில் நிலத்தையும் காலத்தையும் பகுத்து, அந்தந்த நிலத்தில் வாழும் மக்களின் வாழ்க்கை முறைகளை வரையறுக்கிறது. முதற்பொருளான நிலம் ஐந்து வகையாக பிரிக்கப்பட்டுள்ளது: குறிஞ்சி (மலை), முல்லை (காடு), மருதம் (வயல்), நெய்தல் (கடல்), பாலை (மணல்). ஒவ்வொரு நிலத்திற்கும் அதற்கேற்ற காலநிலைகள் உள்ளன. கருப்பொருட்கள் அந்தந்த நிலத்தில் காணப்படும் தாவரங்கள், விலங்குகள், பறவைகள், நீர்நிலைகள், மற்றும் மக்களின் தொழில்கள் ஆகியவற்றை உள்ளடக்கியது. உரிப்பொருட்கள் அந்தந்த நிலத்தில் வாழும் மக்களின் காதல், போர், பிரிவு, மற்றும் ஏனைய வாழ்க்கை முறைகளை குறிக்கின்றன. இந்த முப்பொருள் கோட்பாடு தமிழர்களின் சூழலியல் அறிவை வெளிப்படுத்துகிறது.

சங்க இலக்கியங்களில் விலங்குகளுக்கும் பறவைகளுக்கும் முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளது. உதாரணமாக, புறாக்கள் தூது செல்வதாகவும், யானைகள் போரில் பயன்படுத்தப்பட்டதாகவும், புலிகள் வீரத்தின் அடையாளமாகவும் கருதப்பட்டன. சங்ககால மக்கள் விலங்குகளையும் பறவைகளையும் தங்கள் வாழ்வின் ஒரு பகுதியாகவே கருதினர். அவர்கள் விலங்குகளுக்கு தீங்கு விளைவிக்காமல், அவற்றின் வாழ்விடங்களை பாதுகாத்தனர். காடுகளை அழித்து விவசாய நிலங்களை உருவாக்காமல், காடுகளோடு இணைந்து வாழ்ந்தனர். ஆறுகளையும் ஏரிகளையும் தூய்மையாக வைத்தனர், நீர்நிலைகளை மாசுபடுத்தாமல் தங்கள் தேவைகளை பூர்த்தி செய்தனர்.

பண்டைய தமிழர்கள் இயற்கையை எவ்வாறு மதித்தனர் என்பதற்கு பல சான்றுகள் உள்ளன. அவர்கள் மரங்களை வெட்டும்போது, அதற்கு பதிலாக வேறு மரங்களை நட்டனர். நீர்நிலைகளை தூய்மையாக வைத்து, அவற்றில் மீன்களை வளர்த்தனர். விலங்குகளுக்கு தீங்கு விளைவிக்காமல், அவற்றின் வாழ்விடங்களை பாதுகாத்தனர். அவர்கள் இயற்கையோடு இயைந்த வாழ்க்கை வாழ்ந்ததால், நோய்கள் அவர்களை அதிகம் தாக்கவில்லை. அவர்கள் ஆரோக்கியமான வாழ்க்கை வாழ்ந்தனர்.

சங்க இலக்கியத்தில் கூறப்பட்டுள்ள சூழலியல் கருத்துக்களை இன்றைய தலைமுறையினர் பின்பற்ற வேண்டும். நாம் இயற்கையை மதிக்க வேண்டும், அதை பாதுகாக்க வேண்டும். மரங்களை நட வேண்டும், நீர்நிலைகளை தூய்மையாக வைத்திருக்க வேண்டும், விலங்குகளுக்கு தீங்கு விளைவிக்காமல் அவற்றின் வாழ்விடங்களை பாதுகாக்க வேண்டும். அப்போதுதான் நமது பூமி எதிர்கால சந்ததியினருக்கு வாழத் தகுந்த இடமாக இருக்கும்.

சூழலியல் எழுத்தாளர் நக்கீரன் கூறுவது போல, "தாய்மொழி என்பது சுற்றுச்சூழலிலிருந்து தோற்றம் கொள்வதால் மக்களின் பண்பாட்டில் அங்குள்ள மலைகள், காடுகள், ஆறுகள், கடல் போன்றவை ஒன்றோடொன்று பிணைந்திருக்கும். அத்துடன் அவர்கள் பேசும் மொழி அதன்

இயற்கையை அதன் வளத்தை அவர்களுக்கு நினைவுறுத்திக் கொண்டே இருக்கும்". எனவே, நாம் நமது தாய்மொழியை காப்பதன் மூலம் நமது சுற்றுச்சூழலை பாதுகாக்க முடியும்.

சங்கத்தமிழன் இயற்கையோடு ஒன்றி வாழ்ந்தான். அவனுடைய வாழ்க்கை முறை சூழலியலுக்கு எடுத்துக்காட்டாக இருந்தது. நாம் அவனுடைய வாழ்க்கை முறையை பின்பற்றி, இயற்கையை பாதுகாப்போம். அப்போதுதான் நமது எதிர்காலம் வளமாக இருக்கும்.

**சூழலியல்: ஓர் புதுப்பித்துக் கொள்ளும் ஆற்றல் மூலம்**

மனிதன் இயற்கையோடு அதன் போக்கில் வாழ்ந்திருந்த காலங்களில் பூமி உயிர்ப்புடன் இருந்தது. அதன் காரணிகளான நதிகளும், மலைகளும், காடுகளும், கடல்களும் அதனதன் போக்கில் இயங்கின. இயற்கையானது கால மாற்றத்தின் காரணமாக சிதைவுற நேர்ந்தாலும் மீண்டும் தன்னைப் புதுப்பித்துக் கொள்ளும் ஆற்றலைப் பெற்றிருந்தது. மண், நீர், நிலம் என இயற்கை ஆற்றல்கள் அனைத்துமே தன்னை மீட்டுருவாக்கம் செய்து கொள்கிறது. இயற்கை உருவாக்கித் தரும் அனைத்துமே இயற்கையோடு இரண்டறக் கலந்து, அழிந்து மீண்டும் புதியதாக உருவாகிறது. ஆனால் மனிதன் நாகரிகம் என்ற பெயரில் இயற்கையை அழிக்கத் தொடங்கியதன் விளைவு இயற்கை தன்னைப் புதுப்பித்துக்கொள்ளும் சக்தியை இழந்து விட்டது.

நாம் உருவாக்கி வைத்திருக்கும் எண்ணெய் கழிவுகள், நெகிழிகள், உலோகங்கள், இரசாயனங்கள், வேதியல் சேர்மங்கள் ஆகியவை பூமியின் சுற்றுச்சூழலை சேதப்படுத்தி, இயற்கையை அழிக்கின்றன. இயற்கை தரும் வளங்களை பயன்படுத்துவது மட்டுமல்லாமல் இயற்கையை அழிக்கும் போக்கை கொண்டுள்ள மனித இனம் பிற்காலத்தில் இதற்காக கொடுக்கப் போகும் விலை மனித குலத்தின் அழிவே ஆகும். இயற்கை தன்னை சுத்தப்படுத்திக் கொள்ளவும் புதுப்பித்துக் கொள்ளவும் உயிரினங்களை வைத்திருக்கிறது. என்பது கூட வியப்பளிக்கும் செய்தியாகும். சங்க இலக்கியங்களில் பாறு என குறிப்பிடப்படும் பிணந்தின்னிக் கழுகுகள் இதற்கு நல்லதொரு சான்றாகும். இறந்து போன உடல்களை தின்று நோய் நொடி பரவாமல் நம்மையும் காட்டில் உள்ள விலங்குகளையும் பாதுகாக்கும் பிணந்தின்னிக் கழுகுகள் இன்று அழிவின் விளிம்பில் இருக்கின்றன.

கால்நடைகளுக்கு வலிக்கொல்லியாக போடப்படும் டைக்ளோபினாக் அதன் ரத்தத்திலேயே கலந்து இருக்கிறது. அவை இறந்த பின் அவற்றை சாப்பிடும் பிணந் தின்னி கழுகுகளின் சிறுநீரகத்தை அது தாக்கி இறக்கச் செய்கிறது. இதன் காரணமாக இந்திய அளவில் டைக்ளோபினாக் வலிகொல்லி தடை செய்யப்பட்டிருக்கிறது. அப்படி இருந்தும் தடையை மீறியும் அதன் பயன்பாடு இருக்கவே செய்கிறது என்கிறார் ஓலைச்சுவடி சூழலியல் இதழ் கட்டுரையாளர் சு பாரதிதாசன். பாறு கழுகுகளின் உடலில் இறந்து போன மாமிசங்களையும் செரிக்கச் செய்யும் அமிலம் சுரக்கிறது.ஆனால் அதையும் மீறி டைக்ளோபினாக் வலி மருந்துகள் அவற்றையே கொல்லும் சக்தியைப் பெற்றிருக்கின்றன. இது போன்ற மருந்துகள் மனித குலத்தினால் உருவாக்கப்பட்டதாகும்.மனிதர்கள் உருவாக்கிய நாகரிக முன்னேற்றங்களினால் இயற்கை அழிந்து போவதற்கு இது மட்டுமின்றி இது போன்ற உதாரணங்கள் ஏராளமாக கிடக்கின்றன. இதனால்தான் இயற்கை சிறிது சிறிதாக தன்னை புதுப்பிக்கும் சக்தியை இழந்து அழியத் தொடங்கி இருக்கிறது.

இந்த அழிவு ஒருபுறம் இருக்க, மனிதன் இயற்கையைச் சுரண்டுவதில் காட்டும் வேகம், இயற்கையின் மறுசுழற்சி திறனை வெகுவாகக் குறைத்துவிட்டது. காடுகள் அழிக்கப்படுவதால் மழை வளம் குன்றி, நிலத்தடி நீர்மட்டம் அதலபாதாளத்திற்குச் செல்கிறது. தொழிற்சாலை

கழிவுகள் ஆறுகளில் கலப்பதால் நன்னீர் ஆதாரங்கள் விஷமாகின்றன. பிளாஸ்டிக் கழிவுகள் மண்ணில் புதைந்து மண்ணின் வளத்தை மலடாக்குகின்றன. இவ்வாறு, இயற்கையின் ஒவ்வொரு கூறுகளையும் மாசுபடுத்தி, அதன் புதுப்பிக்கும் திறனை நாம் சிதைக்கிறோம்.
சுற்றுச்சூழல் மாசுபாடு என்பது ஒரு சங்கிலித் தொடர் போன்றது. ஒரு பகுதியில் ஏற்படும் பாதிப்பு, மற்ற பகுதிகளையும் பாதிக்கிறது. உதாரணமாக, அமேசான் காடுகள் அழிக்கப்படுவதால் உலகளாவிய காலநிலை மாற்றங்கள் ஏற்படுகின்றன. ஆர்க்டிக் பனி உருகி கடல் மட்டம் உயர்வதால் கடலோர நகரங்கள் மூழ்கும் அபாயம் ஏற்படுகிறது. எனவே, சுற்றுச்சூழல் பிரச்சனைகளை நாம் தனித்தனியாக பார்க்காமல், ஒட்டுமொத்தமாக அணுக வேண்டும்.

இயற்கை தன்னை புதுப்பித்துக் கொள்ளும் ஆற்றலை மீண்டும் பெற நாம் என்ன செய்ய வேண்டும்? முதல் விஷயம், இயற்கையை அழிக்கும் செயல்களை உடனடியாக நிறுத்த வேண்டும். காடுகளை அழிப்பதை தடுத்து, புதிய மரங்களை நட வேண்டும். தொழிற்சாலை கழிவுகளை முறையாக சுத்திகரித்து வெளியேற்ற வேண்டும். பிளாஸ்டிக் பயன்பாட்டை குறைத்து, மறுசுழற்சிக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டும்.

இரண்டாவதாக, நிலையான வளர்ச்சியை நோக்கி நகர வேண்டும். நிலையான வளர்ச்சி என்பது, எதிர்கால சந்ததியினரின் தேவைகளை பூர்த்தி செய்யும் திறனை பாதிக்காமல், தற்போதைய தேவைகளை பூர்த்தி செய்வதாகும். புதுப்பிக்கத்தக்க எரிசக்தி ஆதாரங்களான சூரிய ஒளி, காற்று, நீர் போன்றவற்றை பயன்படுத்த வேண்டும். கரிம விவசாயத்தை ஊக்குவித்து, ரசாயன உரங்கள் மற்றும் பூச்சிக்கொல்லிகளின் பயன்பாட்டை குறைக்க வேண்டும்.

மூன்றாவதாக, சுற்றுச்சூழல் குறித்த விழிப்புணர்வை மக்களிடையே அதிகரிக்க வேண்டும். சுற்றுச்சூழல் பாதுகாப்பு என்பது ஒவ்வொரு தனிமனிதனின் கடமை என்பதை உணர வேண்டும். பள்ளிகள் மற்றும் கல்லூரிகளில் சுற்றுச்சூழல் கல்வி கற்பிக்கப்பட வேண்டும். ஊடகங்கள் சுற்றுச்சூழல் குறித்த தகவல்களை பரப்ப வேண்டும். சுற்றுச்சூழல் ஆர்வலர்கள் மற்றும் அமைப்புகளுக்கு ஆதரவு அளிக்க வேண்டும்.

இயற்கை நமக்கு வாழ்வாதாரத்தை அளிக்கிறது. அதை பாதுகாப்பது நமது கடமை. நாம் ஒவ்வொருவரும் சிறிய மாற்றங்களை செய்வதன் மூலம், இயற்கையின் புதுப்பிக்கும் திறனை மீட்டெடுக்க முடியும். வருங்கால சந்ததியினருக்கு ஒரு ஆரோக்கியமான பூமியை விட்டுச் செல்வோம். இயற்கையோடு இணைந்து வாழ்வோம், இயற்கையை காப்போம்!

**சூழலியல் தமிழர்களின் வாழ்வியல்**

சூழலியல் என்பது இன்று ஒர் அறிவுசார் துறையாக போதிலும் பழந்தமிழர்களிடத்தில் அவ்வாறு இல்லாமல் அது வாழ்வியலாக இருந்துள்ளது. மனிதனுக்கும் இயற்கைக்கும் இடையே உள்ள உறவை சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன. இயற்கையோடு இணைந்து வாழ்ந்திருந்த மக்கள் இயற்கையிலிருந்தே தங்களுக்கு தேவையானதை எடுத்துக் கொண்டனர். இயற்கையை உருமாற்றாலும் சிதைக்காமலும் அவை தருகின்ற பொருள்களை இயந்திரங்கள் செயற்கைப் பொருள்கள் இவையில்லாமல் மனித ஆற்றலினால் தங்கள் வாழ்க்கைக்குத் தேவைப்படுகிற கைவினைப் பொருள்களாக மாற்றி வாழ்வியலை அமைத்துக் கொண்டனர். தமிழர்கள் இயற்கையைப் பற்றிய தெளிவான சிந்தனையையும் அறிவையும் கொண்டிருந்தனர். இடையில் ஊடுருவிய ஆரிய கலாச்சாரம் மற்றும் பிற படையெடுப்புகளினாலே தான் தமிழ் மொழியில் சங்க இலக்கியங்களை அடுத்து எழுதப்பட்ட பிற இலக்கியங்களில் கூடுதலான மிகைப்படுத்தல்களை அங்கங்கு காண முடிகிறது. எனவே சங்க இலக்கியங்களை தமிழரின்

வாழ்வுமுறைகளுக்கான அடிப்படை ஆதாரமாகக் கொள்ளலாம். தமிழர்களின் திணை சார் வாழ்வியலே சூழலியலின் ஆகப்பெரும் அரணாகும்.தன்னைப் போற்றி தன் மண் சார்ந்த வாழ்வியலைப் போற்றி சூழலியலுக்கு தமிழர்கள் மிகச்சிறந்த தொண்டாற்றியுள்ளனர் நம் நிலத்தின் இயற்கை வளம், பல்லுயிரியம், தமிழர்களின் சூழலியற் அறிவு அனைத்தையும் சங்க இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன. இயற்கை நிகழ்வுகள் போகிற போக்கில் பாடல்களின் ஊடே சங்க இலக்கியங்களில் பதிவு செய்யப்பட்டிருக்கின்றன.

**"சூருடை நனந்தலை சுனை நீர் மல்க,**
**பெருவரை அடுக்கத்து அருவி ஆர்ப்ப,**
**கல் அலைத்து இழிதரும் கடுவரற் கான்யாற்றுக்**
**கழைமாய் நீத்தம் காடு அலை ஆர்ப்ப,**
**தழங்கு குரல் ஏறொடு முழங்கி,வானம்**
**இன்னே பெய்ய மின்னுமால் தோழி!**
**வெண்ணெல் அருந்திய வரிநுதல் யானை**
**தண் நறுஞ் சிலம்பின் துஞ்சும்**
**சிறியிலைச் சந்தின வாடு பெருங் காட்டே"**

என்னும் நற்றிணைப் பாடல் இதற்கு கடலொரு துளி சான்றாகும். விரைந்து திருமணம் செய்து கொள்ள வேண்டி பொருள் திரட்ட சென்ற தலைவனின் பிரிவுத் துயரம் தாளாது இருந்த தலைவிக்கு தோழி கூறியதாக இப்பாடல் அமைகிறது. நெற்றியில் வரி பொருந்திய யானை மூங்கில் நெல்லைத் தின்ற காரணத்தால் நறுமணம் கமழும் மலை பக்கத்திலே துயிலும். சிறிய இலையை உடைய சந்தன மரக்காடு வாடி நிற்கும். கார்கால மழை பொழியும் நிலையில் அகன்ற சுனையில் நீர் நிரம்பும்; பெரிய மூங்கில் மூழ்குமாறு வெள்ளம் பெருகும்; அந்த அலைகள் காட்டில் சென்று மோதும். மழை பெய்ய வேண்டி இடி சத்தத்துடன் முழக்கம் செய்யும் முகில்கள் இப்போதே மழை பெய்யும் அறிகுறியாக மின்னிக் கொண்டிருக்கும். இக்காலத்தில் தலைவர் வந்து உன்னை விரைந்து மணந்து கொள்வாராக எனத் தோழி தலைவியைத் தேற்றுவதை நிரம்பிய இயற்கை சூழலுடன் கபிலர் நம் கண் முன் நிறுத்துகிறார். **"சங்கப் பாடல்கள் குறிப்பாக அகத்திணை பாடல் ஒவ்வொன்றும் ஒரு நுண் சூழல் மண்டலத்தை விளக்குவதாக கொள்ளலாம். உரிப்பொருளுக்குரிய பின்னணிக் குறியீட்டினை விளக்கும் இயற்கை காட்சி புனைந்துரைக்கு அப்பாற்பட்டு சூழலியல் விளக்கமாக தோற்றமளிக்கிறது"** என்கிறார் ஆ.அரிமாப்பாமகன். பூகோள மேற்பரப்பு எல்லா இடங்களிலும் ஒரே மாதிரியாக இல்லை என்பது நாம் அறிந்ததே, மலைகள், கடல்கள், ஆறுகள், சமவெளிப் பகுதிகள்,பாலை நிலங்கள் என பலவாறாக விரவிக் கிடக்கின்றன. ஒவ்வொரு பகுதியிலும் அப்பகுதியின் சூழலியலுக்குத் தகுந்தவாறு தாவரங்களும் விலங்குகளும், வேளாண் பயிர்களும் காணக் கிடைக்கின்றன. இவற்றை அடிப்படையாகக் கொண்டே தொல்காப்பியத் தமிழன் திணைகளை வகுத்தான்.திணைகளின் தன்மைகளுக்கேற்ப கருப்பொருள்களை அமைத்தான்.கருப்பொருள்களுக்கேற்ப உரிப்பொருள்களைக் கொண்டு ஒழுக்க விதிகளை வரையறுத்தான். இதிலிருந்து நாம் அறிந்து கொள்வது இயற்கையின் சூழலுக்கேற்ப மனிதன் வாழ்வியல் முறைகளை அமைத்துக் கொள்வது சூழலியலுக்கு நாம் தருகின்ற முதல் பாதுகாப்பாக இருக்கும் என்பதேயாகும்.இதனைத் தான் தொல் தமிழ் குடி செய்திருக்கிறது.அதனால் தான் திணை ஒழுக்கமும்,முதல்,கரு மற்றும் உரிப் பொருள்களும் சூழலியலின் மூலங்களாக இருக்கின்றன.மக்கள் நிலங்களுக்கு தகுந்தவாறு தங்கள் வாழ்வியல் முறைகளை அமைத்துக் கொண்டனர்.ஒவ்வொரு திணைக்கும் ஒவ்வொரு சமூகப்பொருளாதர அடையாளம், வாழ்க்கை முறை, உணவுப் பழக்க வழக்கங்கள் இருந்தது. அகப்பொருள் இலக்கணத்தில் முதன்மையாக இருப்பதும் இந்த சூழலியல் வாழ்வியலேயாகும்.

**முடிவுரை**

சங்க இலக்கியங்களில் மூழ்கி அதை நோக்கும் போது இயற்கையைத் தமிழ் சமூகம் அளவிற்கு புரிந்து கொண்டவர்கள் எவரும் இருப்பதாகத் தோன்றவில்லை என்றே கூறலாம். உலகில் தோன்றிய நாகரிகங்களான சிந்து சமவெளி நாகரிகம், நைல் நாகரிகம்,சுமேரிய நாகரிகங்கள் ஆகியவை சடங்குகளையும், வழிபாடுகளையும் அடிப்படையாக வைத்து வளர்ந்தவை.ஆனால் தமிழ் நாகரிகம் ஒன்றே தனக்கென ஒரு அறிவு சார்ந்த சூழலியல் வாழ்வைக் கொண்டிருந்தது. பல்லுயிரின வளமே சூழலியலின் ஆதாரமாகும். சங்க இலக்கியப் பாடல்கள் ஒவ்வொன்றும் ஏராளமான பறவைகள், விலங்குகள், தாவர இனங்களை நமக்கு அடையாளப்படுத்துகின்றன. இது தமிழ் நிலத்தின் பல்லுயிரினக் சூழலைத் தெளிவுபடுத்துகிறது. பல்லுயிரினச் சூழல் வளமாக இருந்தால் இருந்தால்தான் இயற்கையும் உயிர் வாழிட மண்டலமும் இயல்பாக இருக்கும். இந்த பேருண்மையை புரிந்து கொண்டு சூழலியலைப் போற்றி பாதுகாப்போம்.

**குறிப்புகள்**

1. நக்கீரன், தமிழ் ஒரு சூழலியல் மொழி, காடோடி பதிப்பகம்,நன்னிலம்,திருவாரூர் - 610 105, பக்.120
2. சு.பாரதிதாசன், பிணத்திண்ணி கழுகுகள் - மதிப்பீடும் அழிவும் ஓலைச்சுவடி, கலை இலக்கிய சூழலிய இதழ், நவம்பர் 15, 2021.
3. நற்றிணை பாடல் எண்.7,உரை முனைவர் கதிர்.மகாதேவன், கோவிலூர் மடாலயம்,கோவிலூர் - 630 307.
4. ஆ.அரிமாப்பாமகன், சங்க இலக்கியத்தில் சூழலியல்,இராசகுணா பதிப்பகம்,தீரன் நகர்,திருச்சி - 620 009. பக். 56

**References:**

1. Nakkheeran, Tamil as an Ecological Language, Kadodi Publishing House, Nannilam, Thiruvarur – 610 105, p.120
2. Su. Bharathidasan, Carcass Vultures - Evaluation and Destruction, Paperback, Art Literature Ecology Magazine, November 15, 2021.
3. Natrinai Song No.7, Text by Dr. Kathir. Mahadevan, Kovilur Monastery, Kovilur – 630 307.
4. A. Arimapamagan, Ecology in Sangam Literature, Irasakuna Publishing House, Theeran Nagar, Trichy – 620 009. p. 56





Tamilmanam International Research Journal of Tamil Studies
தமிழ்மணம் சர்வதேசத் தமிழ் ஆய்வு இதழ் ISSN: 3049-0723 (Online)
A monthly peer-reviewed online multi-disciplinary Tamil journal

Volume 1, No. 09, June 2025

# The Allusions of kurunthogai songs

**C. Muniyandi[1], Dr. S. Sudha[2]**

*1.Full-time PhD Researcher, Registration No.: BUD2010630420,*
*Government Arts College (Autonomous), Karur-639 005. Bharathidasan University*
*Affiliated – Tiruchirappalli, Tamil Nadu, India.*
*2.Research Supervisor:Associate Professor, Government Arts College (Autonomous),*
*Karur-639 005. Bharathidasan University Affiliated – Tiruchirappalli.*

**Abstract:**

The poets of the Sangam period, while composing their songs, used allusions in their songs. They used many subtle techniques in it. Moreover, they used allusions, similes, symbols, etc. to understand the allusions in the songs. The feelings of the hero, heroine, and friend are revealed through allusions. The poets used allusions like nature, animals, and birds in their songs. The Sangam poets used allusions about the social, political, economic, and cultural events of their time in a subtle way**Keywords:** culture, proverbs, legends, beliefs

**Key words**: *Sangam period, Allusions, Similes, Symbols, Nature, Animals, Birds, Social, Political Econimic.*

# குறுந்தொகைப் பாடல்களில் குறிப்புப் பொருள்

**சி.முனியாண்டி[1], முனைவர்.சா.சுதா[2]**

1.**முழு நேர முனைவர் பட்ட ஆய்வாளர்**, பதிவு எண்:BUD2010630420,
அரசு கலைக் கல்லூரி (தன்னாட்சி), கரூர்-639005. பாரதிதாசன் பல்கலை கழகம்
இணைவு பெற்றது – திருச்சிராப்பள்ளி, தமிழ்நாடு, இந்தியா
2. **ஆய்வு நெறியாளர்**, இணைப்பேராசிரியர், அரசு கலைக் கல்லூரி(தன்னாட்சி),
கரூர்-639005. பாரதிதாசன் பல்கலை கழகம் இணைவு பெற்றது – திருச்சிராப்பள்ளி.

**ஆய்வுச்சுருக்கம்:** சங்க காலப் புலவர்கள், தங்களது பாடல்களை இயற்றும் போது, பாடல்களில் குறிப்புப் பொருளைக் கையாண்டுள்ளனர். அதில் பல நுட்பமான உத்திகளைக் பயன்படுத்தியுள்ளனர். மேலும், பாடல்களில் உள்ள குறிப்புகளைப் புரிந்து கொள்வதற்கு, உள்ளுறை, உவமம், இறைச்சி, குறியீடு போன்றவற்றை பயன்படுத்தியுள்ளனர். தலைவன், தலைவி, தோழி போன்றோரின் உணர்வுகள் குறிப்புப் பொருள் மூலம் வெளிப்படும். புலவர்கள் தங்கள் பாடல்களில் இயற்கை, விலங்குகள், பறவைகள் போன்ற உவமைகளைப் பயன்படுத்தியுள்ளனர். சங்கப் புலவர்கள், தங்கள் காலத்தின் சமூக, அரசியல், பொருளாதார மற்றும் கலாச்சார நிகழ்வுகளைப் பற்றி குறிப்புப் பொருளில் நுட்பமாக் கையாண்டுள்ளனர்.

**குறிப்புச்சொற்கள்:** *சங்க காலம் - குறிப்புப் பொருள் – உள்ளுறை – உவமம் – குறியீடு – இயற்கை – விலங்குகள் – பறவைகள் – சமூகம் – அரசியல் - பொருளாதாரம்*

## முன்னுரை:

பாடல் செய்வோர் தம்பாடல்களைச் சுவையுடையனவாக ஆக்குவதற்கும் பல உத்திகளைக் கையாளுவர் அவ்வுத்திகளுள் தலையாயது உவம உத்தி எனலாம். சங்ககாலப் புலவர்கள் உவம உத்திகளையக் மிகச் சிறப்பாகக் கையாண்டு தம் பாடல்களைச் சுவையுடையனவாக ஆக்கியுள்ளனர். மேலும் அவர்கள் பாடல்களைச் சுவையுடையவனாக உவமத்தோடு தொடர்புடைய உள்ளுறை உவமை, இறைச்சி எனினும் வேறு சில உத்திகளையும் கையாண்டுள்ளனர். பாடலின் பொருளை நேரிடையாகத் தெரிந்து கொள்ளும் முறையில் உவமைகளைக் கையாண்ட அப்புலவர்கள், உள் பொருள் வைத்தும் பாடல் செய்தனர். வெளிப்படையாக ஆக்காமல் உள் பொருள் வைத்துப்பாடும் உத்திமுறையையே குறிப்புப் பொருள் உத்தி என அழைக்கிறோம். அக்குறிப்புப் பொருள் உத்தியுள் அடங்குவனவே உள்ளுறை படிவமும் இறைச்சியுமாகும்.

## உள்ளுறை உவமம் - விளக்கம் :

உவமம் வேறு உவமிக்கப்படும் பொருள் வேறு என்று தோன்றாத முறையில் செய்யப்படும் உவமையை உள்ளுறை உவமம் என்கின்றனர். இதனைத் தொல்காப்பியர்,

**"பிறிதொடு படாஅ பிறப்பபொடு நோக்கி**
**முன்னை மரபிள் கூறுங் காலைத்**
**துணிவொடு வரூஉம் துணிவினோர் கொளினே"**[1]

(தொல்காப்பியம் பொருளாதிகாரம்)

என்றார். அதாவது உவமத்தோற்றத்திலேயே உவமிக்கப்படும் பொருளையும் இயைத்துக் கானும் முறையில் உள்ளுறை உவமை அமையும் என்கிறார். "வெளிப்பபடையாக இல்லாததால் நுணுகிப் படிப்போர்க்கே உள்ளுறை உவமம் புலப்படும் என்றும் தொல்காப்பியர் தெரிவித்துள்ளார்.

## இறைச்சி:

குறிப்பாகப் பொருளைப் பெற வைக்கும் இலக்கிய உத்தியை இறைச்சி எனக்கூறினர். பாடலடிகளில் வெளிப்படையாக ஒரு பொருள் தோன்றும். அப்பாடலடிகளுள் மறைவாக ஒரு பொருள் தங்கி இருக்கும். அவ்வாறு தங்கி இருக்கும் மறைபொருளைத்தான் இறைச்சி என்றனர். இறைச்சிப் பொருள், பாடலுள் பயின்று வரும் கருப்பொருள் வருணனைகளில்தாம் மறைந்து இருக்கும். அதைக் கற்று வல்லவர்களே தெரிந்து அனுபவிக்கமுடியும். இந்த உண்மையைத் தொல்காப்பியர்,

**“இறைச்சி தானே பொருள்புறத் ததுவே”**[2] (தொல்காப்பியம் பொருளாதிகாரம்)

என்றும்

**“இறைச்சியில் பிறக்கும் பொருளுமா ருளவே**
**திறத்தியில் மருங்கின் தெரியு போர்க்கே”**[3] (தொல்காப்பியம் பொருளாதிகாரம்)

-என்றும்

## குறிப்புப் பொருள் உத்தி :

நூற்பாக்களில் தெரிவித்துள்ளார். மொத்தத்தில் உள்ளுறை உவமும் இறைச்சியும் வெளிப்படையாகவும் பொருளை வெளிப்படுத்தாமையால் அவற்றைக் குறிப்புப் பொருள் உத்தி எனக் கொள்கிறோம். அக்குறிப்புப் பொருள் உத்தியைக் குறுந்தொகைப் புலவர்கள் தம்பாடல்களில் கையாண்டிருக்கும் அழகினை இனிக் காணலாம்.

## உள்ளுறை உவமம் :

ஆலங்குடி வங்கனார் என்ற புலவர், பரத்தமை ஒழுக்கத்தை மேற்கொண்ட தலைவன் ஒருவனின் நாட்டின் வளத்தைக் கூறும்போது உள்ளுறை உவமையைக் கையாண்டுள்ளார். காதற் பரத்தையோடு தலைவன் வாழும்போது அவள் சொன்னபடியெல்லாம் வாழ்ந்தானாம். அப்படி வாழ்ந்தவன் அவன் வீட்டிற்குப் போய் அவன் தலைவியோடு வாழும் போது அவள் ஆட்டிய ஆட்டத்திற்கெல்லாம் ஆடினானாம். கையும் காலும் தூக்கத் தூக்கும் ஆடிப்பாவைப் போல தலைவி ஆட்டுவித்தபடியெல்லாம் தலைவன் ஆடினானாம். அவ்வாறு ஆடும் தலைவன் நாடோ, வயல் வளம் மிகுந்ததாம். வயல் ஒரங்களில் மாமரங்கள் வளர்ந்து காய்த்து தாமே! கனிகளை உதிர்க்கின்றவாம். தாமே உதிர்ந்த அக்கனிகளை வயல்களில் வாழும் வாளைமீன்கள் கவ்வி எடுத்து உண்ணுகின்றவாம். அத்தகைய வளம் செறிந்த கனிகளை உடைய நாட்டிற்குத் தலைவன் அவன் என்பது பாடல். இப்பாடலில் வாளை மீனைப் பரத்தையாகவும், தானே உதிர்ந்த கனியைத் தலைவனாகவும் வந்து விழுந்த பழத்தை மீன் உண்பது தன்னை நாடி வந்த தலைவனின் பரத்தை அனுபவிப்பது போலவும் கற்பனை செய்து பாடியிருக்கும் அழகைக் காண்கிறோம். பலவகை இன்பத்தையும் வருந்தாமலே பெறுவர் என்பதைப் புலப்படுத்தி நிற்றலால் இதனை உள்ளுறை உவமம் என்கிறோம்.

**“கழனி மாஅத்து விளைந்து உகுதீம்பழம்**
**பழன வாளை கதூஉம் ஊரன்”[4].** (குறுந்தொகை பாடல் -8)

## குறிப்புப்பொருள்:

கயமனார் என்ற புலவர் பரத்தையரிடம் கூடிக் குலாவிப் பொழுதைக் கழித்துவிட்டு வரும் தலைவன் ஒருவனுடைய இயல்யை மிக அழகாகக் குறிப்புப் பொருள் உத்தியில் காட்டியுள்ளார். அத்தலைவன் பரத்தை வீட்டிலிருந்து தன் மனைவி வாழும் தன் இல்லத்திற்கு வருகிறான். அவனைத் தலைவி எப்படி வரவேற்பாளோ என்று தயங்கித் தோழியிடம் சென்று தலைவியின் நிலையைத் கேட்கிறான். அதற்கு அவள் தலைவன் பரத்தமையை மறந்து தலைவனை ஏற்றுக்கொள்ளும் கற்புச் செல்வியாக இருக்கிறாள் எனத் தெரிவிக்கிறான்.

அப்போது தலைவனுடைய நாட்டுவளத்தைச் சுட்டிப் பாடுகிறாள். அந்தத் காட்சிக்குள் குறிப்புப் பொருள் இடம்பெறுமாறு பாடியுள்ளார் புலவர். அவ்வடிகள் வருமாறு

**“பாசடை நிவந்த கணைக்கால் நெய்தல்**
**இளமீன் இருங்கழி யோத மல்குதொறும்**
**கயமூழ்கு மகளிர் கண்ணின் மானும்**
**தண்ணந் துறைவன்"[5]** (குறுந்தொகை பாடல் -9)

பசுமையான இலைகளுக்கு ஊடே உயர்ந்து நிற்கும். காம்போடு கூடிய நெய்தல் மலர், மீன்கள் நிறைந்து வாழும் உப்பங்கழி நீரில் நிமிர்ந்து நிற்கிறது. அது வெள்ளம் அதிகமாகும் போதெல்லாம் அது உயர்ந்து தலைகாட்டும். அவ்வாறு அது காட்டும் அழகுக்காட்சியானது அந்த நீர்த்துறையில் மூழ்கி எழும் மகளிரின் கண்போல் அவ்வப்போது தோன்றும் என்கிறார் புலவர். இதில் உப்பங்கழியிலுள்ள நெய்தல் மலர் குளிக்கும் மகளிர் கண்ணை ஒக்கும் என்ற உவமை உள்ளது. அதோடு மட்டுமல்லாமல் சிறப்பில்லாத பரத்தையரும் சிறப்புடைய தலைவி போல் தோன்றுகின்றனரே என்று குத்திக் காட்டும் குறிப்புப் பொருள் இருப்பதையும் காண்கிறோம். காமவெறியில் தராதரம் பார்க்கத் தெரியாத தலைவனின் சிறுமையை யல்லவா இவ்வாறு காட்டியுள்ளார்.

ஓரம்போகியார் என்ற புலவர் ஒரு வருனணையுள் குறிப்புப் பொருளை இடம் பெற வைத்துள்ளார். அவர் பாடிய பாடலில் உழுது கொண்டிருக்கும். உழவர்கள் உழுவுத் தொழிலின் போது தாம் செல்லும் வழியிலுள்ள காஞ்சி மரத்தின் கிளைகளை வளைக்கின்றனர்; வளைத்து உயரே விடும் போது அக்கிளைகளிலுள்ள மலர்களின் மகரந்தங்கள் உதிர்ந்து அவர்கள் உடல்மேல கிடக்கின்றன. உடல் மேல கிடக்கும் அம்மகரந்தங்கள் இவர்கள் காஞ்சி மரத்தின் கிளைகளை வளைத்திருக்கிறார்கள் என்பதற்கு அடையாளமாவன போல் தலைவன் மார்பில் பூசப் பெற்றிருக்கும் சந்தனம் முதலிய பொருள்கள் இவன் பரத்தையரோடு கூடிக் குலாவி விட்டு வந்திருக்கிறான் என்பதற்கான அடையாளங்கள் எனக் குறிப்பாக தெரிவிக்கிறார். அப்பாடல் அடிகள் வருமாறு

**“பயறுபோல் இணர பைந்தாது படீஇயர்**
**உழவர் வாங்கிய கமழ்பூ மென் சினைத்**
**காஞ்சி யூரன் கொடுனம்”.**[6] (குறுந்தொகை பாடல் -10)

கீழ்வரும் கபிலர் பாடலில் குறிப்புப் பொருள் சிறப்பாக அமைந்துள்ளமையை உணர்கிறோம். அப்பாடல்

**“வேரல் வேலி வேர்க்கோட் பலவின்**
**சாரல் நாட செவ்வியை யாருமதி**
**யார்ஃது அறிந்திசி னோரே சாரற்**
**சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கியாங்கிவள்.**
**உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே”.**[7] (குறுந்தொகை பாடல் -18)

தோழி இரவுக்குறி வந்து போகும் தலைவனைப் பார்த்து, அவன் விரைந்து வந்து மணஞ்செய்து கொள்ளவேண்டும் என்று கேட்பது போல் பாடலமைந்துள்ளது.

தலைவன் மலை நாட்டைச் சார்ந்தவன்; அவன் நாட்டின் வேர்ப்பலா உள்ளது; வேர்ப்பலாவுக்கு வேலியாக முங்கில்கள் வளர்ந்து பாதுகாப்புத் தருகின்றன. அந்த மலைநாட்டுத் தலைவனை தலைவி காதலிக்கிறாள். அவள் காதல் மிகுதிப்படத் தலைவனை மணந்துவாழத் துடிக்கிறாள். அவள் நிலையைப் புரிந்துகொள்ளாத தலைவன் கள்ளத்தனமாக வந்து அவர் காதல் தாபத்தை மிகுதியாக வளர்த்துவிட்டு

போய்க் கொண்டிருக்கிறான். அதைக் கண்ட தோழி, அவனைச் சந்தித்து அவன் தலைவியை விரைந்து வந்து மணத்து கொள்ள வேண்டும் என்றும், இல்லாவிட்டால் காதல் நோயால் அவள் இறந்து படவும் கூடும் என்கிறார். அப்போது, தோழி தலைவனிடம், 'சிறுகொம்பில் பெரிய பலாபழம் பழுத்து தொங்குவது போல், அவள் பெரிய காமம் சிறிய உயிரில் ஊசலாடிக் கொண்டிருக்கிறது' என்றாள். இப்பாடலில் பெருகிய காதலோடு தவிக்கும் தலைவியின் பரிதாப நிலையைக் குறிப்புப் பொருள் படக் காட்டியிருக்கிற அழகு உள்ளது.

அதாவது, வேரல் வேலி வேர்க்கோட்பலவினை உடைய மலை நாட்டுக்குத் தலைவன் என்பதில் தலைவன் நாட்டுப் பலாவோ வேர்ப்பலா; அதுபழுத்து விழுந்தாலும் அது வேரில் இருப்பதால் அதற்குச் சேதம் ஏற்படாது; மேலும் அதற்கு இயற்கைப் பாதுகாப்பு இருக்கிறது. மூங்கில்கள் வேலி போல் அமைந்து பழத்தைப் பாதுக்காவும் செய்கின்றன. இந்த மாதிரியான பலாவையும் பழத்தையும் வேலியையும் இயற்கையான பாதுகாப்பையும் கண்டு பழகிய தலைவனுக்கு தலைவியின் நிலைபுரியாததுதான் என்கிறார்.

தலைவியின் நிலை எத்தகையது! முங்கில் வேலி போன்ற இயற்கை பாதுகாப்பில்லாத ஓர் இடத்தில், கிளைகளில் மெல்லிய காம்பில் பெரிய பழத்தைத் தாங்கி நிற்கும் மரம் போன்றது அவள் நிலை. பாதுகாப்பும் இல்லை', பழமும் பெரிது அப்பழமும் வேரில் பழுக்காமல் கொம்பில் பழுத்துச் சிறிய காம்பில் தன்னைப் பினைத்துக் கொண்டிருப்பது. அதனால் எந்த நேரத்திலும் பழம் உதிர்ந்து கிழே விழுந்து சிதறலாமல்லவா? அதுபோல் காமம் மிகுதியால் பிரிவுத்துன்பம் தாங்க முடியாமல் அவள் சிறிய உயிர் பிரிந்து போய் விடலாமல்லவா? பாதுகாப்பில்லாத நிலை, பிறர் வந்து பழத்தை எடுத்துப் போக வாய்ப்பை உண்டாக்குவது போல தலைவன் மணந்து கொள்ள காலந்தாழ்த்துவதால் இடைப்பட்ட காலத்தில் பிறர் வந்து அவளைப் பெண் கேட்கக் கூடுமல்லவா? தன் தலைவனல்லாத வேறொருவன் பெண் கேட்க வந்தால் அவள் உயிரோடு இருக்கமாட்டாளே! - இவ்வாறு பலவிதமான பொருள் சிறப்பை யெல்லாம் தருமாறு கபிலர் இப்பாடலை அமைத்துள்ளார்.

கபிலர் மற்றுமொருபாடலில், தலைவி தோழியிடம் கூறுவதுபோல் அமைத்துள்ள இடத்தில் குறிப்புப் பொருள் வைத்துப் பாடியுள்ளார். அதாவது தலைவன் கள்ளத்தனமாக வந்து தலைவியைச் சந்தித்துக் காதலுணர்வைப் பெருகச் செய்து கொண்டிருக்கிறான். அவனுக்கும் அவளுக்கும் இடையே உள்ள காதல் ஒழுக்கமோ பிறர் எவர்க்கும் தெரியாது. அவர்கள் இருவரும் காதலிப்பது யாருக்கும் தெரியாததால் அவர்கள் காதலுக்குச் சாட்சியுமில்லை. அவர்கள் கள்ளத்தனமாகச் சந்திக்குமிடத்தில் யாரும் இல்லை. பக்கத்தில் ஒரு குருகு மட்டும் நீரோடும் வாய்க்கால் அருகே நின்று கொண்டு இருந்தது. நீரில் ஆரல் மீன் எப்போது வரும் என்று குறிபார்த்து கொண்டி இருக்கிறது ஒருக்கால் அவன் இவளைக் காதலிக்கவில்லை என்று சொன்னால் சாட்சி சொல்ல யாருமில்லையே என்கிறாள். அப்போது குருகு இருந்தது என்கிறார். ஓழுகு நீர் ஆரல் பார்க்கும் குருகு என்ற தொடர் மூலம் அந்தக் குருகும் சாட்சி சொல்ல முடியாத நிலையலுள்ளது என்பது குறிப்புப் பொருளாகும். எப்படியென்றால் அக்குருகுமும் ஆரல் மீனைப் பார்த்துக் கொண்டி நின்றதே யொழிய இவர்களை பார்த்து கொண்டிருந்ததாக எப்படிச் சொல்லமுடியும்?. என்ற குறிப்புப் பொருளை உண்டாகிகியுள்ளார் எனலாம்.

**“யாரும் இல்லைத் தானே கள்வன்**
**தானது பொய்ப்பின் யானெவன் செய்கோ**
**தினைத்தாள் அன்ன சிறுபசுங் கால**
**ஒழுகுநீர் ஆரல் பார்க்கும்**
**குருகும் உண்டுதான் மணந்த ஞான்றே.”**[8] (குறுந்தொகை பாடல் - 25)

பாலைபாடிய பெருங்கடுங்கோ என்பவர் ஒரு காதல் ஓவியம் வரைந்துள்ளார். அதில் தோழி, தலைவி பிரிவாற்றாமையில் வருந்தும்போது அவளுக்கு ஆறுதல் சொல்லுவதுபோல் உள்ளது. தலைவன் தலைவியிடம் பொருள்தேடி வருவதாகச் சொல்லிவிட்டுத் தலைவியைப் பிரிந்து வெளிநாடு சென்றுவிட்டான். அவனை வழியனுப்பி வைத்து வீட்டு வீட்டிலிருக்கும் தலைவிக்கோ தலைவனைப் பற்றிய எண்ணம் வந்து துன்பம் செய்கிறது. அவன் சென்ற காட்டையும் பாதையையும் எண்ணி எண்ணி வருந்துகிறாள். அவள் துன்பத்தைக் கண்டதோழி அவளுக்கு ஆறுதல் சொல்லும் பொருட்டுத் தலைவன் சென்ற வறண்ட காட்டின் இயல்பைச் சொல்கிறாள். அவர் சென்ற சுரத்தில் 'செங்காற் பல்லி தன் துணையைக் கூப்பிட்டுக் கொண்டிருக்கும்'. அதாவது.

**“செங்காற் பல்லி தன்துணை பயிரும்**
**அங்காற் கள்ளியிங் காடிறந் தோரே"**[9] (குறுந்தொகை பாடல் 16) - என்கிறாள்.

'இந்த அடிகளில் தன் துணையை அழைக்கும் பாலை நிலம் என்பதால், அதை பார்த்த தலைவன், "தலைவியை நினைப்பான்; மீண்டும் விரைவில் வருவான்" என்ற குறிப்பைப் புலவர் பெற வைக்கிறார். பல்லிகளின் தாம்பத்திய வாழ்கை தலைவனைத் தாம்பத்திய வாழ்க்கைக்கு விரைந்து அனுப்பி வைக்கும் என்பது குறிப்பாகும்.

## முடிவுரை:

இவ்வாறு சங்ககாலப்புலவர்கள் தம் பாடல்களின் குறிப்புப் பொருள் வைத்துப் பாடித் தம் பாடல்களைச் சுவைப் படுத்தியுள்ளனர்.

## துணைநூற்பட்டியல்:

[1] இளம்புறனார் - கழக வெளியீடு தொல்காப்பியம் பொருள் அதிகாரம், சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகம், ஆழ்வார்பேட்டை, சென்னை - 600 018.

[2] டாக்டர். உ.வே. சாமிநாத ஐயர் - குறுந்தொகை, மூலமும் உரையும், சாமிநாத ஐயர் நூல் நிலையம், பெசன்ட் நகர், சென்னை - 600090.

[3] முனைவர். இரா.அறவேந்தன் - குறுந்தொகை, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், அம்பத்தூர், சென்னை - 600 050.

[4] முனைவர். கு.வெ பாலசுப்பிரமணியன் - தமிழில் அகமும் புறமும், உமா நூல் வெளியீட்டகம், மருத்துவக் கல்லூரி சாலை, தஞ்சாவூர் - 613 004.

[5] முனைவர். கு.வெ பாலசுப்பிரமணியன் - சங்க இலக்கிய ஆய்வுகளின் மதிப்பீடு, தமிழ் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் - 613 010.

**Reference:**

**[1]** Ilampuranar - Publication of Tholkappiyam Material Authority Saiva Siddhanta Book Publishing Association, Alwarpet, Chennai - 600 018

**[2]** Dr. U.V. Saminatha Iyer - Kurunthogai, Source and Text Saminatha Iyer Library, Besant Nagar, Chennai - 600090

**[3]** Dr. I. Aravendan – Kurunthogai, New Century Book House, Ambattur, Chennai - 600 050.

**[4]** Dr. K.V. Balasubramanian – Tamilil agamum puramum, Uma Book Publishing House, Medical College Road ,Thanjavur - 613 004.

**[5]** Dr. K.V. Balasubramanian - Evaluation of Sangam Literature Studies, Tamil University, Thanjavur - 613 010.

தமிழ்மணம் சர்வதேசத் தமிழ் ஆய்விதழ்
**Tamilmanam International Research Journal of Tamil Studies | ISSN(o): 3049-0723**
[Impact Factor: 9.47] Monthly, Peer-Reviewed, Refereed, Indexed Journal with IC Value : 86.87
**Volume - 1, Issue - 09, June - 2025**



DOIs: https://doi.org/10.63300/tm0109202504 --:-- Research Paper

# Cultural messages of the people of Marudathina in Ettuthogai

**[1] K. Nisha, [2] Dr. R. Subramani,**
[1] PhD Research Scholar (Full Time), Registration No.: BDU 2110632779683, Government Arts College (Autonomous) Affiliated to Bharathidasan University, Karur - 639005
[2] Associate Professor, Department of Tamil Studies, Government Arts College (Autonomous) Affiliated to Bharathidasan University, Karur - 639005

***Abstract:*** *Literatures serve as a powerful mirror, reflecting the intricate social and cultural landscapes of the eras in which they are created. A fundamental characteristic of literature is its dynamic nature, evolving organically in response to its environment and the passage of time. It acts as a vessel, carrying and revealing the cultural heritage of a society, offering insights into its values, anxieties, and aspirations.The customs, beliefs, and practices of a community are deeply rooted, often tracing back to the dawn of humanity itself. As humans transitioned from nomadic existence to settled communities, the family unit formed the bedrock of a stable human society. Within these nascent societies, individual customs and beliefs gradually permeated the collective consciousness, shaping the cultural fabric.The ancient Tamil civilization stands as a testament to this process, representing one of the oldest known civilizations in human history. Within Tamil Nadu, the Marutha people, inhabitants of fertile agricultural lands, developed a unique set of customs and beliefs that were integrally linked to their environment and way of life. This article delves into the rich tapestry of Marutha culture, exploring its multifaceted aspects across eight comprehensive volumes. It aims to provide a detailed examination of the traditions, rituals, social structures, and worldview that characterized the Marutha people and contributed to the vibrant mosaic of Tamil civilization. By understanding the Marutha culture, we gain a deeper appreciation for the complexities and enduring legacy of ancient Tamil society. Just as man began to settle and coalesce into family units, solidifying societal structures, so too did their customs and beliefs solidify, permeating every facet of their existence. The influence of the Marutha people and their contribution warrant a thorough and respectful examination*

***Key Words:*** *Customs, beliefs, family, civilization, society*

# எட்டுத்தொகையில் மருதத்திணை மக்களின் பண்பாட்டுச் செய்திகள்

**[1] க. நிஷா, [2] முனைவர் இரா. சுப்ரமணி,**
[1] முழுநேர முனைவர் பட்ட ஆய்வாளர், பதிவு எண்: BDU 2110632779683 அரசு கலைக் கல்லூரி (தன்னாட்சி) பாரதிதாசன் பல்கலை கழகம்
இணைவு பெற்றது, கரூர்-639005
[2] இணைப்பேராசிரியர், தமிழாய்வுத் துறை, அரசு கலைக் கல்லூரி (தன்னாட்சி) கரூர்-639005

**Abstract:** *இலக்கியங்கள் ஒரு சக்திவாய்ந்த கண்ணாடியாகச் செயல்படுகின்றன, அவை உருவாக்கப்பட்ட காலங்களின் சிக்கலான சமூக மற்றும் பண்பாட்டு இயல்புகளைப் பிரதிபலிக்கின்றன. இலக்கியத்தின் ஒரு அடிப்படைப் பண்பு என்னவென்றால், அதன் இயங்கும் தன்மைதான்; இது அதன் சூழலுக்கும் காலத்தின் ஓட்டத்திற்கும் ஏற்ப இயற்கையாகவே வளர்ந்து வருகிறது. இது ஒரு கலனாகச் செயல்பட்டு, ஒரு சமூகத்தின் பண்பாட்டு மரபைச் சுமந்து, வெளிப்படுத்தி, அதன் விழுமியங்கள், கவலைகள் மற்றும் அபிலாஷைகள் குறித்த நுண்ணறிவுகளை வழங்குகிறது. ஒரு சமூகத்தின் பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள் மற்றும்*

*நடைமுறைகள் ஆழமாக வேரூன்றியவை, இவை பெரும்பாலும் மனிதகுலத்தின் விடியலுக்கே பின்னோக்கிச் செல்கின்றன. மனிதர்கள் நாடோடி வாழ்க்கையிலிருந்து நிலையான சமூகங்களாக மாறியபோது, குடும்ப அமைப்பு ஒரு நிலையான மனித சமூகத்தின் அடித்தளமாக அமைந்தது. இந்த ஆரம்ப சமூகங்களுக்குள், தனிப்பட்ட பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும் படிப்படியாக கூட்டு மனசாட்சியில் ஊடுருவி, பண்பாட்டு அமைப்பை வடிவமைத்தன. பண்டைய தமிழ் நாகரிகம் இந்தச் செயல்முறைக்கு ஒரு சான்றாக நிற்கிறது, இது மனித வரலாற்றில் அறியப்பட்ட பழமையான நாகரிகங்களில் ஒன்றாகும். தமிழ்நாட்டிற்குள், வளமான வேளாண் நிலங்களில் வசிப்பவர்களான மருத நில மக்கள், தங்கள் சூழலுடனும் வாழ்வியல் முறையுடனும் பிரிக்கமுடியாமல் இணைக்கப்பட்டிருந்த தனித்துவமான பழக்கவழக்கங்களையும் நம்பிக்கைகளையும் வளர்த்தெடுத்தனர். இந்தக் கட்டுரை எட்டு விரிவான தொகுதிகளில் மருதப் பண்பாட்டின் வளமான அமைப்பை ஆழமாக ஆராய்கிறது, அதன் பல்வகைப்பட்ட அம்சங்களை ஆய்ந்து வெளிப்படுத்துகிறது. இது மருத மக்களைத் தனித்துவப்படுத்திய மரபுகள், சடங்குகள், சமூகக் கட்டமைப்புகள் மற்றும் உலகக் கண்ணோட்டம் ஆகியவற்றின் விரிவான ஆய்வை வழங்குவதை நோக்கமாகக் கொண்டுள்ளது, இவை தமிழ் நாகரிகத்தின் செழுமையான பன்முகத்தன்மைக்கு பங்களித்தவை. மருதப் பண்பாட்டைப் புரிந்துகொள்வதன் மூலம், பண்டைய தமிழ் சமூகத்தின் நுணுக்கங்களையும் நீடித்த பாரம்பரியத்தையும் இன்னும் ஆழமாகப் புரிந்துகொள்கிறோம். மனிதன் குடியேறி குடும்ப அலகுகளாக ஒன்றிணைந்து, சமூகக் கட்டமைப்புகளை உறுதியாக்கியது போலவே, அவர்களின் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும் உறுதியடைந்து, அவர்களின் வாழ்வின் ஒவ்வொரு அம்சத்திலும் ஊடுருவின. மருத மக்களின் தாக்கமும் அவர்களின் பங்களிப்பும் ஒரு முழுமையான மற்றும் மரியாதைக்குரிய ஆய்வுக்குத் தகுதியானது.*

***குறிப்பு சொற்கள்*** *: பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள், குடும்பம், நாகரிகம், சமுதாயம்.*

**முன்னுரை:**

இலக்கியங்கள் அவ்வக்காலச் சமுதாயப் பண்பாட்டு நிலைகளை வெளிப்படுத்துவனவாக அமைகின்றன. இயல்புப்போக்கிற்கேற்ப உருப்பெறுவதும் காலப்போக்கிற்கேற்ப மாறுபடுவதும் இலக்கியத்தின் அடிப்படையான பண்பாகும். சமூகத்தின் பண்பாட்டு மரபினை அறிவிக்கவல்லன. அச்சமுதாயத்தின் பழக்கவழக்கங்கள் நம்பிக்கைகள் ஆகியவை மனிதன் தோன்றிய தொன்மைக் காலம் தொட்டே சில பழக்கவழக்கங்களையும் நம்பிக்கைகளையும் கொண்டிருந்தனர். மனிதன் ஓரிடத்தில் நிலையாகத் தங்கிக் குடும்பமாக வாழத் தொடங்கினான். அது ஒரு நிலையான மனித சமுதாயத்தைத் தோற்றுவித்தது. அக்காலம் தொட்டே தனிமனித வாழ்வில் இருந்த பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும் ஊடுருவலாயின. பண்டையத் தமிழர்களிடையே காணப்பட்ட பண்பட்ட நாகரிகம் மனித வரலாற்றில் மூத்த நாகரிமாகத் திகழ்கிறது. தமிழகத்தில் மருத நில மக்கள் பல்வேறு பழக்கவழக்கங்களையும் நம்பிக்கைகளையும் கொண்டிருந்தன. எட்டுத்தொகையில் மருத நில பண்பாட்டுச் செய்திகளைப் பற்றி பேசுவதாக இக்கட்டுரை அமைகின்றன.

**விழாக்கள்**

ஓரிடத்தில் குழுக்களாக குழுமியிருக்கும் மக்கள் அவர்களுடைய நம்பிக்கை கலந்த பொழுது போக்குக் கலையாக விழாக்கள் திகழ்கின்றன. அம்மக்களின் சோர்வினைப் போக்கி இன்பமாகவும் மகிழ்ச்சியாகவும் இருக்க விழாக்கள் ஒரு கருவியாக அமைகிறது. மருத நிலத்தில் மக்கள் எந்நாளும் ஓய்வின்றி உழவுத்தொழிலை மேற்கொண்டிருந்தனர். அதன் விளைவாக உணவுப் பெருக்கமும் செல்வ வளமும் பெருகலாயின். எனவே மருத நில மக்கள் உழைத்த நேரம் போக ஓய்வான நேரங்களைக் கழிக்கப் பல்வேறு விழாக்களைக் கொண்டாடினர். விழாவிற்கு ஏற்ற காலமாக வேனிற்காலத்தைக் கருதினர். விழக்கிளன்

இயல்புக்குரிய காலமாக வேனிற்காலத்தைக் கருதினர். விழாக்களின் இயல்புக்குத்தக விழாக்கள் காலையிலும் மாலையிலும் கொண்டாடப்பட்டன. புதுப் புனலாடலாகிய நீர்விழாக் காலையிலும் கார்த்தினை விளக்கிட்டு விழா மாலையிலும் கொண்டாடப்பட்டதனை இலக்கியச் சான்றுக் தெரிவிக்கின்றன. விழாக்கள் பல நாட்கள் தொடர்ந்து நிகழ்ந்ததனை உய்த்துணர முடிகின்றது. மதுரைக்காஞ்சி கால் கொள்ளத் தொடங்கிய ஏழாம் நாள் அந்தியில் நீராடும் மரபினைக் காட்டுவதுகொண்டு விழாக்கள் பல நாட்கள் நடைபெறுகின்றது.

பண்டைத் தமிழ் இலக்கியங்கள் விழாவினை விழவு, விழா, சாறு என்ற சொற்களால் கட்டிக் கூறுகின்றன. மருதத்திணைப் பாடல்களில் விழாக்கள் மருதநிலத்திலே மிகுதியாகக் கொண்டாடப்பட்டன.

**விழாவிற்கு நாள் பார்த்தல்**

விழாக்கள் பண்டைத் தமிழ் மக்களால் நல்ல நாள் பார்த்தும் நல்ல நேரம் பார்த்தும் தொடங்கியுள்ளன. விழாக்களைப் பெரும்பாலும் வளர்பிறை மற்றும் மதி நிறைந்த நாட்களில் தொடங்கியுள்ளனர். கார்த்திகை தீப விழா மழுமதி நாளில் தொடங்கியதனை,

“மழைகால் நீங்கிய மாசு விசும்பில்
குறுமுயல் மறுநிறம் கிளர, மதிநிறைந்து,
அறுமீன் சேறும் அகல் இருள் நடுநாள்,
மறுகு விளக்கு உறுத்து மாலை தூக்கிப்,
பழவிறல் மூதூர்ப் பலருடன் துவன்றிய
விழவுடன் அயர, வருகதில் அம்ம” (அகம். பா. 141)

என்னும் பாடல் வானத்தி;ல் நிறைமதி ஒளிவீசும் நாளில் கார்த்திகை விண்மீன்கள் தோன்றும். அந்நடுசாமத்தில் ஊர்மக்கள் காத்திகை விழாக் கொண்டாடுவர். பலரும் தெருக்களில் தம் வீட்டு வாசலில் விளக்குகளை ஏற்றி வைப்பர். மாலைகளைத் தொங்க விடுவர் என்று குறிப்பிடுகிறது.

**விழாவில் இசையும் ஒப்பனையும்**

விழாவில் பலரும் தங்களை ஒப்பனைபடுத்திக் கொண்டும் நடனமாடிக்கொண்டும் தங்கள் மகிழ்ச்சியை வெளிப்படுத்துகின்றனர். இசையும் நடனமும் ஒன்றுசேர்ந்து மிகவும் அழகாக தோற்றமளித்தது.

**“முழவு முகம் புலர்ந்து முறையின் ஆடிய**
**விழவுஒழி களத்த பாவை போல” (நற். பா. 320)**

விழாக்காலத்தில் மத்தளத்திற்கு ஓசைக்கேற்பவாறு பெண் நடனமாடியதைக் குறிப்பிடுகின்றது. விழாவின் போது விறலி என்பவன் தன்னை அழகுபடுத்திக் கொண்டும் அழகிய தழையாடையை உடுத்திக் கொண்டும் மிகந்த பொலிவோடு விழாக்காண வந்ததனை,

**“மடக்கண் தகரக் கூந்தற் பணைத்தோள்**
**வளரந்தவா லெயிற்றுச் சேர்ந்து செறி குறங்கிற்**
**பிணையல் அந்தழைத் தைஇத் துணையிலன்**
**விழவுக்களம் பொலிய வந்துநின் றனனே” (நற். பா. 170)**

நம்பிக்கையும் விழாவும்

சங்க இலக்கியத்தில் தொகை நூலில் அதுவும் நற்றிணையில் மட்டும் நம்பிக்கை என்ற பெயரிலேயே இது ஆளப்பட்டிருப்பதை அறிய முடிகிறது.

**“சேரியம் பெண்டிர் சிறுசொல் நம்பிச்**

**சுடுவான் போல நோக்கம்”** **(நற். பா. 175)**
**நாடல் சான்றோர் நம்புதல் பழியெனினிற்”** **(நற். பா. 327)**

இவ்விரண்டு பாடல்களிலும் நம்பிக்கை என்ற பொருளிலேயே புலவர்கள் கையாண்டுள்ளனர். முல்லைக்கலி நலத்தகை நம்பிய சொல்லாட்டி எனும் தொடரைக் குறிப்பதில் நம்பிய என்ற சொல் விரும்பிய எனும் பொருளில் வந்துள்ளதையும் காண முடிகிறது.

**வழிபாடுகள்**

மனிதன் இப்பூமியில் தோன்றிய காலம் தொட்டு, அவனுடைய வாழ்வு இயற்கையுடனும், அதைச் சார்ந்த நிகழ்வுகளுடனும் பின்னிப் பிணைந்துள்ளது. இயற்கையின் மடியில் விளையாடி, அதன் வளத்தினால் செழித்து வளர்ந்த மனிதன், அதே இயற்கையின் சீற்றங்களுக்கு அஞ்சி நடுங்கியும் வாழ்ந்து வந்தான். குறிப்பாக, அவனுடைய அறிவுக்கும், ஆற்றலுக்கும் அப்பாற்பட்ட நிகழ்வுகள் அவனை ஒருவித அச்ச உணர்வுக்கு உட்படுத்தியது. அந்த அச்சமே, மனிதனை கடவுள் என்ற ஒரு உயர் சக்தியை நோக்கி நகரச் செய்தது எனலாம்.

ஆரம்ப காலத்தில், மனிதன் தனது வாழ்க்கையில் ஏற்படும் நன்மை தீமைகளுக்கு இயற்கையே காரணம் என்று நம்பினான். சூரியன் உதித்து வெளிச்சம் தருவதற்கும், மழை பெய்து வளம் சேர்ப்பதற்கும், காற்று உயிரை காப்பதற்கும் நன்றி தெரிவிக்கும் விதமாக இயற்கையை வணங்கத் தொடங்கினான். அதேபோல், இடி, மின்னல், புயல், நிலநடுக்கம் போன்ற பேரழிவுகளுக்கு அஞ்சி, அவற்றின் கோபத்திலிருந்து தன்னைக் காத்துக்கொள்ளும் பொருட்டு இயற்கையை சாந்தப்படுத்த நினைத்தான். இந்த எண்ணங்களே, காலப்போக்கில் இயற்கை வழிபாடாக உருவெடுத்தன. ஆறுகள், மலைகள், மரங்கள், விலங்குகள் என அனைத்திலும் ஒரு தெய்வீக சக்தி இருப்பதாக நம்பி அவற்றை வணங்க ஆரம்பித்தான்.

இயற்கை வழிபாட்டின் அடுத்த கட்டமாக, பல்வேறு தெய்வ வழிபாடுகள் தோன்றின. ஒவ்வொரு சமூகமும் தங்களுக்கு ஏற்றவாறு வெவ்வேறு தெய்வங்களை உருவாக்கி வழிபட்டனர். அந்த தெய்வங்களுக்கு கோவில்களை கட்டி, விழாக்கள் நடத்தி, தங்கள் வேண்டுதல்களை நிறைவேற்றினர். இந்த தெய்வங்கள், இயற்கையின் அம்சங்களான சூரியன், சந்திரன், காற்று, நெருப்பு போன்றவற்றின் உருவகங்களாக விளங்கின. மேலும், அந்தந்த சமூகத்தின் நம்பிக்கைகள், கலாச்சாரங்கள் மற்றும் வாழ்க்கை முறைகளுக்கு ஏற்ப தெய்வங்களின் குணாதிசயங்களும், வழிபாட்டு முறைகளும் மாறுபட்டன.

வழிபாட்டின் மற்றொரு முக்கிய அம்சம், முன்னோர்களை வழிபடும் பழக்கம். இறந்த முன்னோர்கள், குடும்பத்தை பாதுகாக்கும் தெய்வங்களாக கருதப்பட்டனர். அவர்கள் ஆசீர்வாதம் இருந்தால் குடும்பம் செழிக்கும், இல்லையென்றால் துன்பங்கள் நேரிடும் என்று நம்பப்பட்டது. எனவே, முன்னோர்களுக்கு திதி கொடுப்பது, நினைவுச் சின்னங்களை அமைப்பது போன்ற வழிபாட்டு முறைகள் பின்பற்றப்பட்டன. இந்த பழக்கம், குடும்ப உறவுகளை வலுப்படுத்தவும், தலைமுறைகளை ஒன்றிணைக்கவும் உதவியது.

சிறு தெய்வ வழிபாடுகள், தமிழர்களின் தனித்துவமான அடையாளங்களில் ஒன்றாகும். கிராம தேவதைகள், குல தெய்வங்கள் என பல சிறு தெய்வங்களை தமிழர்கள் வழிபட்டு வருகின்றனர். இந்த தெய்வங்கள், பெரும்பாலும் அந்தந்த ஊரின் காவல்

தெய்வங்களாகவோ அல்லது குறிப்பிட்ட சமூகத்தினரின் குல தெய்வங்களாகவோ இருக்கும். சிறு தெய்வங்களுக்கு கோவில்கள் சிறியதாக இருந்தாலும், அவற்றின் மீது மக்கள் கொண்டிருக்கும் பக்தி அளப்பரியது. வருடத்திற்கு ஒருமுறை திருவிழாக்கள் நடத்தி, ஆடல் பாடல்களுடன் சிறு தெய்வங்களை வழிபடுவது தமிழர்களின் பாரம்பரிய வழக்கமாகும்.

காலப்போக்கில், வழிபாட்டு முறைகளில் பல மாற்றங்கள் நிகழ்ந்தாலும், அதன் அடிப்படை நோக்கம் மாறவில்லை. இன்றும் மனிதன் தன்னைவிட உயர்ந்த ஒரு சக்தியை நம்புகிறான், அதை வணங்குகிறான். அந்த சக்தி, அவனுக்கு நம்பிக்கை அளிக்கிறது, ஆறுதல் தருகிறது, மேலும் நல்ல வாழ்க்கை வாழ உந்து சக்தியாகவும் அமைகிறது. எனவே, வழிபாடுகள் வெறும் சடங்குகள் மட்டுமல்ல, அவை மனித வாழ்வின் ஒரு அங்கமாகவே மாறிவிட்டன. பல்வேறு மதங்கள், வழிபாட்டு முறைகள் தோன்றினாலும், மனிதனின் உள்ளார்ந்த தேடலான இறைவனை அறிதல் என்ற இலக்கை நோக்கியே அனைத்து வழிபாடுகளும் செல்கின்றன.

**இயற்கை வழிபாடு**

இயற்கை வழிபாடு என்பது மனிதன் தோன்றிய காலம் தொட்டு, அவனது வாழ்வோடு ஒன்றிய ஒரு கலாச்சார முறையாகும். இயற்கையின் கூறுகளான நிலம், நீர், காற்று, ஆகாயம், தீ, மலைகள், சூரியன், சந்திரன் மற்றும் உயிரினங்கள் போன்றவற்றை வணங்குவது இயற்கை வழிபாடாகும். மனித நாகரிகத்தின் தொட்டில் எனக் கருதப்படும் ஆதி சமூகங்களில், இயற்கையின் சக்தியை உணர்ந்து, அதற்கு நன்றி செலுத்தும் விதமாகவும், அதன் சீற்றத்திலிருந்து தங்களைக் காத்துக்கொள்ளும் நோக்கிலும் இயற்கை வழிபாடு உருவானது. இது வெறும் சடங்காக மட்டுமின்றி, ஒரு தத்துவமாக, வாழ்வியல் நெறியாகப் பின்பற்றப்பட்டது.

தொல்காப்பியர், பழந்தமிழர் இயற்கை வழிபாட்டில் சிறந்து விளங்கினர் என்பதை தனது நூலில் பதிவு செய்துள்ளார். ஞாயிறு (சூரியன்), திங்கள் (சந்திரன்), தீச்சுடர் (அக்னி) ஆகிய இயற்கைக் கூறுகளை அவர்கள் வழிபட்டதை,

“கொடிநிலை சுந்தழி வள்ளி என்ற வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும் கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே” (தொல். பொருள். நூ. 85)

என்று பாடாண் திணையில் குறிப்பிடுகிறார். இதன் மூலம், கொடி, சுந்தழி, வள்ளி ஆகிய மூன்றும் கடவுள் வாழ்த்துக்கு உரிய சிறப்பினைப் பெற்றிருந்தன என்பது தெளிவாகிறது. அக்காலத்தில் இயற்கையோடு இயைந்த வாழ்வு வாழ்ந்த தமிழர்கள், இயற்கையையே தெய்வமாக கருதி வழிபட்டனர் என்பதற்கு இது சான்றாகும்.

சங்க இலக்கியங்களில் சிறுதெய்வ வழிபாடு பற்றிய குறிப்புகளும் காணப்படுகின்றன. சேர மன்னனின் ஆட்சிக்குட்பட்டதும், அச்சம் நிறைந்த கொண்டதுமான கொல்லி மலையில், கரிய கண்களை உடைய "கொல்லிக் கருங்கண் தெய்வம்" என்ற சிறுதெய்வம் அம்மலையின் மேற்குப் பகுதியில் சிலையாக வடிக்கப்பட்டு வணங்கப்பட்ட செய்தியினை,

“பெரும்பூண் பொறையின் பேஎம்முதிர் கொல்லிக் கருங்கண் தெய்வம் குடவரை எழுதிய நல்இயல் பாவை அன்னஇம்” (குறுந். பா. 89)

என்ற குறுந்தொகை பாடல் மூலம் அறியலாம். இப்பாடல், அக்கால மக்கள் சிறுதெய்வங்களை எவ்வாறு போற்றி வழிபட்டார்கள் என்பதை படம் பிடித்துக் காட்டுகிறது. சிறுதெய்வங்கள், குறிப்பிட்ட இடத்தின் காவல் தெய்வமாகவோ அல்லது ஒரு குறிப்பிட்ட சமூகத்தின் குலதெய்வமாகவோ கருதப்பட்டு வணங்கப்பட்டன.

**இயற்கை வழிபாட்டின் முக்கியத்துவம்:**

சுற்றுச்சூழல் பாதுகாப்பு: இயற்கை வழிபாட்டின் அடிப்படையே இயற்கையை மதித்து போற்றுவதுதான். மரங்களை வெட்டாமல் காப்பது, நீர்நிலைகளை தூய்மையாக வைத்திருப்பது, விலங்குகளை துன்புறுத்தாமல் பாதுகாப்பது போன்ற செயல்கள் இயற்கை வழிபாட்டின் மூலம் வலியுறுத்தப்பட்டன. இதன் மூலம், பண்டைய மக்கள் சுற்றுச்சூழலை பாதுகாப்பதில் முக்கிய பங்கு வகித்தனர்.

சமூக ஒற்றுமை: இயற்கை வழிபாடு, சமூகத்தில் ஒற்றுமையை வளர்க்க உதவியது. ஊர் மக்கள் அனைவரும் ஒன்று கூடி கிராம தேவதைகளை வழிபடும்போது, ஒருவருக்கொருவர் உதவி செய்து, பகிர்ந்து வாழும் மனப்பான்மை வளர்ந்தது. திருவிழாக்கள், பண்டிகைகள் போன்ற கொண்டாட்டங்கள் சமூகத்தில் நல்லிணக்கத்தை ஏற்படுத்தின.

மன அமைதி: இயற்கையின் மடியில் அமைதியாக அமர்ந்து தியானம் செய்வது, மன அழுத்தத்தை குறைத்து, மன அமைதியை தரும். நதிகள், மலைகள், காடுகள் போன்ற இயற்கை சூழலில் இருக்கும்போது, மனித மனம் சாந்தமடைகிறது. இயற்கை வழிபாடு என்பது மனதை அமைதிப்படுத்தும் ஒரு வழியாகவும் இருந்தது.

தன்னம்பிக்கை: இயற்கை சீற்றங்களின்போது, கடவுளை வழிபட்டு தங்களை காப்பாற்றும்படி வேண்டிக்கொள்வது, மக்களுக்கு தன்னம்பிக்கையை அளித்தது. இயற்கை வழிபாடு என்பது ஒரு நம்பிக்கையாகவும், தைரியத்தை கொடுக்கும் ஒரு உந்துதலாகவும் செயல்பட்டது.

காலப்போக்கில் இயற்கை வழிபாடு பல மாற்றங்களை அடைந்துள்ளது. சிறுதெய்வங்கள் பெருந்தெய்வங்களாக மாற்றம் பெற்றன. உருவ வழிபாடு, ஆகம விதிமுறைகள் போன்ற புதிய அம்சங்கள் இணைந்தன. இருப்பினும், இயற்கை வழிபாட்டின் அடிப்படை தத்துவம் மாறாமல் இன்றும் பின்பற்றப்படுகிறது. கிராமங்களில் இன்றும் குலதெய்வ வழிபாடுகள், காடுகளிலும், மலைகளிலும் உள்ள தெய்வங்களுக்கு பூஜைகள் செய்வது போன்ற பழக்கங்கள் வழக்கத்தில் உள்ளன.

நவீன காலத்தில் இயற்கை வழிபாட்டின் முக்கியத்துவத்தை உணர்ந்து, சுற்றுச்சூழலை பாதுகாக்கும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட வேண்டும். காடுகளை அழிப்பதை தடுத்து, மரங்களை நட்டு, நீர்நிலைகளை பாதுகாத்து, பூமியை பசுமையாக்க வேண்டும். இதுவே, நாம் இயற்கைக்கு செய்யும் உண்மையான வழிபாடாக இருக்கும். இயற்கை நமக்கு அளித்த கொடைகளை போற்றி பாதுகாத்து, வருங்கால சந்ததியினருக்கு

அதை விட்டு செல்வது நமது கடமையாகும். இயற்கையோடு இணைந்து வாழ்வதே நிலையான வாழ்க்கைக்கு வழிவகுக்கும்.

**கூத்துகள்**

மருதத்திணைப் பாடல்களில் குரவைக்கூத்து, துணங்கைக் கூத்து ஆகியவற்றைப் பற்றிய செய்திகள் வருகின்றன. பெண்கள் கைக் கோர்த்துக் கொண்டு வடடமாக நின்று ஆடும் கூத்தையே குரவைக் கூத்து என்பர். இக்கூத்தாடும் போது பெண்கள் தங்கள் பாடல் வாயிலாக ஏதேனும் ஒரு செய்தியை வெளிப்படுத்துர். துணங்கைக் கூத்து என்பது விழாக்களில் மத்தளங்களின் ஓசைக்கேற்றவாறு தாலத்தோடு ஆடும் கூத்து என்று கூறுவர்.

தெள்ளிய கள்ளைக் குடித்துவிட்டுத் தங்கள் அழகிய குடங்களைப் பக்கத்தில் வைத்து விட்டுத் தம் கணவன்மாரின் பண்பற்ற பரத்தமை ஒழுக்கத்தைப் பாடுகின்றனர்.

“தெண்கள் தேறல் மாந்தி, மகளிர்
நுண்செயல் அம்குடம் இரீஇ, பண்பின்
மகிழ்நன் பரத்தமை பாடி அவிழ் இணர்க்
காஞ்சி நிழல் குரவை அயரும்” (அகம். பா. 336)

என்ற பாடலில், பூங்கொத்துகள் நிறைந்த காஞ்சி மரத்து நிழலில் குரவைக் கூத்தாடுகின்ற மனையுறை மகளிரை அகநானூறு சுட்டுகிறது.

**ஊர்மன்றம்**

பண்டைத் தமிழ்ச் சமுதாயத்தில்கிராமம் தோறும் ஊர்மன்றம் இருந்திருக்கிறது. அவ்வூர் மன்றத்தில் மக்களிடையே காணப்படும் பல்வேறு வழக்குகள் நன்கு அறிந்து நீதி வழங்கும் முறை இருந்ததனைச் சங்கப் பாடல்கள் உணர்த்துகின்றன. மருதத்திணைப் பாடலில் அவ்வாறான ஒரு காட்சியை மதுரைத் தமிழக் கூத்தனார் கடுவன் மன்னனார் பதிவு செய்திருக்கிறார்.

“தொல் புகழ் நிறைந்த பல்பூங் கழனி
கரும்பு அமல் படப்பை, பெரும்பெயர்க் கள்ளூர்
திருநுதற் குறுமகள் அணிநலம் வவ்விய
அறணி லாளன், அறியேன் என்ற
திறன்இல் வெஞ்சூள் அறிகரி கடாஅய்,
முறிஆர் பெருங்கிளை செறியப் பற்றி
நீறு தலைப்பெய்த ஞான்றை” (அகம். பா. 256)

அழகு நிறை;த தொன்மையான பூக்கள் பூக்க நிரம்பிய வயல்களையும், கரும்பு நிறைந்த கழனிகளையும் உடைய கள்ளூரில் ஒரு வழக்கு நடக்கிறது. ஊர் அவையத்தில் ஒரு சிறு பெண் ஒருவன் மீது குற்றம் சாற்றுகிறாள். தனது பெண்மை நலத்தை நுகர்ந்து பின் கைவிட்டுவிட்டான் என்று கூற அவன் தனக்கு அவனைத் தெரியாது என்று சூள் உரைக்கின்றான். அவையத்தார் சாட்சிகளை நன்கு கேட்டு அவன் சொன்னது பொய் என்றறிந்து தளிர் அடர்ந்த பெருமரத்தின் கிளையில் அவனை இறுக்க கட்டி வைத்து அவன் தலையில் சுண்ணாம்புத் தண்ணீரைக் கொட்டிக் தண்டனை வழங்குகின்றனர்.

இதனால் பண்டைத் தமிழர்கள் நெறிபடுத்தப்பட்ட வாழ்க்கையை வாழ்ந்துள்ளனர் என்பதும், எளியவர்களும் எல்லா உரிமைகளைப் பெற்றிருந்தனர் என்பதும் பெறப்படுகிறது.

**வெறியாட்டு**

வெறியாட்டு என்பது வழிபாடு செய்பவர்களின் வாயிலாக இறைவன் வெளிப்படுவான் என்ற நம்பிக்கை ஆகும். வீட்டு முற்றத்தில் புன்கமரத்தின் அரும்பு முற்றிய பூக்கள் பொரி போன்று விழுந்து கிடக்கிறது. வெண்மணல் பரப்பில் வெறியாடுதற்கு வேலன் அலங்கரிக்கப்பட்டதை குறுந்தொகைப் பாடல்

“வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்
வெறியாட் டயர்ந்த காந்தளும்” (அகம். பா. 256)

சங்க அகப்பாடல்களில் வெளியாட்டினைப் பற்றிய குறிப்புகள் வருகின்றன. இது குறிஞ்சி நிலத்திற்குரிய சிறப்பு வழிபாடாகவும் காணப்படுகின்றது. இது அகம், புறம் என்ற இரு நிலைகளிலும் கொள்ளப்படுகின்றது.

**விரிச்சி கேட்டல்:**

ஒரு செயலைத் தொடங்குவதற்கு முன்னர் நல்ல நேரம் பார்த்துத் தொடங்கும் வழக்கம் பண்டைத் தமிழர்களிடையே இருந்துள்ளது. இதனைப் பண்டைத் தமிழர்கள் 'விரிச்சி' எனச் சுட்டியுள்ளனர். 'விரிச்சி கேட்டல்' அகம், புறம் ஆகிய இரு துறை இலக்கியங்களில் பயின்று வந்துள்ளன. ஒரு முக்கியமான காரியத்தை மேற்கொள்வதற்கு முன்பு, ஏதாவது ஒரு சகுனத்தை எதிர்பார்த்து, அதன் அடிப்படையில் தமது செயலைத் தொடர்வதா வேண்டாமா என்று தீர்மானிக்கும் ஒரு நம்பிக்கையாக இது இருந்தது. இது வெறும் நம்பிக்கையாக மட்டுமில்லாமல், அன்றைய சமூகத்தின் வாழ்வியலோடு பின்னிப்பிணைந்த ஒரு முக்கியமான பண்பாட்டு அம்சமாகவும் விளங்கியது.

தொல்காப்பியம் உள்ளிட்ட சங்க இலக்கியங்களில் விரிச்சி கேட்டல் பற்றிய பல குறிப்புகள் காணப்படுகின்றன. குறிப்பாக, தலைவன் தலைவியைப் பிரிந்து சென்றிருக்கும்போது, தலைவி அவனுக்காகக் காத்திருக்கும் சூழலில், அவனுடைய வருகையை உறுதி செய்யும் நல்ல சகுனங்களுக்காகக் காத்திருப்பாள்.

**“நெடுநா ஒண்மணி கடிமனை இரட்டக் குரைஇலைப் போகிய விரவுமணற் பந்தர் பெரும்பாண் காவல் பூண்டென ஒருசார், திருந்து இழை மகளிர் விரிச்சி நிற்ப” (தொல். பொருள். நூ. 63)**

எனும் பாடல் தலைவி நன்னிமித்தம் பார்க்கும் செய்தியைக் கூறுகிறது. அதாவது, நீண்ட நாக்குடைய ஒள்ளிய மணியோசையானது காவற்காட்டில் ஒலிக்க, அழகிய மணல் பரப்பிய பந்தலின் ஒரு பக்கத்தில் பெரிய பாணர்கள் காவல் காக்கின்றனர். திருத்தமான அணிகலன்களை அணிந்த மகளிர் நன்னிமித்தம் பார்த்து நிற்கின்றனர். இது போன்ற பல்வேறு நன்னிமித்தங்கள் சங்கப் பாடல்களில் சுட்டப்படுகின்றன.

விரிச்சி கேட்டலில் பல வகைகள் இருந்தன. புள் நிமித்தம் என்பது பறவைகளின் சத்தத்தையும், அவை பறக்கும் திசையையும் வைத்து சகுனம் பார்ப்பது. பல்லி ஒலித்தல், காகம் கரைதல் போன்றவையும் சகுனங்களாகக் கருதப்பட்டன. மரம், பறவை, கனவு ஆகியவையும் மற்றும் பிற நிமித்தங்களும் பழந்தமிழ் இலக்கியத்தில் பரவலாகக் காணப்படுகின்றன. ஒவ்வொரு நிமித்தத்திற்கும் ஒவ்வொரு பலன் இருப்பதாக நம்பப்பட்டது. உதாரணமாக, ஒரு குறிப்பிட்ட பறவை ஒரு திசையில் இருந்து ஒலி எழுப்பினால், அது ஒரு நல்ல செய்தியின் அறிகுறியாகக் கருதப்பட்டது.

சங்க இலக்கியத்தில் மருதத்திணை பாடல்களில் விரிச்சி கேட்டல் பற்றிய செய்திகள் அதிகமாக இல்லாவிட்டாலும், மருத நில மக்களின் வாழ்வில் இது ஒரு முக்கியப் பங்கு வகித்தது என்பதை மறைமுகமாக அறியலாம். மருத நிலம் என்பது விவசாயம் செழித்து வளர்ந்த பகுதி. இங்கு மக்கள் இயற்கையோடு இயைந்து வாழ்ந்தார்கள். எனவே, அவர்களின் நம்பிக்கைகளில் இயற்கையின் அம்சங்கள் அதிகமாக இருந்தன.

விரிச்சி கேட்டல் வெறும் மூடநம்பிக்கை மட்டுமல்ல. அது ஒரு சமூகத்தின் ஆழ்மனதில் பதிந்திருக்கும் நம்பிக்கைகளின் வெளிப்பாடு. ஒரு முக்கியமான செயலைத் தொடங்கும் முன், நல்ல சகுனம் பார்ப்பது, அந்தச் செயலை வெற்றிகரமாக முடிப்பதற்கு ஒரு மனத்தூண்டுகோலாக இருந்தது. அதுமட்டுமின்றி, இது சமூக ஒற்றுமைக்கும் வழிவகுத்தது. ஒரு சகுனத்தை வைத்து ஒரு முடிவை எடுக்கும்போது, மக்கள் ஒருமித்த கருத்துடன் செயல்பட வாய்ப்பு கிடைத்தது.

இன்று விரிச்சி கேட்டல் போன்ற பழங்கால நம்பிக்கைகள் குறைந்துவிட்டாலும், அவை நம்முடைய பண்பாட்டின் ஒரு பகுதியாக இன்னும் இருக்கின்றன. நவீன காலத்தில் நாம் அறிவியல் மற்றும் தொழில்நுட்பத்தை நம்பி செயல்பட்டாலும், சில சமயங்களில் நம் முன்னோர்களின் நம்பிக்கைகளை நினைவு கூர்ந்து பார்க்கிறோம். அது நமக்கு ஒருவித மன அமைதியையும், நம்பிக்கையையும் தருகிறது.

முடிவாக, விரிச்சி கேட்டல் என்பது பண்டைத் தமிழர்களின் வாழ்வில் ஒரு முக்கிய இடத்தைப் பிடித்திருந்தது. அது வெறும் சகுனம் பார்க்கும் நிகழ்வு மட்டுமல்ல, அவர்களின் நம்பிக்கைகள், சமூக வாழ்க்கை, மற்றும் இயற்கையுடனான உறவு ஆகியவற்றின் ஒரு பிரதிபலிப்பாகவும் இருந்தது.

**தொகுப்புரை**

சங்க கால மக்களின் வாழ்க்கை முறையை நாம் உற்று நோக்கும்போது, அவர்களின் பண்பாடும், நம்பிக்கைகளும், கொண்டாட்டங்களும் ஒருங்கே இணைந்த ஒரு அழகான சித்திரமாக விரிகிறது. அன்றாட வாழ்வில் அவர்கள் சந்தித்த சவால்கள், இயற்கையோடு ஒன்றிய வாழ்க்கை, சமூக உறவுகள், கலை ஆர்வம் என அனைத்தையும் பல்வேறு விழாக்களிலும், பொழுதுபோக்கு நிகழ்வுகளிலும் வெளிப்படுத்தியுள்ளனர். இது அவர்களின் வாழ்க்கை எவ்வளவு செழுமையானதாக இருந்தது என்பதை எடுத்துக்காட்டுகிறது.

குறிப்பாக, மருத நில மக்களின் வாழ்க்கை இந்திரனை மையப்படுத்தியே இருந்தது. மழை வளம் பெருகி விவசாயம் சிறக்க இந்திரனை கடவுளாக வணங்கி, அவனுக்கு விழாவெடுத்து நன்றி செலுத்தினர். இது இயற்கையோடு அவர்கள் கொண்டிருந்த ஆழமான பிணைப்பை வெளிப்படுத்துகிறது. இந்திர விழாக்கள் வெறும் சடங்காக மட்டும் இல்லாமல், சமூக ஒற்றுமையை வளர்க்கும் ஒரு நிகழ்வாகவும் அமைந்தது. ஊர் மக்கள் அனைவரும் ஒன்று கூடி, பாட்டு பாடி, ஆடல் ஆடி, தங்கள் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொண்டனர்.

சங்க கால மக்கள் பல்வேறு சடங்குகளையும், நம்பிக்கைகளையும் தங்கள் வாழ்க்கையின் முக்கியமான அங்கமாக கருதினர். பிறப்பு, இறப்பு, திருமணம் போன்ற ஒவ்வொரு நிகழ்விலும் தனித்துவமான சடங்குகளை பின்பற்றினர். இந்த சடங்குகள்

வெறும் சம்பிரதாயமாக இல்லாமல், அவை சமூகத்தின் விழுமியங்களையும், நம்பிக்கைகளையும் அடுத்த தலைமுறைக்கு எடுத்துச் செல்லும் பாலமாக அமைந்தது. உதாரணமாக, திருமணச் சடங்குகளில், மணமக்களுக்கு அறிவுரைகள் கூறுவது, அவர்களின் வாழ்க்கையை எப்படி சிறப்பாக அமைத்துக்கொள்ள வேண்டும் என்பதை எடுத்துரைப்பது போன்ற நிகழ்வுகள் இடம்பெற்றன.

அவர்களின் பண்பாடு காலத்தால் அழியாத பொக்கிஷமாக இன்றும் நம்மை வந்தடைகிறது. சங்க இலக்கியங்கள் வாயிலாக அவர்களின் வாழ்க்கை முறையை, பழக்க வழக்கங்களை, நம்பிக்கைகளை நாம் அறிந்து கொள்ள முடிகிறது. அவர்கள் விட்டுச் சென்ற ஒவ்வொரு விஷயமும், நம்முடைய பண்பாட்டுக்கு ஒரு புதிய பரிமாணத்தை தருகிறது. அவர்களின் கலை, இலக்கியம், இசை, நடனம் என அனைத்துமே நம்மை வியக்க வைக்கிறது.

மேலும், சங்க கால மக்களின் வாழ்க்கை முறை இன்றைய தலைமுறையினருக்கு ஒரு பாடமாக அமைகிறது. இயற்கையோடு இயைந்து வாழ்வது, சமூக உறவுகளை மதிப்பது, பண்பாட்டைப் போற்றுவது போன்ற விஷயங்களை அவர்கள் நமக்கு உணர்த்துகிறார்கள். ஆகையால், அவர்களின் வாழ்க்கை முறையை நாம் பின்பற்றி, நம்முடைய பண்பாட்டையும், கலாச்சாரத்தையும் பாதுகாப்பது நமது கடமையாகும்.

முடிவாக, சங்க கால மக்களின் விழாக்களும், பொழுதுபோக்கு நிகழ்வுகளும் அவர்களின் வாழ்க்கையின் பிரதிபலிப்பாக இருந்தன. அவர்கள் இயற்கையை வணங்கி, சமூக உறவுகளை மதித்து, பண்பாட்டை போற்றி ஒரு நிறைவான வாழ்க்கையை வாழ்ந்தார்கள். அவர்களின் வாழ்க்கை முறை என்றும் நமக்கு ஒரு வழிகாட்டியாக இருக்கும்.

**அடிக்குறிப்புகள்**

1. முனைவர். ஆலிஸ், குறுந்தொகை, – 2004, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ். பா. 89.
2. பேராசிரியர் சண்முகம்பிள்ளை மு. தொல்காப்பியம். பொருளதிகாரம்,நூ. 63.
3. பேராசிரியர் சண்முகம்பிள்ளை மு. , தொல்காப்பியம். பொருளதிகாரம், நூ. 8.
4. முனைவர். தட்சிணாமூர்த்தி அ., அகநானூறு – 2004, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ். பா.141.
5. முனைவர். தட்சிணாமூர்த்தி அ., அகநானூறு – 2004, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்.பா. 256.
6. முனைவர். தட்சிணாமூர்த்தி அ., அகநானூறு – 2004, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ். பா. 336.
7. மாணிக்கனார் அ. நற்றினை வர்த்தமானன் பதிப்பகம், 1999, பா. 320.
8. மாணிக்கனார் அ. நற்றினை வர்த்தமானன் பதிப்பகம்,. 1999, பா. 170.
9. மாணிக்கனார் அ. நற்றினை வர்த்தமானன் பதிப்பகம், 1999,பா. 175.
10. மாணிக்கனார் அ. நற்றினை வர்த்தமானன் பதிப்பகம், 1999, பா. 327.

**REFERENCES:**


1. Dr. Alice, Kurunthokai, – 2004, New Century Book House. P. 89
2. Prof. Shanmugampillai M. Tolkappiyam. Economics, No. 63
3. Prof. Shanmugampillai M. , Tolkappiyam. Economics, No. 8
4. Dr. Dakshinamoorthy A., Akananuru – 2004, New Century Book House. P. 141
5. Dr. Dakshinamoorthy A., Akananuru – 2004, New Century Book House. P. 256
6. Dr. Dakshinamoorthy A., Akananuru – 2004, New Century Book House. P. 336
7. Manickanar A. Nattini Varthamanan Publishing House, 1999, p. 320
8. Manikkanar A. Nattini Varthamanan Publishing House,. 1999, p. 170
9. Manikkanar A. Nattini Varthamanan Publishing House, 1999, p. 175
10. Manikkanar A. Nattini Varthamanan Publishing House, 1999, p. 327

தமிழ்மணம் சர்வதேசத் தமிழ் ஆய்விதழ்
Tamilmanam International Research Journal of Tamil Studies | ISSN(o): 3049-0723
[Impact Factor: 9.47] Monthly, Peer-Reviewed, Refereed, Indexed Journal with IC Value : 86.87
Volume - 1, Issue - 09, June - 2025



DOIs: https://doi.org/10.63300/tmXXXXXXXXXX --:-- Research Paper

# Kuruntokai - Historical Records in Kurinji Thinai Poems

[1] **P. Ramar,** [2] **Dr. M. Arunachalam,**
[1] PhD Research Scholar (Full Time) BDU2210632779774, Department of Tamil Studies, Thanthai Periyar Government Arts and Science College (Autonomous), (Affiliated to Bharathidasan University), Tiruchirappalli-23, Tamil Nadu, India.
[2] Associate Professor of Tamil, Department of Tamil Studies, Thanthai Periyar Government Arts and Science College (Autonomous), (Affiliated to Bharathidasan University), Tiruchirappalli-23, Tamil Nadu, India.

***Abstract:*** *This article, 'Kuruntokai - Historical Records in Kurinji Thinai Poems,' explores the historical information embedded in the Kurinji Thinai poems found in Kuruntokai, a Sangam literature work. Specifically, it explains with evidence how historical highlights such as the Kosar clan, the migration of the Vadugars, the Malaiyan king, and the heroic history of Valvil Ori are recorded in the Kuruntokai poems. This article also examines how Kuruntokai poems, which illustrate the social, political, and geographical conditions of that period, can be useful to historical researchers. Furthermore, it extensively discusses the war strategies, trade relations, and cultural values known through these poems.*

***Key Words:*** *Reason for the Name Kurinji Thinai - Naloorkosar - History of Vadugars - Notes on Malaiyaman Tirumudikkari - Valvil Ori - Nerivayil - Speciality of Uraiyur*

# குறுந்தொகை - குறிஞ்சித்திணைப் பாடல்களில் வரலாற்றுப் பதிவுகள்

[1] **பி. ராமர்,** [2] **முனைவர் மு. அருணாசலம்,**
[1] முழுநேர முனைவர் பட்ட ஆய்வாளர், BDU2210632779774, தமிழாய்வுத்துறை, தந்தை பெரியார் அரசு கலை மற்றும் அறிவியல் கல்லூரி (தன்னாட்சி), (பாரதிதாசன் பல்கலைக்கழகத்துடன் இணைவு பெற்றது),
திருச்சிராப்பள்ளி-23, தமிழ்நாடு, இந்தியா.
[2] இணைப்பேராசிரியர், தமிழாய்வுத்துறை, தந்தை பெரியார் அரசு கலை மற்றும் அறிவியல் கல்லூரி (தன்னாட்சி), (பாரதிதாசன் பல்கலைக்கழகத்துடன் இணைவு பெற்றது),
திருச்சிராப்பள்ளி-23, தமிழ்நாடு, இந்தியா.

***Abstract:*** *'குறுந்தொகை குறிஞ்சித்திணைப் பாடல்களில் வரலாற்றுப் பதிவுகள்' எனும் இக்கட்டுரை, சங்க இலக்கியமான குறுந்தொகையில் இடம்பெற்றுள்ள குறிஞ்சித்திணைப் பாடல்களில் பொதிந்துள்ள வரலாற்றுத் தகவல்களை ஆராய்கிறது. குறிப்பாக, கோசர் குடியினர், வடுகர்களின் இடம்பெயர்வு, மலையன் மன்னன், வல்வில் ஓரியின் வீர வரலாறு போன்ற வரலாற்றுச் சிறப்புகள் குறுந்தொகைப் பாடல்களில் எவ்வாறு பதிவு செய்யப்பட்டுள்ளன என்பதை சான்றுகளுடன் விளக்குகிறது. அக்காலகட்டத்தின் சமூக, அரசியல் மற்றும் புவியியல் நிலைகளை எடுத்துக்காட்டும் குறுந்தொகைப் பாடல்கள், வரலாற்று ஆய்வாளர்களுக்கு எவ்வாறு பயன்படும் என்பதையும் இக்கட்டுரை ஆராய்கிறது. மேலும், இப்பாடல்கள் வாயிலாக அறியப்படும் போர்முறைகள், வணிகத் தொடர்புகள், மற்றும் பண்பாட்டு விழுமியங்கள் பற்றியும் விரிவாக அலசுகிறது..*

***குறிப்பு சொற்கள்*** *: குறிஞ்சித்திணைப் பெயர்க்காரணம் - நாலூர்க்கோசர் - வடுகர் வரலாறு – மலையமான் திருமுடிக்காரியின் குறிப்புகள் - வல்வில் ஓரி – நேரிவாயில் – உறையூர் சிறப்பு..*

**முன்னுரை:**

சங்க இலக்கியங்கள் தமிழ் மொழியின் செவ்வியல் இலக்கியங்களாகப் போற்றப்படுகின்றன. சங்க இலக்கியத்தின் தொகுப்புகளாக எட்டுத் தொகையும், அடியளவாற் நீண்ட பத்துப்பாட்டும் அமைகின்றன. சங்க இலக்கியங்கள் பொருண்மை அடிப்படையில் அகம், புறம் என்று இரண்டாகப் பிரிக்கப்படுகின்றன. அகமரபில் காதல் வாழ்வும், புறமரபில் வீரமும், கொடையும் அதிகம் பாடுபொருளாகப் பதிவாகி உள்ளன. அகக்கவிதைகளில் வரலாற்றுக் குறிப்புகள் உவமைகள் வாயிலாக வெளிப்படுத்தப்படுகின்றன. இவ்வகையில் அகநானூற்றுப் பாடல்களில் இருநூற்று ஐம்பதிற்கும் மேற்பட்ட வரலாற்றுப் பதிவுகள் இருப்பதாக, கலாநிதி க. கைலாசபதி தெரிவிக்கின்றார்.

சங்க இலக்கிய அகநூலான குறுந்தொகை கடவுள் வாழ்த்தோடு 401 பாடல்களைக் கொண்டது. குறிஞ்சியில் தொடங்கி நெய்தலில் முடியும் குறுந்தொகைப் பாடல்கள் அகவற்பாவில் பாடப்பட்டுள்ளது. இதைத் தொகுப்பித்தோர் பெயர் சுட்டப்படவில்லை. அகத்தில் புறச்செய்திகள் கருப்பொருளின், உரிப்பொருளின் சூழலுக்கு ஏற்றவாறும் இடம் பெறும் என்பதற்கேற்பக் குறுந்தொகையில் வரலாற்றுப் பதிவுகள் இடம் பெறுகின்றன. **'குறுந்தொகை குறிஞ்சித் திணைப்பாடல்களில் வரலாற்றுப் பதிவுகள்'** என்னுந் தலைப்பில் இக்கட்டுரையின் ஆய்வு அமைந்திடுகின்றது.

**குறிஞ்சித் திணைப் பாடல்களில் வரலாற்றுப் பதிவுகள்**

குறிஞ்சி மலையும் மலை சார்ந்த பகுதியாகும். குறிஞ்சிப் பூவின் பெயரால் இத்தகு மலைப்பகுதி பெயரிட்டு அழைக்கப்பட்ட காரணத்தைத் தனிநாயகம் அடிகள் கீழ்வருமாறு சுட்டுகின்றார்.

> **“குறிஞ்சி என்பது ஒரு பூவின் (Strobilanthus Kunthianus) பெயர். மலை நிலத்திற்குரிய தாவரங்களில் முக்கியமானது குறிஞ்சி. அது பன்னிரண்டு வருடத்திற்கு ஒருமுறைதான் பூக்கக் கூடியது. மலைப் பகுதிகளில் மட்டுமே காணப்படுவதாலும், ஆண்டிற்கு ஒருமுறையும் இல்லாமல் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை மட்டுமே பூப்பதாலும், கொத்துக் கொத்தாக அடர்த்தியான அந்தப் பூக்களின் குலைகள் இலட்சக்கணக்கில் காற்றில் அசைந்தாடி மலைப்பகுதி முழுவதையுமே மைல்கள் கணக்கில் ஒரு பெரிய பூந்தோட்டமாக மாற்றி விடுவதாலும், அந்தப் பகுதிக்கே சிறப்புப் பண்புள்ளதாகக் காணப்படும். இத்தகைய பூவின் பெயரால் மலைப்பகுதிகளை அழைத்ததில் வியப்பில்லை’**[1]

என்னும் கூற்று குறிஞ்சியின் பெயர்க் காரணத்தை நிறுவிடும். தொல்காப்பியர் கருத்துப்படி இது ‘மைவரை உலகமாகக்’ கூறப்படுகின்றது. குறிஞ்சி மலைப்பகுதிக்குரிய தெய்வமாக ‘சேயோன்’ அமைகின்றான். இதற்குரிய பொழுதுகளாகக் கூதிர், பனி எதிர் பருவம், யாமம் கூறப்படுகின்றன. களவுக் காதலுக்குரிய பொழுதாக யாமம் (இரவின் நடுப்பகுதி) விளங்குவதால் இதன் உரிப்பொருளாகப் **‘புணர்தலும் புணர்தல் நிமித்தமும்’** ஏற்றதாக அமைந்திடுகின்றது.

குறிஞ்சித்திணைக்குரிய உணவாக தினை, ஐவனம் வெதிர் நெல்லும், விலங்குகளாக யானை, புலி, பன்றி, கரடியும், பறவைகளாக மயில், கிளியும், ஊர்வன உயிரியாக பாம்பும் சொல்லப்படுகின்றன. இந்நிலத்திற்குரிய மரங்களாக வேங்கை, கோங்கு உரைக்கப்படுகின்றது. பறையாக வெறியாட்டுப் பறையும், தொண்டகப்பறையும், தொழிலாகத் தேனெடுத்தலும், பண்ணாகக் குறிஞ்சிப் பண்ணும், மலர்களாக வேங்கை, காந்தள், குறிஞ்சியும், நீராக சுனைநீர், அருவி நீர் ஆகியவையும் சுட்டப்படுகின்றன. குறிஞ்சி நிலத்திற்குரிய முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் தொல்காப்பியரால் மேற்சுட்டியவாறு எடுத்துரைக்கப்பட்டுள்ளன. குறிஞ்சித் திணைப் பாடல்களில் அமையப் பெற்றுள்ள வரலாற்றுப் பதிவுகள் ஆராயப்படுகின்றன.

**நாலூர்க்கோசர்**

கோசர்கள் மோரியருடைய படையில் தூசிப்படைவீரர்களாக அமைந்தனர். தூசி படையென்பது முன் கள படையினரைக் குறித்திடும். பாண்டிய வேந்தர்களிடம் மறப்படை மறவர்களாக விளங்கினர். சேர நாட்டிலும், சோழ நாட்டிலும் கோசர்களின் வாழ்விடங்கள் கூறப்படவில்லை. கோசர்கள் பற்றி நூல் எழுதிய இராகவ ஐயங்கார்,

**“பிரம்மதேவன் வழிவந்த குசமுனிவன் மக்களான குசாம்பர், குசநாபன், ஆதூர்த்தன், வசு என்று நால்வரும் கௌசாம்பி முதலிய நான்கு பெரு நகரங்களை நிறுவி வாழ்ந்தனர் என்றும், அவர்களில் வழி வந்தவர்கள் இக்கோசர் என்றும், நான்கு ஊர்களில் நிலைகொண்டு வாழ்ந்ததைப் பற்றி இவர்கள் நாலூர்க்கோசர் எனக் கூறப் பெற்றனர் என்றும் கூறுவார். கௌசாம்பி நாட்டைப் பிறகு வத்சன் என்ற வேந்தன் ஆண்டனன். வத்சகோசர் என்பது இளங்கோசர் என்று தமிழர்களால் மொழிபெயர்க்கப்பட்டது என்றும் கூறுவார்” (தமிழ்நாட்டு வரலாறு, சங்ககால அரசியல், ப.413)**

ஆனால், சேரமன்னர் வரலாற்றை எழுதிய ஔவை சு. துரைசாமி பிள்ளை இதனை மறுக்கின்றார். **“அவர்கள் வடநாட்டவரும் அல்லர், தமிழ் இனத்தவரும் அல்லர் என்று முடிவு செய்துள்ளார். சங்ககாலத்திற்கு முன்னும் பின்னும் மேலைக் கடற்கரைப் பகுதிக்கு யவனர் பலர் குடியேறி இருந்தனர். பின்னர் சோகைரும் மேலை நாட்டவரும் வந்தனர். இவ்விதம் வந்தோருள் பாபிலோனியா நாட்டினின்றும் வந்து தமிழ்நாட்டில் குடியேறியவர்கள் இக்கோசர்கள்”** (தமிழ்நாட்டு வரலாறு, சங்ககால அரசியல், பக்.413-414) என்று உரைப்பார். மேலும், டைகரிஸ் நதிக்கு கிழக்கில் சகராசு மலைப்பகுதியில் வாழ்ந்த பழங்குடிகளுக்குக் கோசர் என்பது பெயர். வில்வேட்டத்தில் சிறந்தவர்களான இவர்கள் இரானியருடன் கலப்புற்றதால் கிரேக்கர்கள் இவர்களை ‘கிசியா’ என்று அழைத்தனர். இவர்களது தலைநகர் ‘சூசா’ என்பதாகும். இதன் பொருள் அவர்கள் மொழியில் நான்கு ஊர்கள், நான்கு மொழிகள் என்பதாகும். துளு நாட்டின் காலநிலை, மலைவளம் பாபிலோனியா போன்று இருந்ததால் தங்கள் நாட்டிற்குத் திரும்பாமல் இங்கேயே தங்கி விட்டதாகக் கூறுகின்றார். பாபிலோனியாவில் இருந்து முதலில் வந்தோரை மூத்த கோசர் என்றும், இளையோரை இளங்கோசர் என்று தமிழ் மரபு அழைக்கின்றது என்கின்றார். கோசர்கள் பற்றிய பிள்ளையவர்களின் கருத்திற்கு சங்க இலக்கியப் பாடல்களில் சான்றுகள் ஏதும் இல்லை. வேளிர் மன்னர்களுக்குப் படை வீரர்களாகப் பணியாற்றிய குறிப்பு உண்மையாகும். தமிழ்நாட்டு மன்னர்களாகிய நன்னன், பிட்டன், கொற்றன் ஆகியோரைத் தாக்கி வெற்றி பெற்றதைச் சங்கப் பாடல்கள் பதிவு செய்துள்ளன. மோகூர் பழையனிடம் தோற்றோடி அழிவு வேலைகளைச் செய்து வாட்டாற்று போரில் எழினியைக் கொல்கின்றனர். (அகம்-90 பாடல்) அன்னி ஞிமிலி தந்தையின் கண்களைப் பறித்தவர்கள் இக்கோசர்களே. அழுந்தூர்வேள் திதியன் இச்செயலுக்குச் கோசர்களைப் பழிவாங்குகின்றான். (அகம். 262 பாடல்). மோரியரும், கோசரும் தமிழ் வேந்தர்களைத் துன்புறுத்தியதால் சோழன் இளஞ்சேட்சென்னி இவர்களைப் போரில் தோற்கடித்துத் துரத்தியடிக்கின்றான். மோரியர்கள், கோசர்களின் கோட்டையான செருப்பாழிக் கோட்டையினை அழித்து, ‘செருப்பாழி எறிந்த இளஞ்சேட்சென்னி என்றும் பெயர் பெறுகின்றான். மேலும், வடவர் தென்னாட்டின் மீது படையெடுத்து வராமல் இருந்திட கி.மு. 28இல் தமிழ் மன்னர் கூட்டணியொன்றை அமைத்திடுகின்றான். கலிங்க மன்னன் காரவேலன் கி.மு. 163-இல் அத்திக்கும்பா கல்வெட்டில் 113 ஆண்டுகளாகத் தமிழ் மன்னர்கள் அமைத்திருந்த கூட்டணியை தகர்த்ததாகப் பொறித்து உள்ளான். இது இளஞ்சேட்சென்னி வடவர்களுக்கு எதிராக அமைத்திட்ட தமிழ் மன்னர்களின் கூட்டணியேயாகும்.

நாலூர்க் கோசர்கள் வம்ப வடுகர்கள் என்றழைக்கப்படுகின்றனர். இவர்கள் வடபுலத்தில் இருந்து வந்து துளுநாடு, செல்லூர், நல்லூர், நியமம், வட்டாறு ஆகிய ஊர்களைத் தம் வசமாக்கிக் கொண்டு ஆட்சி புரிந்தனர். நாடோடி வீரக்குடியினர் வேலினை வீசிப் படைப்பயிற்சி மேற்கொள்வதில் வல்லவர்கள். கோசர்களின் வாய்மை நிலைமையினை அகநானூறு,

**“வாய்மொழி நிலைஇய சேண்விளங்கு நல் இசை**
**வளம் கெழு கோசர்” (அகநானூறு, 205)**

**‘‘பல்வேற் கோசர்**
**இளங்கள் கமழும் நெய்தல்அம் செறுவின்**
**வனங்கெழு நன்னாடு”** (**அகம்.** 113)

என்று தெரிவிக்கின்றது. மோகூர் பழையனின் அவைக்களத்தில் இவர்கள் இடம்பெற்றிருந்தனர். இவர்கள் தங்கள் குலப்பெண்ணைக் கொன்ற நன்னனை வஞ்சம் தீர்த்த செயல் குறுந்தொகையில் பரணரால் எடுத்துக்காட்டப்படுகின்றது. கொண்கானத்தின் தலைவன் நன்னன். பாழி இவனது பேரூராகும். நன்னன் குணங்களாலும், வீரத்தாலும் வல்லன்மை மிக்கவன். பரணர் நன்னனின் வீரத்தையும், ஈகைக் குணத்தையும் கீழ்வருமாறு புகழ்கின்றார்.

**‘‘மலர்போல் மழைக்கண் மங்கையர் கணவன்**
**முனைபாழ் படுக்கும் துன்னருந் துப்பின்**
**இசைநுவல் வித்தின் நசையே ருழவர்க்குப்**
**புது நிறை வந்த புனலஞ் சாயல்**
**மதிமா றோரா நன்றுணர் சூழ்ச்சி**
**வில்நவில் தடக்கை மேவரும் பெரும்பூண்”** (**மலைபடுகடாம்,** 58-63)

என்று அழைக்கப்படுபவன் நன்னன். இவன்,

**‘தொலையா நல்லிசை உலகமொடு நிற்பப்**
**பலர்புறங் கண்டவர் அருங்கலம் தரீஇப்**
**புலவோர்க்குச் சுரக்கும் அவ நீகை மாரியும்**
**இகழுநர்ப் பிணிக்கும் ஆற்றலும் புகழுநர்க்கு**
**அரசுமுழுது கொடுப்பினும் அமரா நோக்கமொடு**
**தூத்துளி பொழிந்த பொய்யாவானின்**
**வீயாது சுரக்குமவ நர்மகி ழிருக்கையும்**
**நல்லோர் குழீஇய நாநவில் அவையத்து**
**வல்லாராயினும் புறமறைத்துச் சென்றோரைச்**
**சொல்லிக் காட்டிச் சோர்வின்றி விளக்கி**
**நல்லிதின் இயக்கும் சுற்றத் தொழுக்கமும்**
**ஞாயிறன்ன வவன் வசையில் சிறப்பும்”** (**மலைபடுகடாம்,** 70-85)

என்று மாரி போன்று கொடைக்கடன் இருக்கும் பேராண்மை மிக்கவனாகப் போற்றப்படுகின்றான். இத்தகு சிறப்புமிக்க நன்னனுக்குத் தீராத பழியொன்று ஏற்பட்டதை வரலாற்று நிகழ்வாகப் பரணர் குறுந்தொகையில் பதிவு செய்திடுகின்றார். கோசர் குலத்துப் பெண் ஒருத்தி ஆற்றில் நீராடிக் கொண்டிருக்கிறாள். அவ்வாற்று நீரில் பசுமாங்காய் மிதந்து வருகின்றது. அதனை எடுத்து ஆராயாமல் உண்டு விடுகின்றாள். நன்னன் தீர ஆராயாது அக்காயை உண்ட குற்றத்திற்கு ஈடாக அவளைக் கொலை செய்திட துணிந்திடுகிறான். இதையறிந்த கோசர்கள் எண்பத்தொரு யானைகளையும், அப்பெண்ணின் நிறையளவு தூய பொன்னாற் செய்த பதுமையையும் அளித்திட முன்வருகின்றனர். ஆறாத சீற்றம் கொண்ட நன்னன் தான் விரும்பிய வண்ணம் அப்பெண்ணை கொலை புரிந்திடுகின்றான். நன்னனது புகழ்வாழ்க்கையில் தீராப்பழியினை இந்நிகழ்வு ஏற்படுத்தி விடுகின்றது. நன்னது காவல் மரமாக மாமரம் சுட்டப்படுகின்றது.

**‘மண்ணிய சென்ற ஒள்நுதல் அரிவை**
**புனறரு பசுங்காய் தின்றதன் றப்பற்**
**எண்பத்தொன்று களிற்றொடு - அவள் நிறை**
**பொன்செய் பாவை கொடுப்பவும், கொள்ளான்,**
**பெண்கொலை புரிந்த நன்னன் போல**
**வரையா நிரையத்துச் செலீஇயளோ, அன்னை!”** (**குறுந்தொகை,** 292)

என்று நன்னனின் கொலைத்தொழில் தீங்கு சொல்லப்படுகின்றது. அப்பெண்ணுக்கு நன்னன் செய்த தீங்கு போன்று தலைவனைச் சந்திக்க விடாமற் இற்செறிப்பு செய்திட்ட நற்றாய் நிரையமாகிய நரகத்தில் செலுத்தப்படுவாளாகுக என்று தலைவி உரைத்திடுகின்றாள். தாயின் தீமையைச் சொன்னாலும் அவளது நல்உள்ளமும் போற்றப்படுகின்றது. அது போன்று

பெண்ணுக்குத் தீமை செய்தாலும் தாய்மைத் தன்மை உடையவன் நன்னன் என்பதும் குறிப்பால் உணர்த்தப்படுகின்றது.

பெண்கொலை புரிந்த துளு நாட்டு மன்னன் நன்னனைச் கோசர்கள் பழிவாங்கிட சூழ்ச்சி செய்கின்றனர். உண்டார்க்கு நீண்ட ஆயுள் தரும் மாமரத்தின் பிஞ்சைத் தின்ற கோசர்குலப் பெண்ணிற்குக் கொலைத் தண்டனை விதித்துக் கொன்றதால் கோசர்கள் அம்மரத்தை வீழ்த்திடச் சூழ்ச்சி செய்திடுகின்றனர். இதனைப் பரணர்,

**‘‘மகிழ்நன் மார்பே வெய்யையால் நீ;**
**அழியல் வாழி தோழி! - நன்னன்**
**நறுமா கொன்று ஞாட்பில் போக்கிய**
**ஒன்றுமொழிக் கோசர் போல,**
**வன்கட் சூழ்ச்சியும்; வேண்டுமால் சிறிதே” (குறுந்தொகை, 73)**

என்று கூறுகின்றார். தோழி களவுக்காலத்தில் பகற்குறியும், இரவுக் குறியும் வந்து நீங்கும் தலைவனை வரைதல் வேண்டி வலியுறுத்த ஊரும், ஐயரும் அறிந்ததாகக் கூறிப் பகற்குறியினையும், தாயும், தமரும் அறிந்தனர் என்று கூறி இரவுக்குறியினையும் மறுத்திடுகின்றாள். தோழியின் சூழ்ச்சி தலைவன் தலைவியை விரைந்து வன்புறை செய்திடல் வேண்டும் என்ற ஆர்வம் காரணமாக எழுந்த மறுப்பு ஆகும். நன்னனின் மாமரத்தை யானைகளால் பிணித்து வேரோடு அழித்தும், போரில் நன்னனையும் கோசர்கள் கொன்று விடுகின்றனர். இதுவே கோசர்கள் புரிந்த ‘**வன்கண் சூழ்ச்சி**’யாகும். இது தோழியாற் தலைவியின் களவுக்காதலுக்குத் தடைபோடப்பட்டுக் கற்புக் காதலாக மாற சூழ்ச்சி செய்யும்போது இத்தகு வரலாற்றுக் குறிப்பு பயன்படுத்தப்படுகின்றது.

கோசர்கள் செய்த சூழ்ச்சி என்ன என்பதைப் பரணர் குறுந்தொகை 298- பாடலில் தெரிவிக்கின்றார். கோசர்கள் ‘அகுதை’ என்பவனிடம் அகவல் மகளிரை அனுப்புகின்றனர். அவர்களின் ஆடல், பாடலில் மகிழ்ந்த அகுதை தந்தம் மிகுந்த யானைகளையும் தேர்களையும் பரிசுப் பொருட்களாக தருகின்றான். இந்த யானைகளைக் கொண்டே நன்னனின் மாமரத்தில் பிணித்து வேரோடு சாய்த்திடுகின்றனர். இதனால், சினமுற்றுப் போர்களம் சென்ற நன்னனைக் கோசர்கள் போரில் கொன்று பழி தீர்த்துக் கொள்கின்றனர்.

**‘இன்கடுங் கள்ளின் அகுதை தந்தை**
**வெண்கடைச் சிறுகோல் அகவன் மகளிர்**
**மடப்பிடிப் பரிசில் மானப்**
**பிறிது ஒன்று குறித்தது, அவன் நெடும் புறநிலையே” (குறுந்தொகை, 298)**

மடப்பிடி பரிசில் மூலம் நன்னனின் கொலைப்பழி பரப்பப்பட்டு அவனைக் கொன்றது போல, தலைவன் தலைவியை இரந்து, மடல் ஏறி, பழியைப் பரப்பி, உயிர் தீர் நாணினைக் கொல்லக் கூடாது என்பதே இப்பாடலின் அகக்குறிப்பாகும். நன்னன் அகவல் மகளிரைப் போற்றுபவன் என்பதால் அவர்களை வாயிலாக்கிக் கோசர்கள் தம் சூழ்ச்சியை நிறைவேற்றிக் கொள்கின்றனர். இதனை அகநானூறும்,

**‘நுணங்குகண் சிறுகோல் வணங்குஇறை மகளிரோடு**
**அகவுநர்ப் புரந்த அன்பின், கழல்தொழ**
**நறவு மகிழ் இருக்கை நன்னன்” (அகநானூறு, 97)**

என்று தெரிவிக்கின்றது.

பரணர் நன்னனால் ஆதரிக்கப்பட்டவர். அவன் அழிந்த போது அழுது அரற்றியவர். நன்னனைச் சூழ்ச்சியாற் அழித்த கோசர்களை அன்னி மிஞிலி நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னியின் படைத்தலைவனான அழுந்தூர்வேள், திதியன், குறும்பியன் ஆகியோர் உதவி வழியாக அழித்ததை எண்ணி மெய்ம் மலிந்து உவகையும் கொள்கின்றாள் இதனை அகநானூறு,

**‘பாசிலை அமனற் பயறு ஆ புக்கென,**
**வாய்மொழித் தந்தையைக் கண்களைந்து, அருளாது**

**ஊர்முது கோசர் நவைத்த சிறுமையின்**
**கலத்தும் உண்ணாள் வாலிதும் - உடாஅள்**
**சினத்தின் கொண்ட படிவம் மாறாள்**
**மறம்கெழு தானைக் கொற்றக் குறும்பியன்**
**செருஇயல் நல்மான் திதியற்கு உரைத்து, அவர்**
**இன் உயிர் செகுப்பக் கண்டு சினம் மாறிய**
**அன்னி மிஞிலி போல, மெய்ம்மலிந்து**
**ஆனா உவகையேம் ஆயினெம்" (அகநானூறு,** 262)

என்று குறிஞ்சித்திணையில் பதிவாக்கி தந்தையின் கண்களைக் களைந்திட்ட முது கோசர்களை ஓறுத்திட்ட அழிவை எடுத்துரைக்கின்றார். அன்னி மிஞிலியின் உவகை போன்று தலைவனைப் பெற்ற தலைவியின் மகிழ்வு பதிவு செய்யப்படுகின்றது.

**மலையமான் திருமுடிக்காரி**

மலையமான் திருமுடிக்காரி மலையன் என்று அழைக்கப் பெறுபவன். விற்போரிலும், ஈகையிலும் சிறந்தவன். சேரமான் பெருஞ்சேரல் இரும்பொறைக்குக் கொல்லிமலைத் தலைவன் வல்வில் ஓரியைக் கொன்று தேன் கமழும் மலையினைப் பரிசாக நல்கியவன். கோவிலூரும், முள்ளூரும் இவனுக்குரிய ஊர்களாகும். வற்றாது வளம் கொழிக்கும் பெண்ணை ஆறு இவனைப் புரந்தந்து வளம் செய்தது. இதனை '**முள்ளூர் மன்னன் கழல் தொடிக்காரி**' என்று வழங்கப் பெறுவதன் மூலம் தெளியலாம்.

**"துஞ்சா முழவின் கோவற் கோமான்**
**நெடுந்தேர்க்காரி கொடுங்கால் முன்றுறைப்**
**பெண்ணையம் பேர்யாற்று நுண்ணறல் கடுக்கும்**
**நெறியருங் கதுப்பின் என் பேதைக்கு" (அகநானூறு,** 35)

என்று குடவாயிற் கீரத்தனார் பாடல் வழியாகவும் அறியலாம். கபிலர், பரணர் முதலிய நல்லிசைச் சான்றோர்களாலும் பாடப்பெற்றவன். இவனது ஈகையும், வீரமும் நற்றிணையிலும், புறநானூற்றிலும், சிறுபாணாற்றுப்படையிலும் கூறப்படுகின்றது.

**"பல்லா நெடுநிரை வில்லின் ஒய்யும்**
**தேர்வண் மலையன்" (நற்றிணை,** 100)

**"தொலையா நல்லிசை விளங்கு மலையன்**
**மகிழாது ஈத்த விழையணி நெடுந்தேர்**
**பயன்கெழு முள்ளூர் மீமிசைப்**
**பட்ட மாரி யுறையினும் பலவே" (புறம்.** 123)

என்று கபிலராலும் போற்றி உரைக்கப்படுகின்றான். சிறுபாணாற்றுப்படையில் கடையெழு வள்ளல்களில் ஒருவனாகக் கொள்ளப் பெறுபவன் மலையமான் திருமுடிக்காரி ஆவான். இவனின் கொடைச்சிறப்பினை,

**"வாலுளைப் புரவியொடு வையகம் மருள**
**ஈர நன்மொழி இரவலர்க்கு ஈந்த**
**அழல்திகழ்ந்து இமைக்கும் அஞ்சுவரு நெடுவேல்**
**கழல்தொடித் தடக்கை காரி" (சிறுபாண். 91-95)**

என்று எடுத்துக்காட்டப்படுகிறது.

குறுந்தொகை 198ஆம் பாடலில் கபிலர், தலைவன், தலைவியைக் கனவில் புணர்ந்தவழி அவன் மார்பில் இருந்த சந்தன மணம் அவள் உடலில் காணப்பட்டதை அறிந்த தாய் ஐயுற்று புதுமணம் குறித்து சந்தேகம் கொள்கின்றான். இப்பாடலில் தலைவனின் மார்பில் கமழும் சந்தனம் திருமுடிக்காரியின் முள்ளூர் காட்டில் விளைந்துள்ள சந்தன மரங்களின் மணத்தை நினைவுறுத்துவதாகக் கூறப்படுகின்றது.

**'அடுபோர்**
**எஃகு விளங்கு தடக்கை, மலையன் கானத்து**

**ஆரம் நாறும் மார்பினை,**

**வாரற்கதில்ல; வருகுவள் யாயே"** (**குறுந்தொகை,** 198)

என்பதன் மூலம் போரை அடுகின்ற வேலினையும், அவ்வேல் விளங்குதற்குக் காரணமாகிய, பெரிய தடக்கைகளை உடைய திருமுடிக்காரியின் முள்ளூர்க் காட்டின் சந்தன மரங்களின் மணம் தலைவனின் மார்பிற்கு உவமையாக்கப்பட்டுப் போற்றப்படுகின்றது. இவனுடைய வேல் வெற்றிச் சிறப்பு முருகவேளுடன் ஒப்பிடப்படுகின்றது.

**'செவ்வேல், முள்ளூர் மன்னன், கழல் தொடிக்காரி"** (**அகம்.** 209)

என்றும் பதிவு செய்யப்படுகின்றது.

குறுந்தொகை 312ஆம் பாடலில் கபிலர் தலைவியின் இயற்கை மணம் கமழும் மேனியினைக் காரியின் முள்ளூர் மலைக்காட்டின் மணத்தோடு ஒப்பிடுகின்றார். தலைவி இருவேறுபட்ட ஒழுகலாறும் கள்ளத்தன்மையும் வாய்ந்தவளாகத் தலைவனால் கூறப்படுகின்றாள். ஒருவருக்குத் துணைவலியாய் அமைந்து பிறரிடம் மாறுபாடு கொண்ட மலையமான் திருமுடிக்காரி போன்றும், முள்ளூர் காட்டின் இயற்கை மணம் பெற்றும், கங்குல் புணர்ச்சியால் களைந்த கூந்தலை மயிற்சாந்தும், எண்ணெய்யும் தடவி நம்மை முகத்தால் விரும்பாதவள் போன்றும் விளங்குவதாகத் தெரிவிக்கின்றான். தலைவியின் இரட்டை மனநிலை ஈங்கு சித்திரிக்கப்படுகின்றது.

**''இரண்டு அறி கள்வி நம் காதலோளே,**
**முரண்கொள் துப்பின் செவ்வேல் மலையன்**
**முள்ளூர்க் கானம் நாற வந்து**
**நள்ளென் கங்குல் நம் ஓரன்னள்;**
**கூந்தல் வேய்ந்த விரவுமலர் உதிர்த்து**
**சாந்து உளர் நறுங்கதுப்பு எண்ணெய் நீவி**
**அமரா முகத்தால் ஆகித்**
**தமர் ஓரன்னள், வைகறையானே"** (**குறுந்தொகை,** 312)

என்பதன் மூலம் நன்மகளிர் உடலில் இயல்பாகவே நறுமணம் கமழும். இத்துடன் முள்ளூர்கானத்தின் சந்தன மணமும் இணைக்கப்பட்டு தலைவியின் மேனி எழில்நலம் உவமிக்கப்படுகின்றது. தலைவியின் இரண்டு அறிகள்வியின் முரண் நிலைப்பாடு தெரிவிக்கப்படுகின்றது.

கொல்லிமலைத் தலைவன் வல்வில் ஓரி மலையமான் திருமுடிக்காரியால் கொல்லப்பட்டச் செயலைப் பரணர் குறுந்தொகை 199ஆம் பாடலில் வரலாற்றுப் பதிவாக்கியுள்ளார். **'மழவர் பெருமகன், மாவண் ஓரி"** (நற்றிணை,52) காரியால் கொல்லப்பட்டுக் கொல்லிமலை நாட்டினைச் சேரனுக்கு ஈந்து அவனது நட்பைப் பெற்றக் குறிப்பினை அகநானூறு கீழ்வருமாறு தெரிவிக்கின்றது.

**''முள்ளூர் மன்னன் கழல்தொடிக் காரி**
**செல்லா நல்லிசை நிறுத்த வல்வில்**
**ஓரிக் கொன்று சேரலற் கீத்த**
**செவ்வேர்ப், பலவின் பயங்கெழு கொல்லி"** (**அகம்.** 209)

என்று வருதலால் உரைக்கப்படுகின்றது. பேரிசையுடன் முள்ளூர்கண் வந்து துவன்றிய ஆரியர்களை வெற்றிக் கொண்ட காரிக்கு இது எளிதான செயலாக அமைந்திடுகின்றது.

**''பெறுவது இயையாது ஆயினும், உறுவது ஒன்று**
**உண்டுமன் வாழிய - நெஞ்சே - திண்தேர்க்**
**கைவண் ஓரி கானம் தீண்டி**
**எறிவளி கமழும் நெறிபடு கூந்தல்"** (**குறுந்தொகை,** 199)

என்பதன் மூலம் திண்ணிய தேரும், வள்ளன்மை உடைய கையும் உடைய ஓரியின் கொல்லிமலைக் கானகத்தைத் தடவி வீசுகின்ற கோடைக்காற்று போன்று மணம் கமழும் நெறித்தத் தாழிருங் கூந்தல் உடையவள் தலைவி. தலைவன் உற்ற காம நோய்க்கு மருந்து அவளே. இப்பிறவியில் இவ்வுலகில் அவளை அடைவது கிட்டதாயினும் மறுபிறப்பில் அவளது நட்பு நிலைபெறுதல் வேண்டுமென்று நெஞ்சிற்குத் தலைவன் உரைத்திடுகின்றான்.

**வல்வில் ஓரி**

கொல்லிமலைக் கோமான் ஓரி. ஓரி பல பொருள்களில் ஊடுறுவிச் செல்லுமாறு அம்பெய்திடும் ஆற்றல் சான்றவன் ஆதலால் வல்வில் ஓரி என்றழைக்கப்படுகின்றான். இவன் குதிரைக்கும் ஓரி என்று பெயர். கடையெழு வள்ளல்களுள் ஒருவன். இவன் '**வல்வில் ஓரி கொல்லி குடவரை**', '**ஓரி பல்பழப் பலவின் பயங்கெழு கொல்லி**', '**கொல்லியாண்ட வல்வில் ஓரி**' என்றெல்லாம் போற்றப்படுதலால் கொல்லிமலையும் அதனைச் சார்ந்த நாடும் ஓரிக்கே உரியதாகும் என்பது பெறப்படும். மலையமான் திருமுடிக்காரியால் கொல்லப்பட்டவன். இதனை நற்றிணை '**பழவிறல் ஓரிக் கொன்ற ஒரு பெருந்தெருவில் காரி புக்க நேரார் புலம்போல்**' (**நற்றிணை**, 320) என்று பதிவு செய்துள்ளது.

குறுந்தொகை 100ஆம் பாடலில் கபிலர் ஓரியின் கொல்லிமலையில் அமையப் பெற்ற கொல்லிப்பாவை போன்று தலைவி திகழ்வதாகவும், அவளது தோள்கள் தழுவுதற்கு அரிதானது என்றும் பாங்கற்கு உரைக்கின்றான்.

**''காந்தள் அம் சிலம்பில் சிறுகுடி பசித்தென**
**கடுங்கண் வேழத்துக் கோடு கொடுத்து உண்ணும்**
**வல்வில் ஓரி கொல்லி குடவரைப்**
**பாவையின் மடவந் தனளே**
**மணத்தற்கு அரிய - பணைப் பெருந்தோளே"** (**குறுந்தொகை**, 100)

என்று கொல்லிமலை மக்கள் பசிக்கும் போது வன்கண்மையுடைய யானைக் கொம்புகளை விற்று அதன் விலையால் பெறப்படும் உணவினை உண்டு வாழ்வர். இத்தகு வலிய வில்லையுடைய ஓரியின் கொல்லிமலையின் மேற்குப் பகுதியில் எழுதப்பட்ட பாவை போன்று காண்போரை வருத்தம் செய்திடுபவளாகத் தலைவி இருந்திடுகின்றாள். கொல்லிமலையில் கடவுள் எழுதிய பாவை இருப்பதை அகநானூறும் சுட்டுவது ஒப்பிடத்தக்கதாகும்.

**''கொல்லி .... கடவுள் எழுதிய பாவையின்**
**மடவதின் மாண்ட மாஅயோளே"** (**அகநானூறு**, 62)

என்றுரைப்பதன் மூலம் தலைவி பாவையின் மடவந்தனள் போன்று இருப்பதால், அவளது தோள் மணத்தற்கு அரியதாக அமைவதாகப் பரணரால் சுட்டப்படுகின்றது. தலைவி குடவரை சூர் மகள் அணங்காக இருப்பதால் தெய்வமகளிர் என்பதும் குறிக்கப்படுகின்றது.

**உறையூர்**

சோழர்களது வலிமை பொருந்திய நகரமாக விளங்கியது உறையூர். காவிரி பாயும் நதிக்கரையில் அமைந்திருப்பது. 'அறம்துஞ்சும் உறந்தை' என்று சங்க காலத்தில் அழைக்கப்பட்ட உறையூர் பொன்னி புனல் பெருக்கால் செந்நெல் விளைத்தும் செழுமைப் பெற்றது. காவிரி நதி பாய்ந்து செல்வதால் நுண்ணிய கருமணல் துகள்கள் நீர் நின்று வடிந்தாற் போன்று நீண்டு, வடிந்து நல்ல நெறிப்புடன், நல்ல மணமும், தன்மையும் உடையதாக தலைவியின் தேன்பால் கூந்தல் விளங்குகின்றது. இத்தகு வளங்கெழு வண்டல் மண் படிந்த நீர்த் துறையினை உடையது உறையூர். இயற்கைப் புணர்ச்சிகண் தலைவியின் கூந்தலாகிய மெல்லணையில் துயில்கின்றான் தலைவன். கூந்தல் பாயலைத் தலைவன் உறையூர் காவிரிநீர்துறையின் நுண்ணிய கருமணல் மணத்துடன் ஒப்பிடுகின்றான். இளங்கீரனார் என்னும் புலவர் படைத்தப் பாடல் இதுவாகும்.

**''யான் நயந்து உறைவோள் தேம்பாய் கூந்தல்,**
**வளம்கெழு சோழர் உறந்தைப் பெருந்துறை**
**நுண்மணல் அறல் வார்ந்தன்ன,**
**நல்நெறியவ்வே, நறுந் தண்ணியவே"** (**குறுந்தொகை**, 116)

என்று ஊற்றுணர்ச்சி இல்லாத கூந்தல் வழங்கும் இன்பமே இத்தகையது என்றால் அவளுடைய ஒன்னா (ஏனைய) உறுப்புகள் தரும் இன்பம் எத்துணை சிறப்புடையதாக இருக்குமென்று

தலைவனால் தலைவியின் மேனி நன்னலம் பாராட்டப்படுகின்றது. தலைவியின் பேரழகும், இன்பமும் சோழர்களின் உறந்தை காவிரி நீர்த் துறைக்கு ஒப்பிட்டு சிறப்பிக்கப்படுகின்றது.

**தொகுப்புரை**

குறுந்தொகையில் மருதத்திணையை அடுத்து குறிஞ்சித் திணையில் எட்டுப் பாடல்களில் வரலாற்றுக் குறிப்புகள் பதிவாகி உள்ளன. நாலூர்க் கோசர்கள் எனப்படும் வடுகர்கள் பற்றிய பதிவுகளைப் பரணர் வரலாற்றுக் குறிப்புகளாகத் தந்திடுகின்றார். தங்கள் குலப் பெண்ணைக் கொன்ற நன்னனைச் சூழ்ச்சி செய்து கோசர்கள் கொன்ற குறிப்பும், கோசர்களை அன்னி மிஞிலி குறும்பியன், திதியன் உதவியோடு அழித்த செயலினையும் பரணர் வரலாற்று உணர்வோடு பதிவாக்கி உள்ளார்.

மலையமான் திருமுடிக்காரி வல்வில் ஓரியைக் கொன்ற நிகழ்வும், அவனது முள்ளூர்க் காட்டின் சந்தன மரங்களின் மணம் தலைவனின் சந்தன மணம் கமழும் மார்பிற்கும், இயற்கையாகச் செண்பக மணம் கமழும் தலைவியின் மேனியில் முள்ளூர் காட்டின் சந்தன மணம் கமழ்கின்ற நிலையிலும் ஒப்பிடப்படுகின்றது. காரி வல்வில் ஓரியைக் கொன்றதைப் பரணர் எடுத்துரைக்கின்றார். வல்வில் ஓரியின் கொல்லிமலைக் கானகத்தைத் தழுவி வீசுகின்ற கோடைக் காற்றின் மணம் தலைவியின் கூந்தல் மணத்திற்கும் உவமையாக்கப்படுகின்றது.

வல்வில் ஓரி கொல்லி மலைக் கோமான். கொடை மடமும், படை மடமும் நிரம்பப் பெற்றவன். கொல்லிமலை மேற்குப் பகுதியில் கடவுளால் எழுதப் பெற்ற பாவையினைப் பெற்றவன். இத்தகு கொல்லிப்பாவையின் பேரழகு தலைவியின் எழில்நல மேனிக்குக் கபிலரால் ஒப்பிட்டு உவமிக்கப்படுகின்றது.

சோழர்களது வளமையும், வலிமையும் பொருந்திய ஊராக உறையூர் இருந்திடுகின்றது. காவிரி பாய்வதால் நீர்நிலைகள் நிரம்பப் பெற்ற ஊராகக் காட்சி தந்திடுகின்றது. சோழர்களது காவிரி நீர்த்துறையின் நுண்ணிய கருமணல் மணத்தோடு தலைவியின் மணம் வீசும் அறல் மருள் கருங்கூந்தலை இணைத்து இளங்கீரனார் போற்றி உரைத்திடுகின்றார்.

**சான்றெண் விளக்கம்**

1.தனிநாயகம் அடிகள், நில அமைப்பும் தமிழ்க் கவிதையும், பக்.84, 85.

**பயன்பட்ட நூல்கள்**


1.பசுபதி, ம.வே. – செம்மொழித் தமிழ் இலக்கண இலக்கியங்கள், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்-10, பதிப்பு – 2010.

2.தனிநாயகம் அடிகள், (தமிழில் க. பூரணச்சந்திரன்), நில அமைப்பும் தமிழ்க் கவிதையும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை-98, பதிப்பு - 2014.

3.தமிழ்நாட்டு வரலாற்றுக்குழு, தமிழ்நாட்டு வரலாறு, சங்க காலம் அரசியல், தமிழ்நாடு பாடநூல் மற்றும் கல்வியல் பணிகள் கழகம், சென்னை, மூன்றாம் பதிப்பு 2022.


**REFERENCES:**


1.Pasupathi, M.V. – Classical Tamil Grammar Literature, Tamil University, Thanjavur-10, Edition – 2010.

2.Thaninayagam Adigal, (in Tamil by K. Pooranachandran), Land Structure and Tamil Poetry, New Century Book House, Chennai-98, Edition – 2014.

3.Tamil Nadu Historical Committee, Tamil Nadu History, Sangam Period Politics, Tamil Nadu Textbook and Educational Services Corporation, Chennai, Third Edition 2022.

தமிழ்மணம் சர்வதேசத் தமிழ் ஆய்விதழ்
**Tamilmanam International Research Journal of Tamil Studies | ISSN(o): 3049-0723**
[Impact Factor: 9.47] Monthly, Peer-Reviewed, Refereed, Indexed Journal with IC Value : 86.87
**Volume - 1, Issue - 09, June - 2025**



DOIs: https://doi.org/10.63300/tm0109202506 --:-- Research Paper

# LGBTQ+ Individuals in Nanum Innoru Nanum Modern Poetry

**[1] P. Manikkavasaham, [2] Dr. R. Subramani,**
[1] PhD Research Scholar (Full Time), Registration No.: BDU2110632779684, Government Arts College (Autonomous) Affiliated to Bharathidasan University, Karur – 639005
Email: [1]manikkavasaham98@gmail.com

[2] Research Guide, Associate Professor, Department of Tamil Studies, Government Arts College (Autonomous) Affiliated to Bharathidasan University, Karur - 639005

***Abstract:*** *"The history of human civilization is unfortunately intertwined with the persistent prevalence of systemic inequalities and discrimination. Longstanding issues such as rigid caste systems, inter-ethnic strife, profound economic disparities leading to widespread poverty, and horrific historical practices like female slavery have shaped social structures and created enduring patterns of marginalization. Recognizing this broad landscape of societal problems, each with its distinct historical trajectory and impact, this research article carves out a specific focus: to critically examine the lived experiences and significant hardships encountered by transgender individuals. Moving beyond a general acknowledgment of societal issues, the study will meticulously explore the specific problems transgender people confront – from social ostracism and discrimination to legal challenges and violence – and analyze the multifaceted reactions and stances of society towards them. This in-depth examination will be uniquely informed by, and grounded in, the powerful and insightful narratives presented within Andal Priyadarshini's poetry book, 'I Am Another Me,' using its verses as a lens to understand the emotional and practical realities of navigating a world often hostile or indifferent to transgender identities."*

***Key Words:*** *Me and another me, habits, beliefs, family, civilization, society, LGBTQ+.*

# நானும் இன்னொரு நானும் புதுக்கவிதைகளில் பால்புதுமையர்

**[1] பி.மாணிக்கவாசகம், [2] முனைவர் இரா. சுப்ரமணி,**
[1] முழுநேர முனைவர் பட்ட ஆய்வாளர், பதிவு எண்: BDU2110632779684, அரசு கலைக் கல்லூரி (தன்னாட்சி) பாரதிதாசன் பல்கலை கழகம்
இணைவு பெற்றது, கரூர்-639005
[2] நெறியாளர், இணைப்பேராசிரியர், தமிழாய்வுத் துறை, அரசு கலைக் கல்லூரி (தன்னாட்சி) கரூர்-639005

***ஆய்வுச் சுருக்கம்:***
*சமூகம் என்பது பல்வேறு அடுக்குகளையும், சிக்கல்களையும் தன்னகத்தே கொண்ட ஒரு பெருவெளி. காலம் காலமாக இங்கு ஆழமாக வேரூன்றியுள்ள சாதிப் பாகுபாடு, இன வேறுபாடுகள், பொருளாதார ஏற்றத்தாழ்வுகள், பாலின சமத்துவமின்மை (பெண் அடிமைத்தனம் உட்பட) போன்ற சமூகப் பிரச்சனைகள், மனித வாழ்வின் இயல்பான நீரோட்டத்திற்குத் தடைக்கற்களாக அமைந்து, பல்வேறு பிரிவினரின் வாழ்க்கையைச் சிதைத்து வருகின்றன. இத்தகைய பொதுவான சமூகக் கட்டமைப்பிற்குள்ளும், குறிப்பிட்ட சில சமூகப் பிரிவினர், தனித்துவமான இன்னல்களையும், சவால்களையும் அன்றாடம் எதிர்கொள்ள வேண்டியுள்ளது. அத்தகையோருள் ஒரு பகுதியினரே*

*பால்புதுமையர் அல்லது பாலினம் மற்றும் பாலியல் சிறுபான்மையினர் ஆவர். மரபு மற்றும் பெரும்பான்மைச் சமூகத்தின் பார்வையில் இருந்து மாறுபட்ட இவர்களது வாழ்வு, தவறான புரிதல்கள், பாரபட்சமான அணுகுமுறைகள், புறக்கணிப்பு, குடும்பத்தினரின் எதிர்ப்பு, சமூகத் தனிமைப்படுத்தல், மன உளவியல் ரீதியான அழுத்தங்கள், வன்முறை போன்ற எண்ணற்ற இடர்பாடுகளுக்கு உள்ளாகிறது. இவர்களைப் பற்றிய சமூகத்தின் மனப்பான்மை, பார்வை மற்றும் அதற்குப் பின்னணியில் உள்ள காரணிகளை ஆராய்வது இன்றைய காலகட்டத்தில் அவசியமான ஒன்றாகும். இவ்வாய்வுக் கட்டுரை, கவிஞர் ஆண்டாள் பிரியதர்ஷினி அவர்களின் சமூக முக்கியத்துவம் வாய்ந்த படைப்பான 'நானும் இன்னொரு நானும்' எனும் கவிதை நூலை முதன்மை ஆதாரமாகக் கொண்டு, பால்புதுமையர் வாழ்வியலில் அவர்கள் எதிர்கொள்ளும் சிக்கல்களையும், சவால்களையும், அத்துடன் பால்புதுமையர்களைப் பற்றிய பரந்துபட்ட சமூகத்தின் நிலைப்பாடுகள் மற்றும் அணுகுமுறைகளையும் இலக்கிய நோக்கில் ஆழமாக ஆராய முற்படுகிறது. இக்கவிதை தொகுப்பில் வெளிப்படும் பால்புதுமையரின் அக உணர்வுகள், சமூகத்துடனான அவர்களின் போராட்டங்கள், ஏக்கங்கள், எதிர்பார்ப்புகள் ஆகியவை ஆய்வு செய்யப்பட்டு, சமகால சமூகத்தில் இவர்களுக்கான இடம் மற்றும் பாதுகாப்பு குறித்தான முக்கிய விவாதங்களை முன்னெடுப்பதே இவ்வாய்வின் முக்கிய நோக்கம் ஆகும். இந்த விரிவாக்கம், ஆய்வு மேற்கொள்ளப்படும் பரந்த சமூகப் பிரச்சனைகள் தொடங்கி, ஆய்வு எதன் மீது குறிப்பாக கவனம் செலுத்துகிறது (பால்புதுமையர் பிரச்சனைகள்), என்னென்ன அம்சங்களை ஆராய்கிறது (இன்னல்கள், பிரச்சனைகள், சமூக நிலைப்பாடுகள்), மற்றும் எந்த இலக்கியப் படைப்பை அடிப்படையாகக் கொள்கிறது (நானும் இன்னொரு நானும்) என்பதையும் இன்னும் விரிவாகவும், தெளிவாகவும் எடுத்துரைக்கிறது*

***குறிப்பு சொற்கள்*** *: நானும் இன்னொரு நானும், பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள், குடும்பம், நாகரிகம், சமுதாயம், பால்புதுமையர்*

**முன்னுரை:**

தமிழில் புதுக்கவிதைகள் எதரிப்பு இலக்கியத்தின் வடிவம் உலகில் தமிழ் சமூகம் எங்கெல்லாம் மானுடம் சிதைகிறதோ அங்கு எல்லாம் தனது கணைகளைச் செலுத்தக் காத்துக் கொண்டிருப்பவை புதுகவிதைகள் மானுடத்தின் அவலங்களை வெளிக்கொணர்வதில் பெரும் முயற்சியில் புதுகவிஞர்கள் புதுக்கவிதையில் தனித்துவத்தை விதைத்து கொண்டு வருகிறார்கள். தற்காலத்தில் சமூகப் பிரச்சனைகள் மற்றும் அதற்கான தீர்வுகள் புதுக்கவிதைகளில் பதிவு செய்து வருகின்றன. சுற்றுச்சூழல் முதல் பால்புதுமையர் வாழ்வியல் வரை புதிய புதிய உண்மைத்துவம் புதுக்கவிதைத் துறையில் நிகழ்து கொண்டே இருக்கின்றன.

**சமூகம்:**

ஒரே வீட்டில் கணவன் மனைவி குழந்தைகள் தந்தை தாய் சகோதரன் சகோதரி அத்தை மாமன்சித்தப்பன் சித்தி பாட்டன்பாட்டி மற்றும் உற்றார் உறவினரோடு ஒரு குறிப்பிட்ட மக்கள் குழுவைக் குறிப்பது சமூகம் ஆகும். ஒரே மாதிரியான புவியியல் நிலப்பகுதியில் வாழும் மக்கள் குழுவையும் சமூகம் எனலாம். பல தரப்பட்ட சமூகங்கள் குடும்பத்துடன் வாழ்ந்து வருகின்றன. இதில் பால்புதுமையர்கள் தனித்துவிடப்பட்ட நிலையில் ஒன்றினைந்து அவர்கள் அனைவரும் ஒற்றுமையுடன் வாழ்ந்து வருகின்றன.

அடையாளம் இழந்து ஆதரவற்றவராய் வீட்டிலேயே அகதியாய் உணர்வுகளுக்கும் உணர்ச்சிகளுக்கும் இடையே நடக்கும் உணர்வு போராட்டத்தில் வெற்றி பெற்று பல சாதனைகள் படைத்து வருகிறார்கள்.

"சோர்வடையும் சோம்பேறிகள் அல்ல நாங்கள்
புரட்சி செய்யும் பீனிக்ஸ் பறவைகளே

சமூகத்திற்குச் சாட்டை அடியாய்
சாதித்துக் காட்டி வருகிறோம் 1

**சமுதாயம்:**

ஒரு சிறிய நிலப்பரப்பில் ஒரு பொது வாழ்க்கை வழியைப் பின்பற்றிக் கூட்டமாக வாழும் மக்கள் தொகுதி சமுதாயம் எனப்படும். இஃது மக்கள் ஒன்று கூடி ஒன்றுபட்ட எண்ணத்துடன் ஓர் இடத்தில் வாழும் மக்கள் அமைப்பைக் குறிக்கும். சமுதாயம் என்ற சொல்லும் சமூகம் என்ற சொல்லைப் போல பல பொருள்களில் பயன்படுத்தப்படுகின்றன. சமுதாயம் என்பது இந்த உலகத்தைக் குறிக்கும் வகையில் இச்சொல் பயன்படுத்தப்படுவதுண்டு.

சமுதாயத்தில் வாழும் மக்கள் ஒற்றுமையுடன் வாழும் போது தான் சமுதாயத்திற்கான ஒரு அமைப்பை பெறுகிறார்கள் எனலாம்.சங்க இலக்கிய நூல்களில் ஒன்றான புறநானூற்றில் மக்கள் எவ்வாறு வாழ்ந்துள்ளனர். அவர்கள் சமுதாயத்தை எவ்வாறு கையாண்டுள்ளனர் என்ற செய்தியை அறிய முடிகிறது. இதனை
யாதும் ஊரே யாவரும் கேளீர் 2
என்ற பாடல் கூறுகின்றன.

கவிதையில் கவிஞர்கள் சமுதாயத்தில் வாழும் மக்கள் ஒற்றுமையுடன் வாழும் போது தான் சமுதாயத்தில் அனைவரும் உயர்ச்சி அடைய முடியும் சமுதாயத்தில் ஒரு அமைப்பை பெறுகிறது எனலாம். எனவே, மக்கள் ஒற்றுமையுடன் வாழ்க்கையை வாழ வேண்டும் என்று பாரதியார் தன் பாடலில் கூறியுள்ளார்.

**ஒன்றுபட்டால் உண்டு வாழ்வே நம்மில்**
**ஒற்றுமை நீங்கில் அனைவருக்கும் தாழ்வே**
**தன்றிது தேர்த்திடல் வேண்டும் - இந்த**
**ஞானம் வந்தால்பின் நமக்கெது வேண்டும் 3**

என்ற பாடலில் ஒற்றுமையுடன் இருந்தால் மட்டுமே அனைத்து மக்களும் ஒன்றுபட்டு வாழ முடியும் என்கிறார் பாரதியார்.

**பால்புதுமையரின் குடும்பச் சிக்கல்கள்:**

குடும்பத்தில் ஆணாகப் பிறந்தும் வளரும் இளம்பருவத்தில் பெண்மை உணர்வு தலையெடுக்கும் போது பால்புதுமையர்களின் குடும்ப உறுப்பினர்களின் வெறுப்பிற்கு ஆளாகின்றனர். தாய், தந்தை, உடன்பிறந்தோர்கள் முதல் அவர்கள் மீது சுமத்தும் வெறுப்புகளுக்கு ஆளாகி மனக் காயங்களுடன் வாழ்கின்றனர். பெண்மைச் சார்ந்த பெண்களுக்கே உரிய செயல்களில் பால்புதுமைத் தன்மை உள்ளவர்கள் ஈடுபடும்போது பொறுத்துக்கொள்ள முடியாத குடும்ப உறவுகள் அடித்து உதைத்து கொடுமைகளை நிகழ்துகின்றனர். இதனை

**“சிறுமிகளோடு விளையாட ஆசை**
**விளையாடினால் பூசை”4**

என்ற கவிதை இளம் பருவத்தில் தன்னை பால்புதுமையாராக உணர்ந்த பின் குடும்பத்தால் ஏற்படும் சிக்கலை இக்கவிதை உணர்த்துகின்றன.

இத்தகைய கொடுமைகளை தாங்கமுடியாத பால்புதுமையர்கள் 16 முதல் 22 வயதுகளில் குடும்பத்தை விட்டு வெளியேறி தங்கள் இனம் சார்ந்தவர்களைத் தேடிக்

கண்டுபிடித்து அவர்களுடன் வாழத் தொடங்குகின்றனர். குடும்ப அமைப்பில் ஆணாகப் பிறந்து பெண்ணாக மாறும் திருநங்கைகளும், பெண்ணாகப் பிறந்து ஆணாக மாறும் திருநம்பிகளும் குடும்ப உறுப்பினர்களுக்கு அதிர்ச்சியினையும்அவமானத்தையும் ஏற்படுத்துகின்றனர்.

பால்புதுமையர்கள் குறித்த சரியான புரிதல் இன்மையே இத்தகைய அவலங்கள் தொடர்வதற்கு காரணங்கள். தனது உள்ளத்தில் பொங்கிடும் பெண்மை உணர்வுகளை குடும்ப உறவுகளின் பார்வைக்கு கூட வெளிக்காட்டாமல் மறைத்து புலங்கும் அவலத்தை கவிஞர்

**“பூட்டிய அறைக்குள்**
**தனிமை நடனம்**
**ரகசியப் பெண்மை**
**அவஸ்தை உண்மை”5**

இவ்வாறு பால்மாற்றத்தை குடும்ப உறவுகளின் மிரட்டல்களுக்கும் பயந்து ரகசியமாக வைத்துக் கொள்ளும் துயர நிலையினை எடுத்துரைக்கின்றார். பூவாக மலர்ந்து மணம் வீச வேண்டிய பால்புதுமையர்கள் குடும்ப உறுப்பினர்களின் வெறுத்து ஒதுக்குதல் காரணமாக ஆண்களின் ஏமாற்றுத் தனங்கள் மூலமாக மயானப் பூவாக மாறிவிடும் துயரத்தை

**“அல்லிப்பூ**
**நான்**
**கொள்ளிப்பூவாக**
**மாற்றுவது நீ”6**

என்று பதிவு செய்கின்றார்.

ஆணுடை அணிந்திடும் பெண்களை வரவேற்கும் குடும்பமும் சமூகமும் பால்புதுமையராக பிறந்த ஒருவர் பெண் உடை மற்றும் ஆண் உடைத் தரிக்கும் ஆசைகளுக்கு தடைப் போடுவதை கவிஞர் பின்வருமாறு விமர்சனம் செய்கின்றார்.

**ஆண் உடை**
**வசதி நங்கைக்கு**
**சதி திருநங்ககைக்கு”7**

என்று பெண் உடைகள் உடுத்த விரும்பும் பால்புதுமையர்களின் ஆசையை குடும்பமும் சமூகமும் அனுமதிக்காமல் இருப்பதை கண்டனம் செய்கின்றார். பால்புதுமையர்கள் தங்களுக்குள் பெண்மை உணர்வு ஏற்படும் போது குடும்பத்தினரின் அன்பையும் அரவனைப்பையும் எதிர்நோக்கி நிற்கின்றனர். ஆனால் குடும்பத்தினரோ சமூகத்தில் அவளை ஆண்மகனாக காட்டும் ஆண்குறிகள் மட்டுமே கவனம் செலுத்துவதை கவிஞர்

**“எனக்குக் குறி**
**அம்மா அப்பா**
**உடன் பிறந்தோர்**
**குடும்பத்தாருக்குக் குறி**
**என் குறி மட்டும் 8**

என்ற கவிதையின் மூலம் எடுத்துரைக்கின்றார்.

பால்புதுமையர்கள் குடும்பத்தை விட்டு வெளியேற்றப்படும் போது தன் பாலின உறவுகளோடும் மற்றும் தங்களை புரிந்து கொண்டவர்களோடும் ஜமாத்தாக வாழத் தொடங்குகின்றனர். பால்புதுமையர்கள் புதிய பெண்களுக்கான குடும்ப அமைப்பை உருவாக்கி இருப்பதாக கவிஞர் பாராட்டுகின்றார்;.

**"அரவாணி ராஜ்யம்**
**அல்லி ராஜ்யம்**
**கள்ளி ராஜ்யம்**
**இல்லையே"9**

என்று பால்புதுமையர்களுக்குகென்று உருவான புதிய குடும்ப உறவுகளில் கள்ளத்தனம் இல்லாமையை இக்கவிதையின் மூலம் அறியலாம்.

சமுதாயப் பார்வையில் பால்புதுமையர்:

பால்புதுமையர் சமூகத்தின் பார்வையில் ஒடுக்கப்பட்ட மக்கள் போன்று விழிம்பு நிலை அவல மனிதர்களாகவே பார்க்கப்படுகின்றனர். குடும்ப வெறுப்பால் அவ்வமைப்பை விட்டு வெளியேறும் பால்புதுமையர்களின் சமூகத்தின் பார்வையில் இன்னும் கொடுராமாக நடத்தப்படுகின்றனர். இத்தகைய பார்வைகள் மாற வேண்டும் என்னும் நோக்கில் கவிஞர் ஆண்டாள் பிரியதர்ஷினிகவிதைகள் அமைகின்றன.

குடும்பத்தை விட்டு வெளியேறும் பால்புதுமையர்கள் உயிர் வாழ்வதற்கான போராட்டத்தில் தெருவில் 'கடைக்கேட்டல்' (யாசகம் கேட்டல்) அவலத்திற்கும் பாலியல் தொழிலிற்கும் தள்ளப்படும் சூழ்நிலையை கவிஞர் பின்வருமாறு எடுத்துரைக்கின்றார்.

**"கைகழுவி அனுப்புகிறது குடும்பம்**
**கல்லறைக்கு**
**கையேந்த வைக்கிறது சமூகம்**
**சில்லறைக்கு"10**
**பாலியல் செய்தேனும்**
**பசி தீர்க்க வேண்டும்**
**வயிற்று உக்ரம் எனக்கு**
**உடம்பு வக்கரம் உனக்கு"11**
**"கடை கேட்கிறேன்**
**குடல் பசிக்கு**
**என்னைக் கேட்கிறாய்**
**உடல் பசிக்கு"12**

என்று உயிர் பசிக்காக கடைக்கேட்டல் (யாசகம் கேட்டல்) உடலை விற்று சமூகத்தில் வாழ்ந்திடும் பால்புதுமையர்களின் துன்பங்களை பதிவு செய்கின்றார். பால்புதுமையர்களும் மனிதர்கள் தான் என்பதை உணரவிரும்பாத சமூகம் அவர்களை கேவலப்படுத்துவதையும் பல பட்டப்பெயர்களையும் சூடி மகிழ்வதையும் அதையும் மீறி வாழ்ந்திட துடிக்கும் பால்புதுமையரின் வாழ்வியல் ஆசையினை கவிஞர் பின்வருமாறு சுட்டுகின்றார்.

**"நான் யார்?**
**நீ யாரோ**
**அதேதான்"13**
**"சுவாசிக்க விடு**
**எனக்கும் பங்குண்டு**
**பூமிக்காற்றில்"14**

என்று பூமிக்காற்றில் பால்புதுமையர்களுக்கும் பங்கிருப்பதை உணர்த்துகின்றார். அஃறிணையாக பார்க்கும் சமூகத்தையும் கேலி செய்வோரையும் ஒரு பொருட்டாக மதித்திட வேண்டாம் என்பதனையும் தனது கவிதைகளில் வலியுறுத்துகின்றார்.

பெண்மை உணர்வுகள்:

ஒரு குடும்பத்தின் வளர்ச்சியில் தாய் முக்கியமான நிலையைப் பெறுகிறார். அப்படிப்பட்ட தாய்மைத்துவத்தை அடையாத தாய்மை என்று தன்னையே கருவாக சுமக்கும் பால்புதுமையரின் தாய்மை உணர்வை வெளிப்படுத்தும் விதமாக

"பெண்ணை
கர்ப்பம் சுமக்கும்
ஆண் நான்"15

இக்கவிதையை படைத்துள்ளார்.

இதே போன்று தாய்மை அடையாத தாய்மைத்துவத்தினை திருநங்கை கல்கி அவர்களன் ';குறி அறுத்தேன்' என்ற கவிதை நூலில் பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

**"தொன்மம் தொட்டுத் தொடர்கிறது**
**எங்களது பாலினம் தாய்மையடையாத**
**தாயாய்த் தனித்துவத்துடன்**
**கருவறை இருந்திருத்தல்**
**தலைமுறை கண்டிருப்பேன்"16**

பால்புதுமையர் மேற்கொள்ளும் துறவு என்பது ஆணாசையைத் துறப்பாதாகும். இதனை கவிஞர்

**பெண்ணாசை துறப்பதா**
**துறவு?**
**வெங்காயம்**
**நான் துறப்பது**
**துறவியினும் உ**
**நான்"17**
**"எனக்கு**
**ஆண் உசத்தியுமல்ல**
**ஆண்மை தேவையுமல்ல**
**பெண்ணியவாதி நானே"18**

என்று ஆண் உருவுகளால் ஏற்பட்ட சமூக கட்டமைப்புகளை உடைக்கும் விதமாக பால்புதுமையர்கள் பற்றிய கவிதைகள் அமைந்திருக்கின்றன.

பாலியல் வன்முறைகள்:

பால்புதுமையராக வீட்டை விட்டு வெளியேறியவர்களுகக்கு உரிய வேலைவாய்ப்புகள் கிடைப்பதில்லை. இதனால் யாசகம் கேட்கின்றனர். இல்லையேன்றால் பெரிய நகரங்களில் சிவப்பு விளக்குப் பகுதிகளில் தங்களது உடலை விற்று வயிறு பிழைக்கின்றனர். பாலியல் வன்முறை பால்புதுமையர்கள் மீது அதிகம் நிகழ்த்தப்பட்டு வரும் சமூகக் கொடுமையாகும். பால்புதுமையர்கள் மீது பாலியல் வன்முறை புரிந்திடும் மனிதர்களைக் காட்டிலும் மிருகங்களான சிங்கம், புலி போன்றவை மேலானவை. இதனை

**"சிங்கம் புலி தெய்வம்**
**எனது சதைக்கு**
**அலையும்**
**உன்னை விட"19**

என்று சதையினைப் புசித்திடும் வல்லூறுகளாக ஆண் வகக்கிர பாலியல் சுரண்டல்வாதிகளை இக்கவிதையின் மூலம் விமர்சனம் செய்கின்றனர்.

பாலியல் தொழில் புரிந்து வயிற்றுப் பசியினைத் தீர்க்கவேண்டிய அவல வாழ்வு பால்புதுமையருக்கு இருப்பதை பின்வருமாறு குறிப்பிடுகின்றார்."பாலியல் செய்தேனும் பசி தீர்க்க வேண்டும்

**வயிற்று உக்ரம் எனக்கு**
**உடம்பு வக்ரம் உனக்கு"20**

ஆணும் பெண்ணும் சமம் என்ற நிலையில் பால்புதுமையரின் நிலைகள் மட்டும் சமம் இல்லாமல் வேதனையை சுமந்து வருகின்றன. இதனை

**"வேதனையில் திருநங்கைகய்**
**சமம் என்று இல்லாததால்"21**

என்ற பாலினத்தின் சமத்துவத்தை 'மனதின் கிறுக்கல்கள்' என்ற கவிதை நூலில் இடம்பெற்ற இக்கவிதையின் மூலம் அறியலாம்.

பால்புதுமையரின் உரிமைகள்:

பால்புதுமையர்களுக்கு சமூகம் அளிக்கப்பட வேண்டிய உரிமைகள் பல உள்ளனர். விளிம்பு நிலை மக்களாக வாழ்ந்து வரும் அவர்கள் இனம், குடும்பம், சமூகத்தில் ஒடுக்கதலுக்கு உள்ளாகி வாய்ப்பேச முடியாத ஊமையாய் இருக்கின்றனர். அவர்களுக்கான உரிமைகளை ஆண்டாள் பிரியதர்~pனி தனது கவிதைகளில் வெளிப்படுத்தியுள்ளார்.

ஆடு மாடுகள் போன்ற விலங்கினங்கள் தங்குவதற்கு கொட்டகை அமைக்கும் மனிதர்கள் பால்புதுமையருக்கு வீட்டை வாடகைக்கு கூட தர மறுக்கின்றனர். இதனை

**தர மறுப்பதேன்**
**வாடகை வீடு**
**நீ வசிப்பதும்**
**வாடகை வீடுதானே**
**சாஸ்வதமா**
**உன் உடம்பு22**

என்று நிதர்சன சிக்கல்களை எடுத்துரைக்கிறார்.

அரசியல்வாதிகள் பால்புதுமையர்களுக்கு எந்தவித நலத் திட்டங்களையும் செயல்படுத்தாத நிலையில் ஓட்டு வேண்டி வரும் செயலினை

**அரசியல் புரள்கிறது**
**கோடியில்**
**நான் புரள்கிறேன்**
**தெருக் கோடியில்**
**வோட்டுக் கேட்டுவா**
**செருப்பு பிஞ்சிடும்"23**

என்று தெருக்கோடியில் வசிக்கும் பால்புதுமையர்களுக்கு நலத் திட்டங்களைச் செய்யாத அரசியல்வாதிகளை ஓர் திருநங்கையின் கோபக்குரலாக கவிஞர் பதிவு செய்கின்றார்.

தொகுப்புரை:

பால்புதுமையர் சமூகத்தாலும், சமுதாயத்தாலும் குடும்பத்தாலும் இவர்கள் எதிர்கொள்ளும் சிக்கல்கள் அவர்களின் உணர்வுகள் குறித்தும் நானும் இன்னொரு நானும் என்ற கவிதை நூலில் இடம்பெற்ற கவிதைகளின் வாயிலாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன. மேலும் சமுதாயத்தில் நாம் அனைவரும் பால்புதுமையரிடம் பாகுபாடு வேறுபாடு காணாமல் அவர்களும் நம்மில் ஒருவராக கருத வேண்டும். சமுதாயத்தில் வாழும் மக்கள்

ஒற்றுமையுடன் வாழும் போது தான் அது சமூகத்திற்கான ஒரு அமைப்பைப் பெறுகிறது எனலாம். மேலும் அவர்களின் உணர்வுகளுக்கு மதிப்பளித்தல் வேண்டும். அரசு மற்றும் தனியார் துறைகளிலும் பணிகள் கிடைக்கப்பெற்றால் பால்புதுமையரின் வாழ்க்கை உயர்வுபெறும்.

**அடிக்குறிப்புகள்**

1. திருநங்கை குணவதி என் பெண்மை விற்பனைக்கு அல்ல, ப-21
2. புறநானூறு, ப-321
3. பாரதியார் கவிதைகள், ப-9
4. ஆண்டாள் பிரியதர்ஷினி,நானும் இன்னொரு நானும், ப-8
5. ஆண்டாள் பிரியதர்ஷினி,நானும் இன்னொரு நானும், ப-9
6. ஆண்டாள் பிரியதர்ஷினி,நானும் இன்னொரு நானும், ப-14
7. ஆண்டாள் பிரியதர்ஷினி,நானும் இன்னொரு நானும், ப-17
8. ஆண்டாள் பிரியதர்ஷினி, நானும் இன்னொரு நானும், ப-27
9. ஆண்டாள் பிரியதர்ஷினி,நானும் இன்னொரு நானும், ப-51
10. ஆண்டாள் பிரியதர்ஷினி,நானும் இன்னொரு நானும், ப-10
11. ஆண்டாள் பிரியதர்ஷினி.நானும் இன்னொரு நானும், ப-34
12. ஆண்டாள் பிரியதர்ஷினி,நானும் இன்னொரு நானும், ப-33
13. ஆண்டாள் பிரியதர்ஷினி,நானும் இன்னொரு நானும், ப-5
14. ஆண்டாள் பிரியதர்ஷினி,நானும் இன்னொரு நானும், ப-10
15. ஆண்டாள் பிரியதர்ஷினி,நானும் இன்னொரு நானும், ப-6
16. திருநங்கை குணவதி என் பெண்மை விற்பனைக்கு அல்ல ப-63
17. ஆண்டாள் பிரியதர்ஷினி,நானும் இன்னொரு நானும், ப-56
18. ஆண்டாள் பிரியதர்ஷினி,நானும் இன்னொரு நானும், ப-57
19. ஆண்டாள் பிரியதர்ஷினி,நானும் இன்னொரு நானும், ப-30
20. ஆண்டாள் பிரியதர்ஷினி,நானும் இன்னொரு நானும், ப-34
21. மனதின் கிறுக்கல்கள் ப-57
22. ஆண்டாள் பிரியதர்ஷினி,இன்னொரு நானும், ப-42
23. ஆண்டாள் பிரியதர்ஷினி,நானும் இன்னொரு நானும், ப-37

**துணைநூற் பட்டியல்:**


1. ஆண்டாள் பிரியதர்ஷினி- நானும் இன்னொரு நானும் குமரன் பதிப்பகம், 19, கண்ணதாசன் சாலை, தி.நகர், சென்னை – 17.
2. இராhமநாதன், பாரதியார் கவிதைகள், ஸ்ரீ இந்து பப்ளிக்கே~ன்ஸ், 100, கொனால்பாங்க் ரோடு, கிழக்கு சி.ஐ.டி நகர், சென்னை – 35.
3. திருநங்கை குணவதி, என் பெண்மை விற்பனைக்கு அல்ல, வெற்றி மொழி வெளியீட்டகம், 29,முதல்தளம் கிழக்குரத வீதி, திண்டுக்கல் - 1.
4. புலவர் இரா.இளங்குமரன் புறநானூறு, வர்த்தமானன் பதிப்பகம், 21, இராமகிரு~;ண தெரு, தியாகராய நகர், சென்னை - 17.
5. மாணிக்கவாசகம்.பி, மனதின் கிறுக்கல்கள், சிவகுரு பதிப்பகம், 7ஃ40 கிழக்;குச் செட்டி தெரு, பரங்கிமலை. சென்னை -16.

**REFERENCES:**


1. Andal Priyadarshini. Naanum Innoru Naanum. Kumaran Pathippagam, 19, Kannadasan Salai, T. Nagar, Chennai – 17.
2. Ramanathan, editor. Bharathiyar Kavithaigal. Sri Hindu Publications, 100, Konnalbank Road, East C.I.T Nagar, Chennai – 35.
3. Thirunangai Gunavathi. En Penmai Virpanaiukku Alla. Vetri Mozhi Veliyiitagam, 29, Muthal Thalam Kizhakku Ratha Veethi, Dindigul - 1.
4. Pulavar Ra. Ilangumaran. Purananooru. Varthamanan Pathippagam, 21, Ramakrishna Street, Thyagaraya Nagar, Chennai - 17.
5. Manickavasagam. P. Manathin Kirukkalgal. Sivaguru Pathippagam, 7/40 Kizhakku Chetti Theru, Parangimalai, Chennai - 16.8. Manikkanar A. Nattini Varthamanan Publishing House,. 1999, p. 170

தமிழ்மணம் சர்வதேசத் தமிழ் ஆய்விதழ்
Tamilmanam International Research Journal of Tamil Studies | ISSN(o): 3049-0723
[ Impact Factor: 8.47 ] Monthly, Peer-Reviewed, Refereed, Indexed Journal with IC Value : 86.87
Volume - 1, Issue - 09, June - 2025



DOIs: https://doi.org/10.63300/tmXXXXXXXXXX --:-- Research Paper

# 'Aazhi Soozh Ulagu' from the Perspective of Cultural Ecology

[1] **M. Dhanalakshmi** M.A., M.Phil., M.Ed., [2] **Dr. K. Mahalakshmi** M.A., M.Phil., NET., Ph.D.,
[1] PhD Research Scholar (Part Time), Department of Tamil, Dr. S.N.S. Rajalakshmi College of Arts and Science (Autonomous), Coimbatore - 49
[2] Guide & Assistant Professor, Department of Tamil, Dr. S.N.S. Rajalakshmi College of Arts and Science (Autonomous), Coimbatore – 49

***Abstract:*** *Ecology is a scientific study that includes the distribution of life and the scientific methods concerning the relationship between organisms and their natural environment. The wise people of the Sangam period lived a life integrated with nature. This activity had an impact on cultural ecologies. Thinais and their cultures are defined by uniquely identifying specific landscapes named after them, based on their associated characteristics such as climate, fauna, flora, food items, occupations, religious beliefs, and emotional tendencies specific to that region. Unshakeable beliefs held in family, community, occupation, festivals, worships, rituals, and social life, along with customs and practices based on those beliefs, constitute the general life beliefs of the people. Based on this, this article aims to examine the cultural ecology of the Neithal land people through 'Aazhi Soozh Ulagu', a novel by Jo. D. Cruz, focusing on the distinctive aspects of the Parathavar people's way of life as cultural norms.*

***Key Words:*** *Neithal land, Culture, Sea, Parathavar, Ecology, Belief, Ritual, Tradition/Custom, Way of life, Environment.*

# பண்பாட்டுச் சூழலியல் நோக்கில் 'ஆழி சூழ் உலகு'

[1] **ம.தனலட்சுமி,** [2] முனைவர் **கோ.மகாலட்சுமி**
[1] முனைவர் பட்ட ஆய்வாளர் (பகுதி நேரம்) தமிழ்த்துறை, டாக்டர்.எஸ்.என்.எஸ். ராஜலட்சுமி கலை அறிவியல் கல்லூரி (தன்னாட்சி), கோவை -49
[2] நெறியாளர் & உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, டாக்டர்.எஸ்.என்.எஸ். ராஜலட்சுமி கலை அறிவியல் கல்லூரி (தன்னாட்சி), கோவை - 49

***Abstract:*** *சூழலியல் என்பது உயிர் வாழ்க்கையின் பரவல் பற்றியும் உயிரினங்களுக்கும் அவற்றின் இயற்கை சூழலுக்கும் இடையிலான அறிவியல் அடிப்படையிலான ஆய்வு முறைகளை உள்ளடக்கியதாகும். இயற்கையோடு எழுந்த வாழ்வை சங்க சான்றோர்கள் மேற்கொண்டனர். இச்செயல்பாடு பண்பாட்டுச் சூழலிகளில் தாக்கத்தை ஏற்படுத்திற்று. குறிப்பிட்ட நிலங்களுக்குரிய காலச்சூழல், விலங்கினங்கள், பறவைகள், தாவரவகைகள், உணவுப்பொருட்கள், தொழில்கள், மக்களின் தெய்வ நம்பிக்கைகள் மற்றும் மனம் சார்ந்த உணர்வு போக்குகள் போன்றவற்றை அவ்வட்டாரத்தோடு பொருத்தி, அதற்கென்று ஒரு பெயரிட்டுத் தனித்து அடையாளப்படுத்துவதே திணைகளும், அவற்றின் பண்பாடுகளும் ஆகும். குடும்பம், இனம், தொழில், விழாக்கள், வழிபாடுகள், சடங்குகள் மற்றும் சமூக வாழ்வியலில் கொண்டிருக்கும் அசைக்க முடியாத நம்பிக்கைகளும், அந்நம்பிக்கைகள் வழிபட்ட பழக்க வழக்கங்களும் மக்களின் பொதுவாழ்வியல் நம்பிக்கைகளாக அமைந்திருக்கின்றன. இவ்வடிப்படையில் பண்பாட்டு நெறிகளாக நெய்தல் நில மக்களின் பண்பாட்டுச் சூழலியலை ஜோ.டி.குரூஸ் "ஆழி சூழ் உலகு" எனும் புதினத்தின் வழி இடம்பெறும் பரதவ மக்களின் வாழ்வியற் தனித்தன்மைகளையும் ஆராயும் விதமாக இக்கட்டுரை அமைகின்றது.*

***குறிப்பு சொற்கள்*** *: நெய்தல் நிலம், பண்பாடு, கடல், பரதவர், சூழல், நம்பிக்கை, சடங்கு, சம்பிரதாயம், வாழ்வியல்,சூழல்.*

**முன்னுரை:**

சங்ககால மக்களின் வாழ்வியலை உற்றுநோக்குகையில், அக்காலமக்கள் தங்களது வாழ்க்கைத் தளங்களை ஐவகை நிலங்களாகப் பாகுபாடு செய்து கொண்டு, அந்தந்த நிலங்களின் பின்புலங்களுக்குத் தக்கவாறு தங்களது வாழ்க்கை முறைகளையும் தொழில்களையும் அமைத்துக்கொண்டு வாழ்ந்துள்ளனர். இயற்கைச் சூழலியலைப் பல படைப்பாளர்கள் தங்கள் படைப்புகளில் பதிவு செய்திருப்பினும், மண்ணையும் மக்களையும் பதிவு செய்யும் இலக்கியங்கள் மிகக்குறைவே. ஐவகை நிலங்களின் பண்பாட்டுச் சூழலை அந்நிலம் சார்ந்து வாழும் மக்கள் பிரதிபலிப்பார்கள். சங்ககால மக்கள் பண்பாடு என்னும் பொதுவான கூறுகளைப் பெற்றிருப்பினும், ஒவ்வொரு நிலமக்களும், தங்களுக்கென்று தனித்தன்மைகள் கொண்ட வாழ்வியல் நெறிமுறைகளையும், பண்பாட்டுச் சூழலியலையும் கொண்டு விளங்குதலை இக்கட்டுரை முன்வைத்து, ஜோ.டி.குரூஸ் "ஆழி சூழ் உலகு" எனும் புதினத்தில் இடம்பெறும் நெய்தல் நிலச் சூழலியலையும், நெய்தல் நிலத்தவர்களாகிய பரதவர் மக்களின் பண்பாட்டையும் அவர்களின் நம்பிக்கைகள், விருந்தோம்பல், தொழில் சார் சூழல்கள், நிமித்தம் பார்த்தல் போன்றவற்றை விளக்கமாக இக்கட்டுரை ஆராய்கிறது.

**பண்பாட்டியல்**

பண்பாடு என்பது குறிப்பிட்ட ஓரினத்தின் இனவரைவியலுக்கான அடையாளத்தைத் தருபவையாகும். அவர்களின் தனித்த அடையாளத்தை சுட்டிக்காட்டுவதற்கு அவ்வினத்தின் பண்பாட்டுக் கூறுகள் குறியீடுகளாக அமைகின்றன. "ஆழி சூழ் உலகு" புதினத்தில் ஐவகை நிலங்களில் ஒன்றான நெய்தல் நில மக்கள் அவர்களுக்கென்ற தனித்த வாழ்க்கை முறையையும், பண்பாட்டு அடையாளங்களையும் கொண்டவர்களாக உள்ளனர். இப்புதினம் பத்தொன்பதாம் நூற்றாண்டில் கடற்கரை நகர மாந்தர்களின் வாழ்க்கையை எடுத்துக்காட்டுகின்றது. அவர்களின் கடல் வாழ்வும், மேட்டுநில மக்களோடு கூடிய நட்பு நிலையும் அதைச் சார்ந்த பொருளாதார உற்பத்தியும் விளைபொருளான மீன், உப்பை விற்றல் மூலம் கொண்ட அணுகுமுறையும் இப்புதினத்தின் வழி வெளிப்படுகிறது.

**சூழலியல்**

சூழல் குறித்து ஆராய்கின்ற துறைக்கு சூழலியல் என்று பெயர். இதனை ஆங்கிலத்தில் Environment அல்லது Ecology என்று அழைப்பர். இதனை, "உலகில் உள்ள அனைத்து உயிரினங்களின் உறவுகளையும் அவற்றின் சூழலையும் ஆராயும் அறிவியலின் பெயர் சூழலியல்" -(முனைவர் தேவிரா (இராசேந்திரன்) - தமிழ் இலக்கியத் தகவல் களஞ்சியம், ப.எண்:378) என்கிறார். பெருமணல் உலகம், கடலும் கடல் சார்ந்ததும் என்றெல்லாம் அழைக்கப்படும் நெய்தல் நிலத்தின் சூழலை உள்ளது உள்ளவாறு ஆசிரியர் வெளிப்படுத்தியுள்ளார். வருணனைகள், உவமை, உருவகம் போன்ற உத்திகளுக்கு முக்கியத்துவம் தராமல் ஆவணப்படுத்தும் நோக்கில் படைப்பாளர் இப்புதினத்தை வடிவமைத்துள்ளார். அழகியல் தன்மையும் சில இடங்களில் மின்னல் போல் வந்து சென்றுள்ளது.இப்புதினத்திலும் கற்பனைகளைக் காட்டிலும் உண்மைத் தன்மையே மிகுதியாய் எடுத்தளாப்பட்டுள்ளது.

**இயற்கைச்சூழல்**

நிலத்தின் உச்சிப் பகுதிகள் மழை நீரை தேக்கி வைத்துப் பின் அந்த நீர் கசிந்து அங்கு உள்ள சுனைகள் நிறைகின்றன, சுனைகளில் உள்ள நீர் சேர்ந்து அருவியாக வீழ்ந்து, காட்டாறாக பெருக்கெடுத்து ஓடுகின்றன என்று ஆறுகள் உருவாகும் காட்சியை,

"சூருடை நனந் தலைச் சுனை நீர் மல்க,
பெரு வரை அடுக்கத்து அருவி ஆர்ப்ப,

கல் அலைத்து இழிதரும் கடு வரற் கான் யாற்றுக்
கழை மாய் நீத்தம் காடு அலை ஆர்ப்ப,
தழங்கு குரல் ஏறொடு முழங்கி,
வானம் இன்னே பெய்ய மின்னுமால்- தோழி!" (நற்-7)

எனும் நற்றிணை பாடல் எடுத்துக்காட்டுகிறது. இதனையே வேள்பாரி புதினத்தில் புதினா ஆசிரியர் பின்வருமாறு இயற்கையின் நுட்பத்தை மிக அழகாக காட்சிப்படுத்தியுள்ளார்.இதனை,

"திரும்பிய திக்கெல்லாம் நீர்ப்பரப்பு, சூரியன் தொடுவானில் கதிர் மடக்கி மறைகிறது. தூரத்தே செக்கர் வானின் கீழ் முறித்துக் கிடக்கும் கடல். மிதமாய் வீசிய வாடைக் கொண்டல், அருகே பச்சையாகவும், தூரத்தே கருநீலமாகவும் தெரிந்த கடலைப் பார்க்கையில் உலகம் அமைதி நிறைந்ததாக மனம் நினைக்கிறது"- ("ஆழி சூழ் உலகு" - ஜோ.டி.குரூஸ்,ப.எண்: 23)

எனும் வரிகளில் ஆசிரியர் இயற்கையின் மகத்துவத்தை நமக்குப் புலப்படுத்துகின்றார். உயிருக்கு உத்தரவாதமற்ற தொழிலை மேற்கொள்ளும் விளிம்புநிலை மக்களான நெய்தல் நிலத்தவர்கள் அடையும் பேரிடர்களுக்கு நடுவில் இயற்கையான பஞ்சபூதங்களையும் காத்து இரட்சிப்பது என்பது திணை மக்கள் அவர்களது பண்பாட்டை உயர்வாகக் கருதுகின்றனர் என்பது நமக்குத் தெளிவாகிறது.

**நெய்தல் நில மக்கள் வாழ்வியல் சூழல்**

கடலும் கடலைச் சார்ந்தும் அமைவது நெய்தல் திணை வாழ்க்கை. ஐந்திணைச் சுட்டும் தொல்காப்பியர்.

"நடுவண்ஐந்திணை நடுவணது ஒழியப்
படுதிரை வையம் பாத்திய பண்பே"
(தொல், பொருள், அகத்-2)

இதில் நடுவண் திணையாகிய பாலை நீங்கலாக எஞ்சிய திணைகள் அனைத்தும் கடலால் சூழப்பட்ட உலகம் என்பதன் வழி, உலகின் அதிகப் பரப்பளவினைக் கொண்டது நெய்தல் திணை என்பது புலனாகிறது. இதனையே "ஆழி சூழ் உலகு" எனும் புதினம் வழி மீனவர்களின் வாழ்வியலைக் காட்சிப்படுத்துகிறது. அடிப்படைத் தேவைகளாகிய உணவு, உடை, உறையுள் ஆகியவற்றிற்காகவும், முதன்மைத் தொழில்களாகிய மீன் பிடித்தல், உப்பு விளைவித்தல் போன்றவற்றிலும் அதன் சார்பு தொழில்களான பண்டமாற்றுதல், வணிகம் செய்தல் போன்றவற்றிலும் நெய்தல் திணை மக்கள் எதிர்கொண்ட இடர்பாடுகள் மிகுதியாக இப் புதினம் எடுத்துரைக்கிறது. கடற்தொழிலை மேற்கொள்பவருக்கு பெருத்த இடையூறாக இருப்பது கடல் சீற்றமாகும். கடல் சீற்றங்கொண்டு அலைகள் விரைந்தடிக்கும் காலங்களில் கடலில் படகுகளைச் செலுத்த வாய்ப்பின்றி, தொழிற்பட முடியாத சூழல் ஏற்படுவதை இப் புதினம்

"எய்யா, இப்ப எங்க கெடக்கோம்னு வேற தெரியில்லியே, பெரியவரு வேற பேச்சு முச்சில்லாம கெடக்கார" என்றார் சூசையார். மாமா, உசுரோட ஊரு போயி சேருவோமா! இந்தக் கேள்விக்குப் பதில் சொல்ல முடியவில்லை சூசையாரால். அடுத்த வினாடியை எதிர்கொள்வதே மிகப்பெரிய சவாலாகி விட்ட நிலையில், ஊர் போய் சேருவதென்பது மனித பலத்தில் ஆகக்கூடியது அல்ல என்பது அவருக்குத் தெள்ளத்தெளிவாக தெரிந்தது"

-("ஆழி சூழ் உலகு" - ஜோ.டி.குரூஸ்,ப.எண்: 129)

எனும் வரிகளில் பரதவர் அனுதினமும் கடலில் எதிர்கொள்ளும் மரணப் போராட்டத்தை விளக்குகிறது. விடியற்காலையில் கடலுக்கு மீன்பிடிக்கச் சென்று "எற்பாடு" என்று வழங்கப்படுகிற மாலையில் கரைந்திரும்புதல் மீனவத் தொழிலின் இயல்பாகும். ஆயினும், தொழில்நிமித்தம் காரணமாக அலைகள் வீசுகின்ற கடலிலே. இரவிலே. திமிலில் கட்டிய விளக்கொளியைப் பயன்படுத்தி மீன்பிடிக்கும் பரதவர்களின் இடர்பாடு மிகுந்த வாழ்க்கையை அகநானூறு,

"கொண்டல் இரவின் இருங்கடன் மடுத்த
கொழுமீன் கொள்பவர்
இருள்நீங்குஒண்சுடர்"

- (, 100:6-7)

"நளிகடல் திரைச்சுரம் உழந்த திண்திமில் விளக்கில்"

(,240:5)

எனும் வரிகள் உணர்த்துகின்றன. பரதவர் தொழிற்படு சூழலில் இயற்கையோடு மட்டுமல்லாது கடல்வாழ் உயிரினங்களாலும், பலவிதமான ஆபத்துகளைச் சந்திக்க நேரிடுகிறது. கூர்மையான கொம்புகளையுடைய வேட்டை சுறாக்கள் திரிகின்ற கடற்பரப்பில் தம் தொழிலை மேற்கொள்ள வேண்டிய நிர்பந்தத்தில் நெய்தல் நில மக்கள் இருக்கின்றனர் என்பதை இப்புதினம் உணர்த்துகின்றது. இதனை, கோட்டுமீன் வழங்கும் வேட்டமடி பரப்பின்"

- (,170:12)

என்று கூறுகிறது. இவ்வகையான கொடிய சுறாக்கள் மீன்பிடித் தொழிலுக்குச் செல்லும் பாதவர்களுடைய வலைகளைத் தம் கூரிய கோடுகளால் கிழித்து அழித்துவிடுகின்றன. அவ்வாறு கிழித்து வீணடிக்கப்பட்டு, தொழிருக்குப் பயன்படாது போன வலைகள் பரதவரின் குடியிருப்புப் பகுதிகளில் உள்ள தாழைகளின் மேல் கிடக்கின்றன. இதனால் தொழில் முடக்கமும், பொருளாதார நட்டமும் ஏற்பட்டதை "ஆழி சூழ் உலகு" நாவல் விளக்குகிறது. மேலும் இந்நாவல் கடற்பரப்பில் ஆபத்தை விளைவிக்கும் சுறாக்கூட்டத்தை நீக்கி, அவற்றின் கண்களில் படாமல் நீரில் மூழ்கி, வலம்புரிச்சங்கினை எடுத்துவரும் மிக ஆபத்தான தொழிலிலும் பரதவர்கள் ஈடுபடுகின்றனர் என்பதை ஆசிரியர் கூறிய விதம் படிப்போர் கண்களை கலங்க வைக்கிறது எனலாம்.

**நெய்தல் நில மக்களின் நம்பிக்கைகள்**

மனிதன் இன்ப துன்பத்திலிருந்து தன்னைக் காத்துக்கொள்ளவே நம்பிக்கைகளை உருவாக்குகின்றான். இந்த நம்பிக்கைகள் காலகாலமாக ஒரு தலைமுறையிலிருந்து மற்றொரு தலைமுறைக்கு மாறுகின்றன. பண்பாட்டிலும், அறிவிலும் சிறந்து விளங்கிய நெயல்தல் நில சமுதாயத்திலும் பலவகையான நம்பிக்கைகள் காணப்படுவதாக "ஆழி சூழ் உலகு" நாவல் பல இடங்களில் நிரூபிக்கிறது. நெய்தல் நில மக்கள் வருணனை நிலத் தெய்வமாக வழிபட்டனர். கடலில் கிடைக்கும் பொருட்களை வைத்தே வழிபாட்டு முறைகளை நடத்தினர். சுறாமீனின் கொம்பினை மணலில் நட்டு வைத்து வழிபட்ட முறையை நாவல் கூறுகிறது. கடலில் கிடைக்கும் அரியப் பொருள்களில் சங்கும் ஒன்று. நாவலில் பரதவர்கள் வலம்புரி ஈன்ற முத்துக்களைப் பங்கிட்டுக் கொள்வதும் அவற்றை விற்பதும் போல, இவ்விரண்டையும் தம் விருப்பத் தெய்வத்திற்கு வழிபாடு செய்யும் போது நேர்த்திக்கடனாக வைத்தனர். நிமித்தம் பற்றிய நம்பிக்கைகள் பற்றி விரிவாக இந்நாவல் பேசுகிறது. பறவைகளையும், சில விலங்குகளையும் நன்னிமித்தமாகக் கொள்வதும் பண்டைய மக்களிடம் வழக்கத்தில்

இருந்ததை சங்கப்பாடல்களில் காணலாம். அதுபோல் நெய்தல் நில மக்கள் சந்திரனுக்குப் பக்கத்தில் தோன்றும் நட்சத்திரத்தை வெள்ளி என்று அழைத்தனர். இந்நட்சத்திரம் தென்பட்டால் நன்னிமித்தம் என்று நம்பிக்கைக் கொண்டனர். அதுவே இந்நட்சத்திரம் சந்திரனுக்குத் தென்திசையில் தோன்றினால் தீநிமித்தம் என எண்ணினர். இதே கருத்து பட்டினப்பாலையிலும் இடம்பெறுவதை,

"வசையில் புகழ்வயங்கு வெண்மீன்
திசை திரிந்து தெற்கு ஏகினும்"
-(பட்டி, 1-2)

என்னும் தொடர் மூலம் நாம் அறியலாம். அதிகாலையில் கண்ட கனவு பலிக்கும் என்ற நம்பிக்கையும், "முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்" என்று ஊழ் பற்றிய நம்பிக்கையும், உயிர்கள் வினைகளுக்கேற்ப பிறவிகள் எடுக்கும் என்ற நம்பிக்கையும், பேய் பிள்ளைகளைப் பறித்துக் கொண்டு சென்றுவிடும் என்ற நம்பிக்கையும் "ஆழி சூழ் உலகு" எனும் புதினம் மூலம் ஜோ.டி.குரூஸ் நெய்தல் நில மக்களிடம் அதிகமாகக் காண்பதாகக் வெளிப்படுத்தியுள்ளார். இதற்குத தக்கச் சான்றாக,

"நாடாக்குடி கோவிலில் திருவிழா நடந்து கொண்டிருந்தது. பத்து வருடங்களுக்கு ஒருமுறை முத்தாரம்மன் சிலையை எடத்து சப்பரத்தில் வைத்து கடற்கரைக்குக் கொண்டுவந்து கடல் நீரில் குளிப்பாட்டுவார்கள். காலங்காலமாய் இதை இந்தப் பகுதியைச் சேர்ந்த பரதவர்கள்தான் செய்து வந்தார்கள். இப்போதும் இவர்களுக்குக் கட்டுப்பாடு இருந்தாலும் தப்பித்தவறி யாராவது ஒருவர் உள்ளே சென்றுவிடுவது வழக்கம். இவர்களில் யாராவது சென்று அங்கு கலந்துகொள்ளாவிட்டால் இந்த தெய்வம் அசைந்து கொடுப்பதில்லை என்று பரம்பரை பரம்பரையாக நம்புகிறார்கள்"

("ஆழி சூழ் உலகு" - ஜோ.டி.குரூஸ், ப.எண்: 10)

என்ற கூற்றில் பரதவர்களிடையே நிலவிய கட்டுப்பாட்டையும், நெய்தல் நில மக்களின் நம்பிக்கைகளையும் அறியமுடிகிறது. மேலும், கடல்துறைகளில் உடல் தகனம் நடைபெறும் போது அதில் கலந்து கொண்டு வீடு திரும்புவர்கள் கடலில் கால் நனைத்த பின்னரே வீடு திரும்புவார்களாம். ஏனெனில் புனிதமான கடல்நீர் மேலே படும்போது அசுத்த ஆவிகள் விலகி ஓடுமாம். கோவில்களிலும் மந்திரிப்பதற்கு பயன்படுத்தும் தண்ணீரீல் கூட உப்பு கலந்து பின் ஆசிர்வதித்தே குருவானவர் தெளிப்பது வழக்கம். ஏனென்றால் இந்த உப்பு நீர் படும் இடமெல்லாம் எதிரியின் ஆளுமை கட்டுப்படுத்தப்படும் என்ற நம்பிக்கை மேலோங்கிக் காணப்பட்டது. இவையே நெய்தல் நில மக்களின் நம்பிக்கைகளில் சிறந்ததாக ஜொ.டி.குருஸ் கூறுகிறார்.

**தொழில் சார் சூழல்**

நெய்தனிலத்துள்ள ஊர்கள் சிறு நல்லூரெனவும், பாக்கமெகவும், பட்டினமெனவும் கூறப்படும். நெய்தனிலத் தலைவன், சேர்ப்பன், புலம்பன், துறைவன் என அழைக்கப்படுவான். நெய்தல் நில மக்கள் பொதுவாக நுளையர், நுளைச்சியர், பரதர், பரத்தியர் எனப் பெயர் பெறுவர். பரதவர் திமிலில் சென்று பலவகை மீன்களையும் வலையால் பிடிப்பர். வலையைக் கட்டும் கோலும் அவர்களிடமுண்டு. இராக்காலங்களில் சூழ்கொண்டு சென்று மீன் வேட்டையாடுவர். பெருங்காற்றடிக்கும் சமயங்களிலும் அவர்கள் கடலின் நடுவில் சிக்கவும் வாய்ப்புண்டு. அவர்களுடைய வலையை அடிக்கடி சுறாமீன் கிழிப்பதுண்டு. அவர்களையும் அக்கோட்டு மீன் கிழிக்கும். சுறாமீனை எறியுளியால் கொல்லுவார்கள். எறியுளிபட்ட சில சுறாமீன்கள் சிறிது நேரம் துடிதுடித்துக் கொண்டு கடலைக் கலக்கும். அவற்றிலிருந்து பாயும் இரத்தம் கடல் நீரின் நிறத்தையும் மாற்றி விடுமாம். சுறாமீன் கடற்கரையில் திரியும் கோவேறு கழுதை முதலியவற்றிலும் பாய்ந்து அவற்றையும் காயப்படுத்தும். அவற்றையும்

பரதவர்கள் அடக்குவார்கள். ஆயிலை, இறால் முதலிய பலவகை மீன்களைப் பரதவர் பிடிப்பார்கள். ஆழி சூழ் உலகு புதினத்தில் மீனவர்களின் தொழிலை,

"மீன் வேட்டை முடிந்து வந்தவுடன் தாம் கொண்டு வந்த மீன்களில் பலவற்றை, இரப்போருக்கு அவர்தம் பிச்சைப் பாத்திரம் நிறையக் கொடுக்கும் வண்மையுடையர். இரவலர்க் கீந்தபின் மிகுந்தவற்றைப் பல கூறாக்கி விற்பர். எஞ்சும் மீன்களை வெயிலில் உலர்த்திக் கருவாடாக்குவர். இக்கருவாடு "மீன் தடி" எனக் கூறப்படும்."

("ஆழி சூழ் உலகு" - ஜோ.டி.குரூஸ், ப.எண்: 133)

என்று பெருமையாக ஆசிரியர் கூறுகிறார். மேலும் பரதவர் பிடித்த மீன்களில் மிஞ்சியவற்றை அவர்களது தங்கையர் தெருத்தோறும் கொண்டு சென்று விற்பதும் வழக்கமாக இப்புதினத்தில் கூறப்படுகிறது. உப்பையும் மீனையும் விற்று நெல், தயிர் முதலியன பெறுவர். உப்பின் விலையும், நெல்லின் விலையும் சமமாக இருக்கும். கடலில் மீன் பிடிக்கச் சென்ற பரதவர் வீடு திரும்புவதற்குள், எஞ்சிய மீனை விற்று வரும் நெல்லில் சாதத்தை, அயிலை மீன் கறியுடனும், மீன் தடியுடனும் அவர்களுக்கு பரிமாற வைக்க வேண்டிய சூழலில் பரதப் பெண்கள் இருப்பதாக ஆசிரியர் படைத்துள்ளார்.

**நிமித்தம் பார்த்தல்**

பழந்தமிழ் இலக்கியங்கள் பண்டைய மக்களுடைய வாழ்வின் பல்வேறு கூறுகளையும், பழக்க வழக்கங்களையும் படம் பிடித்துக் காட்டுவன போல் அமைகின்றன. பழந்தமிழரது நம்பிக்கைகள் மிகப் பரந்துபட்டவை. அவற்றுள் ஒன்று சகுனம் அல்லது நிமித்தம் பார்த்தல் ஆகும். இன்றைய உலகம் தேவையற்ற கருத்துக்களையும், பழக்க வழக்கங்களையும் விட்டொழித்து முன்னேறும் விரைவு உலகமாகும். நிலவையும், செங்கதிரையும், இன்ன பிற கோள்களையும் ஆராயும் அறிவியல் உலகமாகும். இருப்பினும் அன்று போல இன்றும் இந்நிமித்தம் பார்க்கும் வழக்கம் பலரிடையே இருப்பதைக் காணலாம். 'நாளும் கோளும் பார்த்தும், நல்லன அல்லன பார்த்தும் செயலாற்றுவது அன்றிருந்தது போலவே இன்றும் உண்டு. உலகில் எங்கும் என்றும் உண்டு"

- (ப.அ.தாயம்மாள், சங்க இலக்கியத்தில் மூடநம்பிக்கை, பக்.எண்: 67)

என்று ப.அ.தாயம்மாள் அவர்கள் தனது ஆய்வுக்கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார். இதற்கேற்றார் போல் பரதவ மக்களிடையும் நிறைய நிமித்தங்கள் உள்ளன. பௌர்ணமி தினத்தன்று பருத்த நண்டுகள் கிடைக்கும், ஆடி மாதம் சினையுற்ற மீன்கள் கிடைக்கும், மேகம் கணிவாக இருந்தால் கடல் அலை மிதமாக இருக்கும், பரதவர்கள் படகை எடுக்கையில் பின்னிருந்து யாரேனும் அழைத்தாலோ, குழந்தை அழும் சப்தம் கேட்டாலே அபசகுனம் என்று நினைப்பதாக இப்புதினம் கூறுகிறது.

**விருந்தோம்பல்**

விருந்தோம்பல் என்பது இல்வாழ்க்கையின் உயிர்நாடியாகும். விருந்தினர் என்பவர்கள் உறவினர்கள் மட்டுமல்லர். புதியவர், முன்பின் அறியாதவர். ஏழைகள், ஊர்விட்டு ஊர்வந்தவர்கள் போன்றோரும் விருந்தினர் என்படுவர். விருந்தோம்பலின் சிறப்பினை உணர்ந்த பண்டைத் தமிழர்கள் தங்கள் இல்வாழ்க்கைக் கடமைகளுள் விருந்தோம்பலை இன்றியமையாத, ஒரு பண்பாகக் கொண்டிருந்தனர். நெய்தல் நிலத்தில் இப்பண்பு சற்று உயர்வாகவே பரதவர்களிடையில் காணப்படுகிறது எனலாம். ஏனெனில் அவர்கள் அசைவ விருந்துகளை பல்வகை மீன்களுடன் பரிமாறுகின்றனர். குத்தப்படாத கொழியல் அரிசியைக் கூழாகக் கிண்டி அதனை ஆறவைத்து அதனுடன் நெல்லை இடித்துக் கலந்து இரண்டு நாட்கள் கழித்து வேகவைத்து

வடிகட்டி விரலால் கரைத்துப் பிழிந்து கள்ளாக மீன் வறுவலை இளஞ்சூட்டுடன் தருவதாக அவரது விருந்தோம்பல் சொல்லப்படுகிறது. இவற்றையே இக்காலத்தில் சுண்டக்கஞ்சி சோறு என்கிறோம்.

**முடிவுரை:**

மனிதனுடைய இயற்கையான வாழிடம், பண்பாடு, சுற்றுச்சூழல் ஆகியவை நெய்தல் திணைப்பாடல்களில் இடம்பெறும் விதத்தைப் பார்ப்பதன் மூலமாக இருவேறுக் கருத்துக்களை நம்மால் புரிந்துக் கொள்ள முடிகிறது. ஒன்று புலவர்கள் தம்முடைய பாடல்களில் படைக்கும் கருத்துலகில், நெய்தல் நிலத்திற்குரிய பண்பாட்டு சூழலியல் கருத்துக்களையும், மற்றொன்று "ஆழி சூழ் உலகு" எனும் நாவல் மூலம் ஜே.டி.குரூஸ் பரதவர் வாழ்வியலையும் ஒருங்கிணைத்த கூறுகளின் வாயிலாக சங்க இலக்கியத்திற்கும், சாமான்ய மக்களுக்கும் இயற்கை அன்னையின் மீது அன்புக்காட்டியும், தியாக உணர்வுடன் பண்பாட்டு சூழலையும் காத்து வந்துள்ளனர் என்பது புலனாகிறது.

**அடிக்குறிப்புகள்**

1. முனைவர் ஆ.புஷ்பா சாந்தி எட்டுத்தொகையும் பண்பாட்டுச் சூழலியலும் - காவ்யா பதிப்பகம் சென்னை 600 024

2.இரா.இராகவையங்கார் (உ.ஆ) - பத்துப்பாட்டு (மூலமும் உரையும்) -ஸ்ரீ செண்பகா பதிப்பகம் சென்னை 600 024 பதிப்பு 2021

3. முனைவர் தேவிரா (இராசேந்திரன்) தமிழ் இலக்கியத் தகவல் களஞ்சியம் ஸ்ரீ நந்தினிப் பதிப்பகம் சென்னை 600 101 இறுதிப் பதிப்பு 2018

4. முனைவர்.பாக்யமேரி வகைமை நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு -பூவேந்தன் பதிப்பகம் சென்னை 600 004 பதிப்பு 2019

5. புலியுர் கேசிகன் - எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் ஸ்ரீ செண்பகா பதிப்பகம் - சென்னை - பதிப்பு 2021

6. ஆர்.என்.ஜோ.டி.குரூஸ் ஆழி சூழ் உலகு காலச்சுவடு பப்ளிகேஷன்ஸ் (பி) லிட்., - நாகர்கோவில் 629 001 இரண்டாம் பதிப்பு - நவம்பர் 2022.

7. ப.அ.தாயம்மாள், சங்க இலக்கியத்தில் மூடநம்பிக்கை, இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்ற இரண்டாவது கருத்தரங்குக் சுட்டுரை, திருச்சி, சூன் 1970.

**REFERENCES:**


1. Dr. A. Pushpa Shanthi, *Ettuthogaiyum Panpaattu Suzhaliyalum (Ettuthogai and Cultural Ecology)*. Kavya Pathippagam, Chennai 600 024.
2. R. Ragavaiyangar (Ed.), *Pathuppattu (Text and Commentary)*. Sri Senpaka Pathippagam, Chennai 600 024, 2021 Edition.

3. Dr. Devira (Rajendran), *Tamil Ilakkiya Thagaval Kalanjiyam (Encyclopedia of Tamil Literature)*. Sri Nandhini Pathippagam, Chennai 600 101, Final Edition 2018.
4. Dr. Bhagyameri, *Vagaimai Nokkil Tamil Ilakkiya Varalaru (History of Tamil Literature from a Genre Perspective)*. Poovendhan Pathippagam, Chennai 600 004, 2019 Edition.
5. Puliyur Kesikan, *Ettuthogaiyum Pathuppattum (Ettuthogai and Pathuppattu)*. Sri Senpaka Pathippagam, Chennai, 2021 Edition.
6. R.N. Joe D'Cruz, *Aazhi Soozh Ulagu (The World Surrounded by the Ocean)*. Kalachuvadu Publications (P) Ltd., Nagercoil 629 001, Second Edition - November 2022.
7. P.A. Thayammal, "Sangam Ilakkiyathil Moodanambikkai (Superstition in Sangam Literature)," *Paper presented at the Second Seminar of the Association of Tamil Professors of Indian Universities*, Trichy, June 1970.

தமிழ்மணம் சர்வதேசத் தமிழ் ஆய்விதழ்
Tamilmanam International Research Journal of Tamil Studies | ISSN(o): 3049-0723
[ Impact Factor: 8.47 ] Monthly, Peer-Reviewed, Refereed, Indexed Journal with IC Value : 86.87
Volume - 1, Issue - 09, June - 2025



DOIs: https://doi.org/10.63300/tmXXXXXXXXXX --:-- Research Paper

# Psychological Benefits of Arts Education: A Comprehensive Review

**Dr. K. Sagayarani**
Assistant Professor,
Bharathanatyam Kalaikavari College of Fine Arts, Tiruchirappalli, Tamil Nadu 49

**Abstract:** *This research article extensively examines the role of arts education in the mental health development of adolescent students and its psychological benefits. This study, employing a Descriptive Research Design, was conducted in urban higher secondary schools in Chennai, Tamil Nadu. A sample of 300 students aged 13 to 18 was selected using a stratified random sampling method. The research instruments included a structured questionnaire with 25 items and semi-structured interviews conducted with 30 students and 10 teachers. These instruments were validated by subject matter experts, and reliability was confirmed in a pilot study with a Cronbach's alpha value of 0.82. Data were analyzed using SPSS statistical software. Key findings revealed that 87% of students reported that participation in the arts reduced stress, and 79% reported that it fostered self-confidence. These findings emphasize that arts education has a significant impact on the psychological well-being of students and highlight the need for mandatory inclusion of arts education in school curriculum.*

**Key Words:** *Psychological Benefits, Arts Education, Emotional Well-being, Self-Confidence, Adolescent Students, Stress Management, Education and Arts Integration*

# கலைக் கற்றலால் கிடைக்கும் உளவியல் நன்மைகள் – ஒரு விரிவான ஆய்வுப் பார்வை

முனைவர் **K சகாயராணி**
உதவிப் பேராசிரியர்,
பரதநாட்டியம் கலைக்காவிரி நுண்கலைக் கல்லூரி, திருச்சிராப்பள்ளி, தமிழ்நாடு

**Abstract:** *இந்த ஆய்வுக்கட்டுரை, பருவ வயதுடைய மாணவர்களின் மனநல வளர்ச்சியில் கலைக்கல்வியின் பங்கு மற்றும் அதன் உளவியல் நன்மைகளை விரிவாக ஆய்வு செய்கிறது. விவரணை ஆய்வு வடிவம் (Descriptive Research Design) கொண்ட இவ்வாய்வு, தமிழ்நாட்டின் சென்னையில் உள்ள நகர்ப்புற மேல்நிலைப் பள்ளிகளில் நடைபெற்றது. 13 முதல் 18 வயதுக்குட்பட்ட 300 மாணவர்கள் நிலைத்திருத்தப்பட்ட சீரற்ற மாதிரித்தேர்வு முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டனர். ஆய்வுப் பொருட்களில் 25 உருப்படிகளை கொண்ட கட்டமைக்கப்பட்ட கேள்வித்தாளும், 30 மாணவர்கள் மற்றும் 10 ஆசிரியர்களுடன் மேற்கொள்ளப்பட்ட பகுதி கட்டமைக்கப்பட்ட நேர்காணல்களும் அடங்கும். இந்த கருவிகள் துறை வல்லுநர்களால் சரிபார்க்கப்பட்டு, முன்னோட்ட ஆய்வில் க்ரொன்பக் ஆல்பா மதிப்பாக 0.82 அளவில் நம்பகத்தன்மை உறுதிப்படுத்தப்பட்டது. SPSS புள்ளியியல் மென்பொருளின் மூலம் தரவுகள் பகுப்பாய்வு செய்யப்பட்டன. முக்கியமான முடிவுகளில், 87% மாணவர்கள் கலைப்பங்காற்றல் மனஅழுத்தத்தை குறைத்ததாகவும், 79% மாணவர்கள் தன்னம்பிக்கையை வளர்த்ததாகவும் தெரிவிக்கின்றனர். இந்தக் கண்டுபிடிப்புகள், கலைக்கல்வி மாணவர்களின் உளவியல் நலனில் தீவிரமான தாக்கத்தை ஏற்படுத்துகின்றன என்பதையும், பள்ளிக்கல்வியில் கலைக்கல்வி கட்டாயமாக சேர்க்கப்பட வேண்டும் என்பதையும் வலியுறுத்துகின்றன.*

***குறிப்பு சொற்கள்*** *: கலைக் கற்றலால் கிடைக்கும் உளவியல் நன்மைகள் – ஒரு விரிவான ஆய்வுப் பார்வை.*

## முன்னுரை:

மனித வாழ்க்கையின் உள்ளார்ந்த அங்கமாகக் கலைகள் உயர்ந்துள்ளன. கலை என்பது ஒரு சுகாதாரமான மனதின் வெளிப்பாடாக மட்டுமின்றி, ஒருவரின் உளவியல் நலனை மேம்படுத்தும் சக்தியையும் கொண்டுள்ளது. மாணவர்கள் கலைக்கல்வியில் ஈடுபடும் போது அவர்கள் உணர்ச்சிகளை வெளிப்படுத்துவதற்கான வழி மட்டுமல்லாமல், தங்கள் உள்ளார்ந்த எண்ணங்களை ஆராயவும், புதிய பார்வைகளை உருவாக்கவும், தன்னம்பிக்கையை வளர்த்துக்கொள்ளவும் ஒரு அரிய வாய்ப்பு கிடைக்கிறது.

உணர்ச்சி நுண்ணறிவு )Emotional Intelligence), மன அழுத்தக் கட்டுப்பாடு, சமுதாயத்திற்குத் தகுந்த ஒத்துழைப்பு போன்ற பல உளவியல் தளங்களை வளமாக மாற்றும் வாய்ப்பு கலைக்கல்வியின் மூலம் உருவாகிறது. இவ்வகையில், கல்வித்துறையில் கலை ஒரு விருப்பப் பாடமாக அல்ல, ஒரு அவசியமான உயிருக்குரிய கூறாகவே விளங்க வேண்டும்.
தமிழ்நாட்டின் நகர்புற பள்ளிகளில் கலைக்கல்வி ஒரு பரந்த இடத்தைப் பெறத் தொடங்கியுள்ள போதிலும், அதன் உளவியல் தாக்கங்களை அளவீடு செய்து விவரிக்கப்படுவது குறைவாகவே உள்ளது. எனவே, இந்த ஆய்வின் மூலம் கலைக்கல்வி மாணவர்களின் மனநலத்தில் ஏற்படுத்தும் தாக்கங்களை ஆய்வு செய்வது முக்கிய நோக்கமாக இருக்கிறது.

---

அறிஞர் வரைவிலக்கணம் )**Review of Literature)**

கலைக்கல்வியின் உளவியல் தாக்கங்கள் தொடர்பான முந்தைய ஆய்வுகள் பல்வேறு கூறுகளில் முக்கியமான வாதங்களை முன்வைக்கின்றன:

1. Winner et al. (2013)

கலைவழி ஈடுபாடு உணர்ச்சி நுண்ணறிவு மற்றும் சமூக ஒத்துழைப்பு திறன்களை மேம்படுத்துகிறது என்று வலியுறுத்துகிறார்கள். அவர்கள் கூறுவதுபோல, மாணவர்கள் கலைக்கு இடம் அளிக்கும் சூழலில் வளரும்போது மனதளவிலும் சமூகமளவிலும் பரிணாம வளர்ச்சி அடைகின்றனர்.

2. Deasy (2002)

அவரது ஆய்வில், கலைக்கல்வி மாணவர்களின் அறிவாற்றலை மேம்படுத்துவதோடு, மனஅழுத்தம் மற்றும் குழப்ப நிலைகளை குறைக்கும் என்று கூறப்படுகிறது. கலை ஓர் மனஅழுத்த வெளியீட்டு ஊடகமாக செயல்படுகிறது.

3. Catterall (2009)

காட்சி மற்றும் செயல்பாட்டு கலைகளில் ஈடுபடும் மாணவர்கள் கல்விச்செலுத்தும் எண்ணமும் நலவாழ்வும் அதிகம் கொண்டிருந்தனர் என்பதை அவர் தனது ஆய்வில் கூறுகிறார்.

4. Goldstein & Winner (2012)

இந்த இருவரும், மாணவர்கள் கலைகளில் ஈடுபடும் போது, அவர்கள் மனநிலை உறுதியாக மாறி, அனுதாபத்துடனும் மெய்யுணர்வுடனும் )mindfulness) செயல்படுகிறார்கள் என்பதைக் கண்டறிந்தனர்.

5. Kisida & Bowen (2019)

அண்மைய ஆய்வுகளில், கலைக்கல்வி மாணவர்களின் அடையாளப் பட்டியலிடல் )identity formation) மற்றும் உளவியல் பாதுகாப்பு உணர்வை உருவாக்குகிறது என்று தெரிவிக்கின்றனர்.

6. Goleman (1995)

தன் புத்தகத்தில், உணர்ச்சி நுண்ணறிவு என்பது IQ-ஐ விட முக்கியமானது என்றும், கலைவழி செயல்பாடுகள் அந்த உணர்ச்சி திறன்களை வளர்க்கும் என்று குறிப்பிடுகிறார்.

7. Gardner (1983)

பன்மை நுண்ணறிவு கோட்பாட்டில், கலைக்கல்வி மாணவர்களின் உள்ளார்ந்த )intrapersonal) மற்றும் பிறருடனான )interpersonal) தொடர்புகளை மேம்படுத்த உதவுகிறது என்பதைக் கூறுகிறார்.

---

**அறிஞர் வரைவிலக்கணம் சார்ந்த நோக்கம்:**
மேற்கண்ட ஆய்வுகள் அனைத்தும் கலைகளின் மனநல பாதிப்புகளைச் சுற்றியுள்ளன. ஆனால் இவை பெரும்பாலும் மேற்கு நாடுகளை அடிப்படையாகக் கொண்டுள்ளன. இந்திய சூழ்நிலையை பிரதிபலிக்கும் புள்ளிவிபரங்கள் குறைவாகவே உள்ளன. எனவே, இந்த ஆய்வின் முக்கியத்துவம் தமிழ்நாட்டைச் சார்ந்த சமூக, கல்வி மற்றும் மனநலக் கட்டமைப்புகளில் கலைக்கல்வி ஏற்படுத்தும் தாக்கத்தை கணக்கீடு செய்வதில் தான் இருக்கிறது

**ஆய்வின் நோக்கங்கள் ) Objectives of the Study)**
இந்த ஆய்வின் முதன்மை நோக்கம், மாணவர்களின் மனநல வளர்ச்சியில் கலைக்கல்வியின் தாக்கத்தை ஆய்வு செய்வதாகும். குறிப்பாக, பருவவயதுடைய மாணவர்களில் கலைப்பங்கேற்பு ஏற்படுத்தும் உளவியல் நன்மைகளை புள்ளிவிபர அடிப்படையில் பகுப்பாய்வு செய்வதே இந்நோக்கத்தின் மையமாகும்.

**துணை நோக்கங்கள்:**

1. மாணவர்களின் உணர்ச்சி கட்டுப்பாடு மற்றும் மனஅழுத்த நிர்வாகத்தில் கலைப்பங்காற்றலின் தாக்கத்தை ஆய்வு செய்தல்.
2. கலைவழி ஈடுபாடு மாணவர்களின் தன்னம்பிக்கை மற்றும் சுய மதிப்பீட்டில் ஏற்படுத்தும் மாற்றங்களைப் பகுப்பாய்வு செய்தல்.
3. கலைக்கல்வி அறிவாற்றல் வளர்ச்சி மற்றும் சிக்கல் தீர்க்கும் திறனில் உருவாக்கும் நன்மைகளைத் தேர்ந்து கூறுதல்.
4. கலைத்திறன்கள் மாணவர்களின் சமூக ஒத்துழைப்பு, குழுப்பணி, மற்றும் அனுதாப திறன்களை மேம்படுத்துவதில் உள்ள பங்கினை ஆய்வு செய்தல்.
5. மாணவர்களின் பல்வேறு பின்னணிகள் )பள்ளி வகை, பாலினம், குடும்பத்தின் பொருளாதார நிலை( அடிப்படையில் கலைக்கல்வியின் உளவியல் தாக்கங்களில் வேறுபாடு உள்ளதா என்பதை ஆராய்தல்.

---

**ஆய்வுக் கேள்விகள் ) Research Questions)**

இந்த ஆய்வு பின்வரும் முக்கிய ஆய்வுக் கேள்விகளுக்கு பதில் தேடுகிறது:

1. கலைக்கல்வியில் பங்கேற்பது மாணவர்களின் உணர்ச்சி நலனை எவ்வாறு பாதிக்கிறது?
2. மாணவர்கள் தன்னம்பிக்கை மற்றும் சுய மதிப்பீட்டில் எவ்வளவு மேம்பாடுகளை அனுபவிக்கின்றனர்?
3. கலைவழி செயல்பாடுகள் அறிவாற்றல் மற்றும் கவனக் கூர்மை மேம்பாட்டுக்கு எவ்வளவு துணைபுரிகின்றன?
4. குழு நாடகம், இசை, நடனம் போன்ற கலைக்குழு செயல்பாடுகள் மாணவர்களின் சமூக நடத்தை மற்றும் ஒத்துழைப்பு திறனில் மாற்றங்களை ஏற்படுத்துகிறதா?
5. மாணவர்களின் சமூக, பொருளாதார மற்றும் கல்வி பின்னணிகள், கலைக்கல்வியின் உளவியல் தாக்கங்களை எந்தளவிற்கு மாறுபடுத்துகின்றன?

---

**கருதுகோள்கள் ) Hypotheses)**

அளவீட்டு பகுப்பாய்வை உறுதி செய்வதற்காக பின்வரும் கருதுகோள்கள் அமைக்கப்படுகின்றன:
H1: கலைக்கல்வியில் ஈடுபடும் மாணவர்களுக்கு உணர்ச்சி கட்டுப்பாடு மற்றும் மனஅழுத்தக் குறைப்பு குறிப்பிடத்தக்க அளவில் உயர்வாக இருக்கும்.
H2: கலைப்பங்காற்றல் மாணவர்களின் தன்னம்பிக்கையில் முக்கியமான முன்னேற்றத்தை ஏற்படுத்தும்.

H3: கலைக்கல்வி அறிவாற்றல் திறன்களை )concentration, problem-solving) மேம்படுத்தும்.
H4: சமூக ஒத்துழைப்பு மற்றும் குழு வேலைகளில் கலைப்பங்காற்றல் மாணவர்களுக்கு நேர்மறையான தாக்கத்தை ஏற்படுத்தும்.
H5: மாணவர்களின் பின்னணி காரகங்கள் கலைக்கல்வியின் உளவியல் நன்மைகளில் குறிப்பிடத்தக்க வேறுபாடுகளை ஏற்படுத்தும்.

**ஆய்வு வடிவமைப்பு )Research Design)**

இந்தக் கட்டுரையில் விவரணை ஆய்வுப் போக்கு )Descriptive Survey Design) பயன்படுத்தப்பட்டுள்ளது. இவ்வாய்வு வடிவமைப்பு, உண்மை சூழ்நிலைகளில் உள்ள மாணவர்களின் மனநிலை, அனுபவம் மற்றும் நம்பிக்கைகள் குறித்த தகவல்களை தொகுத்து அதன் மூலம் பொதுவான முறையில் விளக்க முயல்கிறது. இந்த வடிவமைப்பு, தேர்ந்தெடுக்கப்பட்ட மாணவர்களில் கலைப்பங்கேற்பு மற்றும் மனநலம் இடையே உள்ள தொடர்பை வரைவிலக்கணங்களுடன் வெளிக்கொணர ஏதுவாகும். மேலும், நுண்ணறிவான தரவுகளைக் கிடைக்கும் வகையில் கேள்வித்தாள், நேர்காணல், மற்றும் புகாரளிக்கப்படும் கருத்துகள் ஆகியவை பயின்றன.

பரப்பளி )Locale of the Study) இந்த ஆய்வு தமிழ்நாட்டின் சென்னைப் பெருநகரப் பள்ளிகளில் நடைபெற்றது.
சென்னை என்பது: கலாசார பாரம்பரியம் வாய்ந்த நகரம்,
நுண்கலைக் கல்லூரிகள் மற்றும் கலை அமைப்புகள் அதிகமாக உள்ள இடம்,
பள்ளிக் கல்வியில் கலைக்கல்வி மேம்படுத்தப்படுவதற்கான விழிப்புணர்வு அதிகரித்து வரும் இடம்.
ஆகையால், மாணவர்களின் கலைக்கல்வி அனுபவம் மற்றும் அதன் உளவியல் தாக்கங்களை ஆய்வு செய்ய ஏற்ற இடமாகச் சென்னை தேர்ந்தெடுக்கப்பட்டது.

---
மக்கள் தொகை மற்றும் இலக்கு மக்கள் தொகை )Population and Target Population)

இந்த ஆய்வுக்கான மொத்த மக்கள் தொகை:
சென்னை நகரில் உள்ள அரசு, அரசு உதவிபெறும் மற்றும் தனியார் மேல்நிலைப்பள்ளிகளில் பயிலும் மாணவர்கள்.

இலக்கு மக்கள் தொகை:
13 முதல் 18 வயதுக்குள் உள்ள மாணவர்கள்
கடந்த ஒரு கல்வியாண்டில் கலைப் பயிற்சியில் )பாடத்திட்ட அல்லது பாட்டில்லா( ஈடுபட்டவர்கள்

நடனம், இசை, நுட்பக் கலைகள், நாடகம், ஓவியம் போன்ற கலைகளில் பங்கேற்பு உள்ளவர்கள்
இந்த இலக்கு தொகை, மாணவர்களின் பருவவயதின் உளவியல் நிலையை பிரதிபலிக்கின்றது.
---

மாதிரித் தேர்வு முறைகள் )Sampling Techniques)
மாதிரி தேர்வில் நிலைத்திருத்தப்பட்ட சீரற்ற மாதிரி தேர்வு முறை )Stratified Random Sampling) பயன்படுத்தப்பட்டது.

அம்சங்கள்:
1. பள்ளி வகை அடிப்படையில் – அரசு, அரசு உதவிபெறும் மற்றும் தனியார் பள்ளிகள் என பிரிக்கப்பட்டன.
2. பாலின அடிப்படையில் – ஆண்கள் மற்றும் பெண்கள் மாணவர்களின் சம அளவு பிரதிநிதித்துவம்.
3. சமூக பொருளாதார நிலை – மேல், நடுத்தர மற்றும் கீழ்த்தர வர்க்கங்களை உள்ளடக்கிய வகையாக.

செயல்முறை:
20 பள்ளிகளின் பட்டியலிலிருந்து 15 பள்ளிகள் சீரற்ற முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டன.
ஒவ்வொரு பள்ளியிலிருந்தும் 20 மாணவர்கள் தேர்வு செய்யப்பட்டனர்.
மொத்த மாதிரி அளவு: 15 × 20 = 300 மாணவர்கள்
இந்த வகைத் தேர்வு மாணவர்களின் மாறுபட்ட பின்னணிகளை )diversity) உள்ளடக்க உதவுகிறது

ஆய்வுப் பொருட்கள் )Research Instruments)
இந்த ஆய்வில் தரவுகள் திரட்டுவதற்காக இரண்டு முக்கியமான ஆய்வுக் கருவிகள் பயன்படுத்தப்பட்டன:
1. கட்டமைக்கப்பட்ட கேள்வித்தாள் )Structured Questionnaire)
மாணவர்களின் உளவியல் நலன்களை அளவிடும் வகையில் தயாரிக்கப்பட்ட கேள்வித்தாள், 25 உருப்படிகளைக் கொண்டதாகும். இது நான்கு பிரிவுகளாக வகைப்படுத்தப்பட்டது:

உணர்ச்சி நலன் – மனஅழுத்தக் கட்டுப்பாடு, மனநிலை நிலைத்தன்மை, அமைதியாகச் செயல்படும் திறன் தன்னம்பிக்கை மற்றும் சுய மதிப்பீடு – தன்னம்பிக்கை நிலை, திறமை நம்பிக்கை, சமூக உரையாடலில் ஈடுபடுவதை பற்றிய விழிப்புணர்வு அறிவாற்றல் நன்மைகள் – கவனம், நினைவாற்றல், சிக்கல் தீர்க்கும் திறன் சமூக நடத்தை மற்றும் ஒத்துழைப்பு – குழுவினருடன் பணியாற்றும் திறன், அனுதாபம், பொறுப்பு உணர்வு

அளவீட்டு முறை: Likert Scale – 5 நிலைகள்: மிகவும் சம்மதம் (5), சம்மதம் (4), நடுநிலை (3), மறுப்பு (2), மிகவும் மறுப்பு (1)

2. பகுதி கட்டமைக்கப்பட்ட நேர்காணல் )Semi-Structured Interview)

நேர்காணல் குழு:

30 மாணவர்கள் – பல்வேறு பள்ளிகள், பாலினம் மற்றும் பின்னணிகளை பிரதிபலிக்கும் வகையில்

10 ஆசிரியர்கள் – கலைத் தொடர்புடைய பாடங்கள் கற்பிக்கிறவர்கள்

நேர்காணல் பகுதிகள்:

கலைக்கல்வியின் தனிப்பட்ட அனுபவம்

கலைப்பங்கேற்பு வாழ்க்கைத் திறன்களில் ஏற்படுத்திய மாற்றங்கள்

மனநலத்தில் ஏற்பட்ட நேரடி மாற்றங்கள்

குடும்பத்திற்கும் சமூகத்திற்கும் மத்தியிலான அணுகுமுறை மாற்றங்கள்

கருவிகளின் சரிபார்ப்பு )**Validation of Instruments)**

அறிஞர்கள் மற்றும் துறையறிஞர்கள் மூலம் ஆய்வுக் கருவிகள் சரிபார்க்கப்பட்டன:

மூன்று கல்வி உளவியலாளர்கள் மற்றும் இரு நுண்கலைக் கல்வியாளர்கள் கருவிகளை "face validity" மற்றும் "content validity" அடிப்படையில் மதிப்பீடு செய்தனர்.

கருத்துகளை ஒருங்கிணைத்து திருத்தம் செய்யப்பட்ட பிறகு, முன்னோட்ட ஆய்வாக 30 மாணவர்களிடம் கேள்வித்தாள் நிரப்பப்பட்டது.

நம்பகத்தன்மை )**Reliability):**

Cronbach's Alpha மதிப்பீடு – 0.82 இது, உளவியல் ஆய்வுகளில் அதிரடியான உள்ளமைப்பு ஒற்றுமை )high internal consistency) காட்டுகிறது.

தரவுத் திரட்டும் முறைகள் )**Data Collection Methods)**

1. பள்ளி அனுமதி மற்றும் பெற்றோர் ஒப்புதல்:

முதலில் பள்ளிகளின் தலைமையாசிரியர்களிடம் அதிகாரப்பூர்வ அனுமதி பெற்றுவைக்கப்பட்டது. மாணவர்களின் பெற்றோரிடம் எழுத்துப்பூர்வ ஒப்புதல் பெறப்பட்டது.

2. நேரடி சந்திப்பு மற்றும் நிரப்புதல்:

ஆய்வாளர் தேர்ந்தெடுக்கப்பட்ட 15 பள்ளிகளுக்கும் நேரில் சென்று, மாணவர்களிடம் கேள்வித்தாள்களை பகிர்ந்து, அவர்கள் நேரத்தில் பதில்களை பதிவு செய்தனர்.

3. நேர்காணல் திட்டமிடல்:

தற்காலிக நேரங்களில் )lunch break, activity period) ஆசிரியர்களும் மாணவர்களும் நேர்காணலுக்கு அழைக்கப்பட்டனர். ஒவ்வொரு நேர்காணலும் சுமார் 20–25 நிமிடங்கள் எடுத்துக் கொண்டது.

4. தரவுப் பாதுகாப்பு மற்றும் மறுமொழி ரகசியம்:

மாணவர்களின் பெயர் மற்றும் தனிப்பட்ட தகவல்கள் எந்த வகையிலும் பதிவு செய்யப்படவில்லை. நம்பகத்தன்மைக்காக ஒவ்வொரு பதிலும் குறியீட்டுடன் பதிவு செய்யப்பட்டது.

தரவுப் பகுப்பாய்வு மற்றும் விளக்கவுரை )**Data Analysis and Interpretation)**

இவ்வாய்வில் திரட்டப்பட்ட தகவல்களுக்கு SPSS (Statistical Package for Social Sciences) Version 25 மென்பொருள் பயன்படுத்தப்பட்டது. விவரணை புள்ளியியல் முறைகள் )Descriptive Statistics) – குறிப்பாக அடிக்கோள் எண்ணிக்கை )frequency count) மற்றும் சதவீதம் )percentage) மூலம் மாணவர் பதில்கள் பகுப்பாய்வு செய்யப்பட்டன.

அட்டவணை 1: மாணவர்களின் உணர்ச்சி நல நிலை

| பதில்கள் | எண்ணிக்கை | சதவீதம் |
|---|---|---|
| மிகவும் சம்மதம் | 162 | 54% |
| சம்மதம் | 99 | 33% |
| நடுநிலை | 21 | 7% |
| மறுப்பு | 12 | 4% |
| மிகவும் மறுப்பு | 6 | 2% |
| மொத்தம் | 300 | 100% |

🔍 விளக்கம்: 87% மாணவர்கள் கலைப்பங்கேற்பு மனஅழுத்தம் மற்றும் உணர்ச்சிக் கட்டுப்பாட்டில் அவர்களுக்கு உதவிகரமாக இருந்தது என்று தெரிவித்துள்ளனர்.
---

அட்டவணை 2: தன்னம்பிக்கை மற்றும் சுய மதிப்பீடு மேம்பாடு

| பதில்கள் | எண்ணிக்கை | சதவீதம் |
|---|---|---|
| மிகவும் சம்மதம் | 138 | 46% |
| சம்மதம் | 99 | 33% |
| நடுநிலை | 39 | 13% |
| மறுப்பு | 15 | 5% |
| மிகவும் மறுப்பு | 9 | 3% |
| மொத்தம் | 300 | 100% |

🔍 விளக்கம்: 79% மாணவர்கள் தங்கள் தன்னம்பிக்கையிலும் சமூக உறவிலும் முன்னேற்றத்தை உணர்ந்தனர்

அட்டவணை 3: அறிவாற்றல் திறன் மேம்பாடு )கவனம், சிக்கல் தீர்ப்பு(

| பதில்கள் | எண்ணிக்கை | சதவீதம் |
|---|---|---|
| மிகவும் சம்மதம் | 105 | 35% |
| சம்மதம் | 111 | 37% |
| நடுநிலை | 48 | 16% |
| மறுப்பு | 21 | 7% |
| மிகவும் மறுப்பு | 15 | 5% |
| மொத்தம் | 300 | 100% |

🔍 விளக்கம்: சுமார் 72% மாணவர்கள் கலைப்பங்காற்றல் நுண்ணறிவுக்கும் கவனத் திரண்ட தன்மைக்கும் உதவியதாகக் கூறினர்.
---

அட்டவணை 4: சமூக ஒத்துழைப்பு மற்றும் குழுநடத்தை

| பதில்கள் | எண்ணிக்கை | சதவீதம் |
|---|---|---|
| மிகவும் சம்மதம் | 117 | 39% |
| சம்மதம் | 111 | 37% |
| நடுநிலை | 45 | 15% |
| மறுப்பு | 186% | |
| மிகவும் மறுப்பு | 9 | 3% |
| மொத்தம் | 300 | 100% |

🔍 விளக்கம்: 76% மாணவர்கள் கலைக்குழு செயல்பாடுகள் சமூக உறவுகளை மேம்படுத்தியதாகவும், குழு ஒருங்கிணைப்பு திறனில் முன்னேற்றம் ஏற்படுத்தியதாகவும் கூறினர்.

முக்கிய கண்டுபிடிப்புகள் )**Key Findings)**

📌 1. உணர்ச்சி கட்டுப்பாடு மற்றும் மனநல மேம்பாடு:
மாணவர்களில் 87% பேர் கலைப்பங்கேற்பு தங்கள் மனஅழுத்தத்தையும் உணர்ச்சித் தாக்கத்தையும் சமாளிக்க உதவியதாகக் கூறினர்.

📌 2. தன்னம்பிக்கை வளர்ச்சி:
சுமார் 80% மாணவர்கள் கலைக்கல்வி தங்கள் சொந்த மதிப்பீடு மற்றும் தைரியத்தை மேம்படுத்தியதாக அறிக்கையிட்டனர்.

📌 3. அறிவாற்றல் நன்மைகள்:
மாணவர்களில் 72% பேர் கவனம், சிக்கல் தீர்வு, மற்றும் படிப்புத் திறன் ஆகியவற்றில் முன்னேற்றம் ஏற்பட்டதாக தெரிவித்தனர்.

📌 4. சமூகத் திறன்கள்:
கலைக்குழு, நாடகம், இசைக்குழு போன்ற குழுப்பணிகள் சமூக ஒத்துழைப்பு மற்றும் அனுதாபத் திறனை 76% மாணவர்களுக்கு மேம்படுத்தியதாகக் கூறப்பட்டது.

📌 5. பின்னணி அடிப்படையிலான வேறுபாடுகள்:
தனி தனி பள்ளி வகைகள் )அரசு/தனியார்(, பாலினம் மற்றும் குடும்ப வருவாய் அடிப்படையில் மாணவர்களின் பதில்களில் மாறுபாடுகள் இருந்தாலும், பொதுவாகக் கலைக்கல்வி அனைத்து மாணவர்களிலும் நேர்மறையான தாக்கத்தையே ஏற்படுத்தியது.

விவாதம் ) Discussion)
இந்த ஆய்வின் முக்கியமான முடிவுகள், பல்வேறு துறைகளில் முன்கூட்டியே மேற்கொள்ளப்பட்டுள்ள உளவியல் மற்றும் கல்விசார் ஆய்வுகளுடன் ஒத்துப் போகின்றன. மாணவர்களின் மனநலத்தில் கலைக்கல்வி நேர்மறையான தாக்கங்களை ஏற்படுத்தும் என்பது இவ்வாய்வின் தெளிவான முடிவாகத் தோன்றுகிறது.

1. உணர்ச்சி நுண்ணறிவு மற்றும் கட்டுப்பாடு
Goleman (1995) தனது நூலில் உணர்ச்சி நுண்ணறிவு ) Emotional Intelligence) என்பது வெறும் அறிவாற்றலுக்கு அப்பாற்பட்ட ஒன்று என்றும், வாழ்வின் வெற்றிக்கு முக்கியத்துவம் வாய்ந்தது என்றும் குறிப்பிடுகிறார். இவ்வாய்வில், 87% மாணவர்கள் கலைச்செயல்பாடுகள் உணர்ச்சியைக் கட்டுப்படுத்த உதவுகிறது எனக் கூறியுள்ளனர். இது Goleman கருத்துக்களுடன் உறுதியளிக்கிறது.

2. தன்னம்பிக்கை மற்றும் சுய மதிப்பீடு
Winner et al. (2013) கலைக்கல்வி மாணவர்களில் "சுய உருவாக்கத்தின்" ) identity formation) வாய்ப்புகளை அதிகரிக்கிறது எனக் கூறுகிறார்கள். இவ்வாய்விலும், 79% மாணவர்கள் தன்னம்பிக்கையில் முன்னேற்றம் கண்டனர் என்பதை இது உறுதிப்படுத்துகிறது.

3. அறிவாற்றல் மேம்பாடு
Gardner (1983) கூறும் பன்மை நுண்ணறிவு கோட்பாடுகளில், கலைக்கல்வி மாணவர்களின் உள்ளார்ந்த ) intrapersonal) மற்றும் காட்சிசார் நுண்ணறிவை ) visual-spatial intelligence) மேம்படுத்துகிறது. இங்கு 72% மாணவர்கள் சிக்கல் தீர்ப்பு மற்றும் கவனம் ஆகியவற்றில் மேம்பாடு அடைந்துள்ளனர் என்பது, இக்கோட்பாட்டுடன் நிகராய் அமைந்துள்ளது.

4. சமூக ஒத்துழைப்பு மற்றும் குழுப் பணிகள்
Goldstein & Winner (2012) மாணவர்களில் அனுதாபம் மற்றும் பொது உணர்வை ஊக்குவிக்கக் கலைக்கல்வி பெரிதும் உதவுகிறது எனக் கூறியுள்ளனர். 76% மாணவர்கள் குழுநடத்தை மற்றும் ஒத்துழைப்பு திறன் மேம்பட்டதாகக் கூறியுள்ளதால், இவ்வாய்வின் முடிவுகள் இந்தக் கோட்பாடுகளை ஆதரிக்கின்றன.

5. இந்தியச் சூழ்நிலை சார்ந்த பங்களிப்பு
இந்த ஆய்வு, மேற்கு நாடுகளில் உருவாக்கப்பட்ட கோட்பாடுகளை, இந்திய மாணவர்களிடையே செயல்படுத்தியும், புள்ளிவிபர ஆதாரங்களுடன் உறுதி செய்யும் ஒரு முக்கிய பங்களிப்பாக அமைகிறது. இந்திய கல்விச் சூழலில் கலைக்கல்வியின் உளவியல் தாக்கம் குறித்த ஆய்வுகள் குறைவாகவே உள்ள நிலையில், இவ்வாய்வு ஒரு முன்னோடியானது.

**பயன்கள் ) Implications of the Study)**
இந்த ஆய்வின் முடிவுகள் கல்விக் களத்தில், கல்வி நிர்வாகத்தில் மற்றும் மாணவர் வழிகாட்டுதலில் பல்வேறு பயன்களை அளிக்கின்றன:
◇ கல்விக்கூடங்களுக்கு
மாணவர்களின் மனநல வளர்ச்சியை முன்னோக்கி நகர்த்த, கலைப்பாடங்களை கட்டாயமாக உள்ளடக்கலாம்.
நடனம், இசை, ஓவியம், நாடகம் போன்ற செயல்பாடுகளை வாராந்திர பண்பாட்டு அம்சமாக உருவாக்கலாம்.

◇ ஆசிரியர்களுக்கு
ஆசிரியர்கள் மாணவர்களின் மனநிலை, தன்னம்பிக்கை மற்றும் சமூக ஒத்துழைப்பு திறனை மேம்படுத்த, கலைவழி செயல்பாடுகளை கற்றுக்கொடுக்கலாம்.
மாணவர்கள் பரிமாண திறன்களை அடையாளம் காண நுட்பங்கள் பயிற்சிக்கொள்ள வேண்டும்.
◇ மாணவர்களுக்கு
கலைப்பங்கேற்பு, அவர்கள் தங்கள் உணர்வுகளை வெளிப்படுத்தும் வழியாகவும், உளவியல் சீராக்கமாகவும் அமைகிறது.
அவர்களின் கல்வி வெற்றிக்கே இது ஒரு அடித்தளம் அமைக்கிறது.

◇ அரசுக்கும் கல்வி தீர்மானக்காரர்களுக்கும்
பள்ளிக் கல்வி திட்டத்தில் கலைப்பாடங்களை மையப்படுத்த வேண்டும்.
அரசு நிதி மற்றும் வளங்களை கலைக்கல்வி மேம்பாட்டிற்காக ஒதுக்க வேண்டும்.

பரிந்துரைகள் ) Recommendations)
இந்த ஆய்வின் அடிப்படையில், கீழ்காணும் பரிந்துரைகள் முன்வைக்கப்படுகின்றன. இவை, கல்வித்துறையின் பல்வேறு நிலைகளிலும் நடைமுறைப்படுத்தப்படக்கூடியவை:

◈ 1. பள்ளி கல்வியில் கலைக்கல்வியின் ஒருங்கிணைப்பு

கலைவழி பாடங்களை )இசை, நடனம், ஓவியம், நாடகம்( அடிப்படை பாடத்திட்டங்களில் இணைத்தல் அவசியமாகிறது.

இது மாணவர்களின் முழுமையான மன, அறிவாற்றல், மற்றும் சமூக வளர்ச்சிக்கு இடமளிக்கும்.

◈ 2. ஆசிரியர்கள் பயிற்சி

ஆசிரியர்கள் கலைவழி உளவியல் வளர்ச்சி பற்றிய புரிதலுடன், மாணவர்களின் திறன்களை வெளிக்கொணரக்கூடிய பயிற்சியைப் பெற வேண்டும்.
"Art-integrated pedagogy" போன்ற கலை சார்ந்த கற்பித்தல் முறைகள் பயிற்சிக்கூறுகளின் ஒரு பகுதியாக இருக்க வேண்டும்.

◈ 3. பெற்றோர் விழிப்புணர்வு

பெற்றோர்கள் கலைப்பங்காற்றலை விளையாட்டு அல்லது விருப்பப் பாடமாக அல்ல, ஒரு முக்கியமான உளவியல் வளர்ச்சி கருவியாக பார்க்கவேண்டும்.
அவர்களுக்கு விழிப்புணர்வு முகாம்கள் மற்றும் வட்டமங்கல நிகழ்வுகள் நடத்தப்படலாம்.

◈ 4. கல்வி திட்ட மையங்கள் மற்றும் அரசியல் நிர்ணய அதிகாரிகள்

கல்வி அமைச்சகம் மற்றும் பாடத்திட்ட குழுக்கள், பள்ளிக் கல்வியில் கலைக்கல்விக்கு தனி இடம் வழங்க வேண்டும்.
நகர்ப்புறத்தைவிட புறநகர்ப்புற மற்றும் கிராமப்புற மாணவர்களுக்கும் இத்தகைய வாய்ப்புகள் நிகரளவில் வழங்கப்பட வேண்டும்.

◈ 5. உளவியல் வழிகாட்டல் மையங்கள்

பள்ளிகளில் மனநல ஆலோசகர்கள் நியமிக்கப்பட வேண்டும்.
கலைப்பங்கேற்பு மற்றும் மனநலம் இடையே உள்ள தொடர்பை மாணவர்களும் ஆசிரியர்களும் புரிந்துகொள்ள உதவ வேண்டும்.

**தீர்மானம் )Conclusion)**

இந்த ஆய்வு, கலைக்கல்வி மாணவர்களின் உளவியல் நலனில் நேர்மறையான தாக்கங்களை ஏற்படுத்துகிறது என்பதைத் தெளிவாக நிரூபிக்கிறது. குறிப்பாக, 13–18 வயதுக்குட்பட்ட பருவவயதுடைய மாணவர்களில்:
உணர்ச்சி கட்டுப்பாடு, தன்னம்பிக்கை, அறிவாற்றல் திறன்கள், சமூக ஒத்துழைப்பு போன்ற அம்சங்களில் பாரிய முன்னேற்றம் காணப்படுகிறது.
அரசியல், கல்வி மற்றும் சமூக சூழலில் மனநலத்திற்காக அதிக கவனம் செலுத்தப்படும் இந்தக் காலகட்டத்தில், கலைக்கல்வி ஒரு சிருஷ்டி அடிப்படையிலான மனநல மருத்துவம் எனக் கருதலாம்.
இக்கட்டுரையின் முடிவில், "கலை என்பது ஒரு விருப்பமே அல்ல, அது ஒரு மனநலத் தேவை" என்பதே முக்கியமான செய்தியாக விளங்குகிறது. கல்வியில் கலை ஒருங்கிணைப்பு என்பது மாணவர்களின் முழுமையான வளர்ச்சிக்கான தூணாக அமைகிறது.

## REFERENCES:

மேற்கோள்கள் )**Works Cited - MLA Style)**
1.Catterall, James S. Doing Well and Doing Good by Doing Art: The Effects of Education in the Visual and Performing Arts on the Achievements and Values of Young Adults. I-Group Books, 2009.
2.Deasy, Richard J., ed. Critical Links: Learning in the Arts and Student Academic and Social Development. Arts Education Partnership, 2002.
3.Gardner, Howard. Frames of Mind: The Theory of Multiple Intelligences. Basic Books, 1983.
4.Goleman, Daniel. Emotional Intelligence: Why It Can Matter More Than IQ. Bantam Books, 1995.
5.Goldstein, Thalia R., and Ellen Winner. "Enhancing Empathy and Theory of Mind." Journal of Cognition and Development, vol. 13, no. 1, 2012, pp. 19–37. https://doi.org/10.1080/15248372.2011.573514.
6.Kisida, Brian, and Daniel H. Bowen. "New Evidence of the Benefits of Arts Education." Brookings Institute, 2019, https://www.brookings.edu/blog/brown-center-chalkboard/2019/02/12/new-evidence-of-the-benefits-of-arts-education/.
7.Winner, Ellen, Thalia R. Goldstein, and Stéphan Vincent-Lancrin. Art for Art's Sake? The Impact of Arts Education. OECD Publishing, 2013. https://doi.org/10.1787/9789264180789-en.

தமிழ்மணம் சர்வதேசத் தமிழ் ஆய்விதழ்
Tamilmanam International Research Journal of Tamil Studies | ISSN(o): 3049-0723
[ Impact Factor: 8.47 ] Monthly, Peer-Reviewed, Refereed, Indexed Journal with IC Value : 86.87
Volume - 1, Issue - 09, June - 2025



DOIs: https://doi.org/10.63300/tmXXXXXXXXXX --:-- Research Paper

# Demonstrative and Substitute Pronouns in the Poems of Female Sangam Poets

**Dr. R. Hemalatha**
Assistant Professor,
Department of Tamil B.S. Abdur Rahman Crescent Institute of Science & Technology, Vandalur, Chennai – 600 048
hemakums2013@gmail.com

***Abstract:*** *Sangam literature stands out for its unique traditions and rich cultural identity. One of its most striking features is its sophisticated and structured use of language. Rooted in an intellectually vibrant society, this body of work also gave rise to remarkable women poets who played a vital role in shaping its legacy. These women channeled both their inner feelings and the world around them into poetry that was anything but superficial. Their verses reflect not only emotional depth but also sharp intellect and a deep moral and social awareness.Their mastery of language was extraordinary. Whether through sound, word choice, sentence structure, or the ideas they conveyed, their work radiated clarity, elegance, and meaning.What truly set these women apart was their command of linguistic expression. They skillfully used demonstrative and referential terms to articulate both personal and social experiences, weaving them seamlessly into elements such as the poem's theme, the voice of the poet, the landscape (thinai), and the mode of expression (koottru). This essay explores the linguistic brilliance and expressive power of the women poets of the Sangam era, shedding light on how they made language their own.*

***Key Words:*** *Sangam Literature, Women poets, Linguistic Style, Demonstrative, Pronoun, Language Skill, Similarity, Difference*

# சங்கப்பெண்பாற் புலவர்களின் பாடல்களில் சுட்டு மற்றும் பதிலிடு பெயர்கள்

முனைவர் **இர. ஹேமலதா**
தமிழ்த்துறை
பி.எஸ். அப்துர் ரஹ்மான் கிரசண்ட் அறிவியல் மற்றும் தொழில்நுட்ப நிறுவனம், வண்டலூர், சென்னை – 600 048
hemakums2013@gmail.com

***Abstract:*** *சங்க இலக்கியங்கள் என்பவை தனக்கென தனித்த மரபுகளையும் பண்புகளையும் கொண்டவை. குறிப்பாக அதன் மொழிநடை கூறுகளை நோக்கின், செம்மையான உறுதியான மொழிக்கட்டமைப்பினைக் கொண்டதாக அமையப் பெற்றவை. கல்வியறிவு நிறைந்த சமூகப் பின்னணியில் தோன்றிய இலக்கியங்களாதலின் பெண்களும் கவிதைப் புனைவதில் ஆற்றல் கொண்டவர்களாகத் திகழ்ந்தனர். ஆகையால் அவர்களது அக மற்றும் புற உணர்வுகளைக் கவிதைகளாக வடித்தனர். அவை வெற்றுக் கவிதைகளாக அல்லாமல் கூரிய அறிவுடைய நுட்பமான உணர்வுகள் கொண்ட சமூக அக்கறையுடன் அறம் சார்ந்து எழுதப்பட்ட ஓவியங்களாக விளங்கின. அவர்களது மொழியாற்றலானது அளவிட முடியாத நிலையில் இருந்தது. ஒலிக்கூறுகளாயினும் சொல்லாட்சியாயினும் தொடரமைப்பாயினும் கூற வரும் கருத்தாகினும் மேன்மையும் பொருத்தமும் சிறப்பும் கொண்டிலங்கின. தம் மொழிநடையில் சொல்லாட்சிகளைக் கையாள்வதில் சங்கப் பெண் பெண்பாற்புலவர்கள் தனித்து விளங்கினர். அவ்வகையில் சுட்டுப்பெயர்களையும் பதிலிடு பெயர்களையும் அக நிலையிலும் புற நிலையிலும் நூல், புலவர், திணை, கூற்று ஆகிய நிலைகளில் தமக்குள் ஒத்தும் வேறுபட்டும் கையாண்டிருக்கின்றனர். இத்தகையச் சொற்களைக் கையாள்வதன் வழி, சங்கப் பெண்பாற்புலவர்களின் மொழிநடை ஆளுமையினை வெளிக்கொணர்வதாக இக்கட்டுரை அமைகிறது.*

***குறிப்பு சொற்கள்*** *: சங்க இலக்கியம், பெண்பாற் புலவர்கள், மொழிநடை, சுட்டுப்பெயர்கள், பதிலிடு பெயர்கள்,மொழி ஆளுமை, ஒற்றுமை, வேற்றுமை*

## முன்னுரை:

சங்க இலக்கியங்கள் தனித்த மொழிநடைப் பண்புகளைக் கொண்டவை. பாடுபொருளும் உணா்த்தும் திறனும் சங்க இலக்கிய மொழி அமைப்பில் தனித்தன்மை வாய்ந்தவை. சங்கப் பனுவல்கள் ஒலி நயத்திற்கும் பொருள் செறிவிற்கும் முதன்மையான இடத்தைத் தந்து அமைந்தவை. ஆசிரியம், வெண்பா, கலி, வஞ்சி என்ற பா அமைப்பினைக் கொண்டவை. மொழி அமைப்பானது அகம், புறம் என்ற இரு நிலையில் வேறுபட்ட வடிவில் செயலாற்றுபவை. திணை மரபில் மொழியப்பட்டவை. சங்க இலக்கிய மொழி வழிச் செயலானது நாடகத் தன்மைக் கொண்ட கூற்று நிலையில் இயங்குபவை. தொன்மையும் செம்மையும் கொண்ட மொழிக் கூறுகளைக் கொண்டவை. சங்க மொழியானது பண்பாட்டுக் கூறுகளை வெளிப்படுத்தி அமைந்தவை. நாட்டுப்புற மொழிக்கூறுகளை உடையவை. அறமும் மறமும் கொண்ட மொழிப்பனுவல்.

இத்தகைய சங்க இலக்கியங்களில் பெண்பாற் புலவர்களின் மொழிநடையானது சிறப்பான நிலையில் அமையப்பெற்றவை. அகநானூறு, புறநானூறு, பதிற்றுப்பத்து, குறுந்தொகை, நற்றிணை ஆகிய ஐந்து நூல்களின் வாயிலாக சங்கப் பெண்பாற்புலவர்கள் கையாண்ட சுட்டு மற்றும் பதிலிடு பெயர்கள் ஆராயப்படுகிறது. கலித்தொகை, பரிபாடல், ஐங்குறுநூறு ஆகிய நூல்களில் பெண்பாற்புலவர்களின் பாடல்கள் இடம்பெறவில்லை. திணை, துறை, கூற்று, நூல், புலவர் ஆகியவற்றின் அடிப்படையில் அவர்களது மொழிநடை வேறுபட வாய்ப்புள்ளமையால் இப்பெயர்களை அவர்கள் கையாள்வதன் வழி அவர்களது மொழியாற்றலை வெளிக்கொணரும் முயற்சியாக இக்கட்டுரை அமைந்துள்ளது.

### சுட்டுப்பெயர்

ஒருகுறிப்பிட்ட பொருளையோ, மனிதரையோ சுட்டிக்காட்டும் பொருளில் வரும் பெயர்க்கு சுட்டு என்று பெயர். உயிரெழுத்துக்களான அ, இ, உ ஆகியவையே சுட்டெழுத்துகளுக்கு உரியவையாகும். இச்சுட்டுப்பெயர்கள் இருவகைப்படும். அவை அகச்சுட்டு (அவன், இவன், உவன்), புறச்சுட்டு (அம்மனிதன், இம்மனிதன், உம்மனிதன்) என்பனவாகும். அகரச் சுட்டுப்பெயர்கள் கண்களுக்குப் புலப்படாத சேய்மையையும் இகரச் சுட்டுப் பெயர்கள் அண்மையில் உள்ளவற்றையும் உகரச் சுட்டுப்பெயர்கள் சேய்மைக்கும் அண்மைக்கும் இடைப்பட்ட கண்களுக்குப் புலப்படுகின்றவற்றையும் சுட்டுவனவாகும். பதிலிடு பெயர்களின் இரண்டாம் வடிவம் சுட்டு என்பர். சங்கப் பெண்பாற் புலவர்களது பாடல்களில் உகரச் சுட்டுகள் காணப்படவில்லை.

சங்கப் பெண்பாற் புலவர்களின் பாடல்களில் மொத்தம் 119 சுட்டுப்பெயர்கள் இடம்பெற்றுள்ளன. 30 பெண்பாற் புலவர்களுள் 16 பெண்பாற் புலவர்களே இச்சுட்டுப் பெயர்களைப் பயன்படுத்தியுள்ளனர். அகப்பாடல்களை விட புறப்பாடல்களிலேயே இச்சுட்டுப் பெயர்கள் மிகுதியாக அமைந்துள்ளன. புறநானூற்றில் 56 சுட்டுப்பெயர்களும் பதிற்றுப்பத்தில் 5 சுட்டுப்பெயர்களும் அகநானூற்றில் 18 சுட்டுப்பெயர்களும் குறுந்தொகையில் 28 சுட்டுப்பெயர்களும் நற்றிணையில் 12 சுட்டுப்பெயர்களும் காணப்படுகின்றன.

சங்கப் பெண்பாற் புலவர்களின் பாடல்களில் அவண், அவன், அவர், அது, அவை, அவ், அற்றை, அஃது, இற்றை, இஃது, இவள், ஈங்கு ஆகிய சுட்டுப்பெயர்கள் அமைந்து காணப்படுகின்றன. சுட்டுப் பெயர்கள், ஔவையாரது பாடல்களிலேயே மிகுந்து காணப்படுகின்றன. அகப்பாடல்களைவிட புறப்பாடல்களிலேயே அதிகமாக இடம்பெற்றுள்ளன. 32 சுட்டுப் பெயர்களை இவர் கையாண்டுள்ளார். அவர் இயற்றிய அகநானூறு, குறுந்தொகை, நற்றிணை, புறநானூறு ஆகிய அனைத்துப் பாடல்களிலும் இச்சுட்டுப் பெயர்களைக்

கையாண்டுள்ளார். புறப்பாடல்களில் அதியமானின் புகழையும் வீரத்தையும் கொடைச் சிறப்பினையும் கூறுவதற்காக அவன், இவன் ஆகிய சுட்டுப்பெயர்களையும் அவர், இவர் ஆகிய சுட்டுப்பெயர்களை அதியமானின் நாட்டுவளத்தையும் அதியனின் அன்பையும் சுட்டுவதற்காகப் பயன்படுத்தியுள்ளார். புறப்பாடலான 97வது பாடலில் மட்டும் 6 சுட்டுப்பெயர்களைத் தொடர்ந்து கையாண்டுள்ளார்.

**(எ.கா.)**

அவர் (97 : 4)

அவர் (97 : 8)

அவன் (97 : 14)

ஆயிடை (97 : 17)

அவர் (97 : 19)

அஃது (97 : 25)

மேற்சுட்டப்பெற்ற அனைத்து சுட்டுப்பெயர்களும் அதியமானின் புகழையும் வீரத்தையும் நாட்டின் பெருமையையும் சுட்டுவதற்காகவே பயன்படுத்தப்பட்டுள்ளன.

| புலவர்கள் | அகநானூறு | குறுந்தொகை | நற்றிணை | பதிற்றுப்பத்து | புறநானூறு |
|---|---|---|---|---|---|
| அஞ்சில் அஞ்சியார் | | | இ 190);12( | | |
| ஒக்கூர் மாசாத்தி | ஆங்கண் (384:6) | இவண்(126:2)<br>ஆங்கு(139:4) | | | இவள்(279:1)<br>இவள்(279:3)<br>இவள்(279:5) |
| ஔவையார் | அவர்(303:19) | அவர்(23:4)<br>அவர்(43:2)<br>அஃது(80:3)<br>அஃது(80:3)<br>இஃது(158:6)<br>இவர்(364:8) | இவண்(129:3)<br>அதன்(129:6)<br>அஃது(295:3)<br>அதன்(371:7) | | அது(89:9)<br>அவர்(93:6)<br>அதன்(94:3)<br>இவ்(95:1)<br>அவ்(95:3,3)<br>அவன்(96:9)<br>அவர்(97:4)<br>அவர்(97:8)<br>அவர்(97:19)<br>அவன்(97:14)<br>ஆயிடை(97:17)<br>அஃது(97:25)<br>அவர்(98:20)<br>இவண்(99:2)<br>இவன்(100:9)<br>அது(101:8)<br>அவன்(101:10)<br>அவனது (102:4)<br>அவன்(103:12)<br>அவ்(187:4)<br>இப்(206:4) |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | | | | | அத்திசை (206:13) அவன்(235:14) இது(269:7) இ(269:12) இவண் (290:1,3,6) அதன்(315:5) இது(367:14) அது(390:11) இவண் (392:21) |
| கழார்க்கீரன் எயிற்றியார் | இது(217:13) இவர்(294:6) இ(294:14) | | | | |
| காக்கைப்பாடினி நச்செள்ளையார் | | | | ஆயிடை (51:15) அது (52:25) இவண் (54:10) அவன் (56:3) ஆங்கண் (56:1) | |
| காவற்பெண்டு | | | | | இது(86:5) |
| குறமகள் இளவெயினி | | | | | அது(157:1) |
| நக்கண்ணையார் | | | | | அவை(83:3) இ(83:6) ஆங்கண் (84:4) இஃது (85:1) அவன்(85:8) |
| நன்னாகையார் | | ஈங்கு(172:3) அ(180:6) ஈங்கு(192:1) இவர்(287:5) | | | |
| நெடும்பல்லியத்தை | | இவள்(178:3) | | | |
| பாரிமகளிர் | | | | | அற்றை (112:1) அவ்(112:1) இற்றை (112:3) இவ்(112:3) |
| பூங்கணுத்திரையார் | | இது(171:4) | | | |
| போந்தைப் பசலையார் | இ(110:12) அவன்(110:14 ) | | | | |
| மாறோகத்து நப்பசலையார் | | | | | அதன்(126:13) அவ்வழி (126:15) |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | | | | | ஆங்கண் (174:10)<br>அக்குடை (174:14)<br>இவண்(280:10)<br>அதன்(280:15)<br>அ(383:12)<br>அவ்வழி (383:16)<br>அது(383:23) |
| வெண்பூதியார் | | அஃது(97:2)<br>அஃது(97:2)<br>இ(174:5)<br>அவர்(219:1)<br>ஆங்கண் (219:4)<br>ஈங்கு(219:4) | | | |
| வெண்மணிப்பூதியார் | | இது(299:1)<br>அவன்(299:5)<br>அவன்(299:6) | | | |
| வெள்ளிவீதியார் | | ஆயிடை(362:6)<br>இப்பொழுது (362:10) | இவ்(44:4)<br>இந்(58:6)<br>ஆங்கண் (146:5)<br>அவை(146:5) | அவர்(70:5)<br>ஆங்கண்(70:7)<br>இ(348:9) | |
| வெறிபாடியகாமக் கண்ணியார் | இது(22:4)<br>இவள்(22:6)<br>அது(22:7)<br>அவர்(98:2)<br>அது(98:10)<br>இ(98:24)<br>அஃது(98:25)<br>அதன்(98:30) | | | | இவர்(302:10) |

இதே போன்று ஒரே பாடலில் தொடர்ந்து சுட்டுப்பெயர்களைப் பயன்படுத்துவதில் வெறிபாடிய காமக்கண்ணியாரும் குறிப்பிடத்தக்கவராவார். தமது அகப்பாடலான அகநானூறு 98-ஆவது பாடலுள் 5 சுட்டுப் பெயர்களைக் கையாண்டுள்ளார்.

**(எ.கா.)**

அவர் (98 : 2)

அது (98 : 10)

இம் (98 : 24)

அஃது (98 : 25)

அதன் (98 : 30)

தோழி கூற்றில் அமைந்த குறிஞ்சித் திணைப் பாடலான இப்பாடலில் சுட்டுப்பெயர் தலைவனது இயல்பையும் தலைவியின் மனநிலையையும் சுட்டுவதற்காக பயன்படுத்தப்பட்டுள்ளது. சங்கப் பெண்பாற் புலவர்களின் பாடல்களில் இடம்பெற்றுள்ள சுட்டுப் பெயர்கள் கீழ்க்காணும் அட்டவணையில் விரிவாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

**சுட்டு**
**அட்டவணை**

**பதிலிடுபெயர்**

பெயர்ச்சொல்லுக்குப் பதிலாகப் பயன்படுத்தப்படும் இன்னொரு பெயர் பதிலிடு பெயராகும். இப்பதிலிடுபெயர்கள் சங்க இலக்கியங்களில் ஏராளமாக இடம்பெற்றுள்ளன. குறிப்பாக சங்கப் பெண்பாற் புலவர்களது பாடல்களில் மொத்தம் 267 பதிலிடுபெயர்கள் காணப்படுகின்றன. அவர்களுள் ஔவையாரே மிகுதியான பதிலிடுபெயர்களைக் கையாண்டுள்ளார். 267 பதிலிடுபெயர்களுள் 111 பதிலிடுபெயர்களை ஔவையார் மட்டுமே பயன்படுத்தியுள்ளார். சங்கப் பெண்பாற்புலவர்களில் இவரே அதிகப் பாடல் புனைந்துள்ளமை இதற்குக் காரணமாக இருக்கலாம். அகப்பாடல்களை விடவும் புறப்பாடல்களிலேயே பதிலிடுபெயர்கள் மிகுந்துள்ளன. பதிற்றுப்பத்திலும் காக்கைப் பாடினியார் 25 பதிலிடுபெயர்களைக் கையாண்டுள்ளார். அகப்பாடல்களைக் காணும்போது குறுந்தொகையில் ஔவையாரும் கழார்க்கீரன் எயிற்றியார் நற்றிணையிலும், வெள்ளிவீதியார் அகநானூறு மற்றும் குறுந்தொகையிலும் அதிகமான பதிலிடு பெயர்களைப் பயன்படுத்தியுள்ளனர். சங்கப் பெண்பாற் புலவர்களது பாடல்களில் தாம், தான், நீ, யான், என், எம், எனக்கு, எமக்கு, நாம், யாம், நும் போன்ற பதிலிடுபெயர்கள் காணப்படுகின்றன. புறப்பாடல்களில் வாகை மற்றும் பாடாண் திணைகளிலும் அகப்பாடல்களில் பாலைத் திணை மற்றும் தலைவி கூற்றிலும் பதிலிடுபெயர்கள் மிகுந்துள்ளன.

பல பெண்பாற் புலவர்கள் ஒரே பாடல்களில் பல பதிலிடுபெயர்களை மீண்டும் மீண்டும் பயன்படுத்தியுள்ளனர். அவருள் ஔவையார் தனியிடம் பெற்று விளங்குகிறார்.

**(எ.கா.)**

நம் (நற்.129 : 3)

தாம் (நற்.129 : 4)

நம் (129 : 5)

நாம் (129 : 6)

**அகப்பாடல்கள் - திணை**
**அட்டவணை**

| வ. எண் | நூல் | குறிஞ்சி | முல்லை | மருதம் | நெய்தல் | பாலை |
|---|---|---|---|---|---|---|
| 1 | அகம் | 12 | 6 | - | 11 | 14 |
| 2 | குறு. | 10 | 4 | 24 | 16 | 12 |
| 3 | நற். | 9 | 1 | 3 | 10 | 6 |

**அகப்பாடல்கள் - கூற்று**
**அட்டவணை**

| வ. எண் | நூல் | தலைவன் | தலைவி | தோழி | செவிலி | கரத்தை | உழையர் |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | அகம் | 22 | 17 | - | - | - | 3 |
| 2 | குறு. | 3 | 43 | 17 | - | 3 | - |
| 3 | நற். | 3 | 18 | 8 | - | - | - |

**புறப்பாடல்கள் - திணை**

**அட்டவணை**

| வ. எண் | நூல் | பாடாண் | வாகை | பொதுவியல் | தும்பை | கரந்தை | வெட்சி | கைக்கிளை | நொச்சி |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | புறம் | 42 | 21 | 15 | 11 | 4 | - | 10 | - |
| 2 | பதி.ப. | 25 | - | - | - | - | - | - | - |

போந்தைப் பசலையார் அகநானூற்றுப் பாடல் ஒன்றனுள் 9 பதிலிடுப் பெயர்களைக் கையாண்டுள்ளார். அவற்றுள் ஒன்றனைத் தவிரபிற 8 பதிலிகளும் தன்னைச் சுட்டுவதாக அமைந்த நெய்தல் திணை தோழி கூற்று பாடலைச் சார்ந்ததாகும்.

**(எ.கா.)**

நினக்கு (அகம். 110:5)

யாம் (அகம். 110:8)

யான் (அகம். 110:12)

என் (அகம். 110:21)

யான் (அகம். 110:22)

யாம் (அகம். 110:23)

தான் (அகம். 110:24)

தன் (அகம். 110:24)

என் (அகம். 110:25)

வெள்ளிவீதியாரும் குறுந்தொகைப் பாடல் ஒன்றனுள் 6 பதிலிடுபெயர்களைப் பயன்படுத்தியுள்ளார். 6 அடிகளுள் 6 பதிலிடுபெயர்கள் இடம்பெற்றுள்ளமை இவரது தனி நடையியல் பண்பைச் சுட்டுகிறது.

**(எ.கா.)**

யாம் (குறு. 169:2)

நும் (குறு. 169:3)

எமக்கு (குறு. 169:5)

நும் (குறு. 169:6)

எம் (குறு. 169:6)

எம் (குறு. 169:6)

பதிற்றுப்பத்தில் காக்கைப்பாடினியாரும் ஒரேபாடலுள் பல பதிலிடுபெயர்களை அமைத்துள்ளார். அவை அனைத்தும் முன்னிலை ஒருமையைச் சுட்டுவதாகவே விளங்குகின்றன.

**சான்று** :

நின் (பதி. 52:10)

நீ (பதி. 52:16)

நின் (பதி. 52:22)

நீ (பதி. 52:24)

நீ (பதி. 52:26)

நின் (பதி. 52:28)

இத்தகைய பதிலிடுபெயர்கள் சுட்டு, வினா போன்றவற்றுள்ளும் இடம் பெறுவனவாகும். அவை உயர்திணை, அஃறிணை ஆகியவற்றை உணர்த்தியும் ஐம்பால், மூவிடங்களையும் சுட்டி அமைவன.

## முடிவுரை

சங்கப் பெண்பாற் புலவர்கள் பல்வேறு காலப்பகுதியில் பல்வேறு நிலத்திணை மரபுகள் சார்ந்து இலக்கிய ஆக்கங்களைச் செய்தவர்கள். அகம் - புறம் என்ற இரு நிலையில் பல்வேறு பாடல்களை இயற்றியவர்கள். இப்பெண்பாற்புலவர்களிடையே ஒரு பொதுவான மொழிநடைப் பண்பு காணப்படுகின்றது. நூல், திணை, துறை, கூற்று ஆகியவற்றின் அடிப்படையில் வேறுபட்டு அமையவும் இடமுண்டு. அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை, புறநானூறு, பதிற்றுப்பத்து ஆகிய நூல்களில் மட்டுமே இவர்களது பாடல்கள் இடம்பெற்றுள்ளமையால் அவற்றில் உள்ள மொழிக்கட்டமைப்பில் சுட்டு மற்றும் பதிலிடு பெயர்களின் இயக்கத்தினை, அமைப்பினை பாடுபொருள் சார்ந்தும் மாந்தர்கள் சார்ந்தும் இக்கட்டுரை ஆராய முற்பட்டுள்ளது. இவ்வாறாக, சொற்களை பெண்பாற் புலவர்கள் எங்கு, எச்சூழலில் பயன்படுத்த வேண்டுமென்பதையும் மொழி ஆளுமையில் அவர்கள் நுண்தேர்ச்சி பெற்றிருந்த பாங்கினையும் இக்கட்டுரை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளது.

## துணைநூற் பட்டியல்

1. அகத்தியலிங்கம், ச. தமிழ்மொழி அமைப்பியல் மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம், (2011)
2. அம்மன்கிளி முருகதாஸ், சங்கக்கவிதையாக்கம் மரபும் மாற்றமும், குமரன் புத்தக இல்லம்,சென்னை, (1999).
3. சுசீலா மு., பழந்தமிழில் பதிலிடு பெயர்கள், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்-613005 (2007)
4. நும்மான் எம். ஏ மொழியும் இலக்கியமும், காலச்சுவடு பதிப்பகம், சென்னை, (2006).
5. ரேணுகா தேவி வீ, சங்கப் பெண்பாற் புலவர்களின் , உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை, (2012).
6. வீரப்பன் பா, சங்க இலக்கிய நடை, பூவழகி பதிப்பகம், சென்னை, (2010)

**REFERENCES:**

1. Agatthiyalingam, S. Tamil Language Structure, Meiyappan Publishing House, Chidambaram, (2011)
2. Ammankili Murugadoss, Sangaka Vidhaiyakkam Varanasiyam Mataram, Kumaran Bookstore, Chennai, (1999).
3. Susheela M., Alternative Names in Old Tamil, Tamil University, Thanjavur-613005 (2007)
4. Numman M. A Language and Literature, Kalachuvadu Publishing House, Chennai, (2006).
5. Renuka Devi V, Sangam Women Poets, World Tamil Research Institute, Chennai, (2012).
6. Veerappan P., Sangam Literary Style, Poovazhagi Publishing House, Chennai, (2010).

தமிழ்மணம் சர்வதேசத் தமிழ் ஆய்விதழ்
Tamilmanam International Research Journal of Tamil Studies | ISSN (o): 3049-0723
[Impact Factor: 8.47] Monthly, Peer-Reviewed, Refereed, Indexed Journal with IC Value: 86.87
Volume - 1, Issue - 09, June - 2025



DOIs: https://doi.org/10.63300/tmXXXXXXXXXX --:-- Research Paper

# So. Dharman's Works: Karisal Cultural Traditions

**Dr. C. Pavithra**
Assistant Professor Department of Tamil Dr. SNS Rajalakshmi College of Arts and Science (Autonomous), Coimbatore.

***Abstract:*** *Culture serves as a framework for a group's way of life, encompassing their practices, shared values, and social behaviors. It is the lens through which a community organizes its existence and finds meaning. The acquisition of culture is multifaceted, often manifesting through four key virtues: moral principles guiding ethical conduct, material possessions reflecting technological and economic advancements, pursuits of pleasure and enjoyment, and the adoption of austerity, emphasizing simplicity and self-discipline. These virtues intricately weave together the internal (integral) and external aspects of human life, shaping individual and collective identities. The Tamil people boast a rich and enduring cultural heritage, deeply entrenched in their classical language, customs, and traditions for over two millennia. This legacy is vividly portrayed in their esteemed literature, recognized globally for its profound impact and influence on other cultures. The essence of Tamil culture and tradition rests on the integral and intellectual understanding of its people, prioritizing intrinsic values over purely economic considerations. The novels of So. Dharman, a recipient of the prestigious Sahitya Akademi Award, provide compelling examples of this value system. Dharman meticulously depicts the lives of the Urulaikkudi people, delving into their agricultural practices, ingenious water resource management techniques, and the diverse forms of worship, celebratory festivals, traditional medicine, age-old rituals, and deeply held conventional beliefs that permeate their existence. These elements are seamlessly integrated into their daily routines, highlighting the inseparable bond between culture and lived experience. This research paper aims to explore the rustic lives and practices of the Tamil people as portrayed by So. Dharman, illuminating the cultural nuances woven into their everyday activities. Through his literary lens, we gain a deeper understanding of the enduring traditions that define their identity. Ultimately, culture serves as the cornerstone of identity and a cherished inheritance for Tamil people, both within their homeland and across the global diaspora.*

***Key Words:*** *So.Tharman, culture, belief, Karisal land, worship, rituals.*

# சோ.தர்மன் படைப்புகளில் கரிசல் பண்பாட்டு மரபுகள்

**முனைவர் சி பவித்ரா,**
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, டாக்டர் எஸ்.என்.எஸ் இராஜலட்சுமி கலை மற்றும் அறிவியல் கல்லூரி (தன்னாட்சி) கோவை.

**ஆய்வுச் சுருக்கம் :** *கலாச்சாரம் என்பது சமூகத்தில் ஒரு குறிப்பிட்ட குழுவினரின் வாழ்க்கையை ஒழுங்கமைப்பதற்காக உருவாக்கப்பட்ட ஒரு வகையான நடைமுறை மற்றும் சமூக நடத்தை ஆகும். மனித வாழ்க்கையின் ஒருங்கிணைந்த மற்றும் வெளிப்புற பகுதியுடன் இணைக்கப்பட்ட ஒழுக்கம், பொருள், இன்பம் மற்றும் துறவு ஆகிய நான்கு நற்பண்புகள் மூலம் இதை அடைய முடியும். தமிழ் மக்கள் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கும் மேலாக அதன் பாரம்பரிய மொழி, கலாச்சாரம் மற்றும் பாரம்பரியத்தில் வலுவாக வேரூன்றி உள்ளனர். இந்த கலாச்சாரம் மற்றும் பாரம்பரியக் குறியீடு தமிழ் மக்களின் ஒருங்கிணைந்த மற்றும் அறிவுசார் நுண்ணறிவை அடிப்படையாகக் கொண்டது, அவர்களின் பொருளாதார மதிப்புகளைச் சார்ந்தது அல்ல, இந்த வகையான மதிப்புகள் சாகித்ய அகாடமி விருது பெற்ற எழுத்தாளர் சோ தர்மனின் நாவல்களில் காணப்படுகின்றன. அவர் உருளைக்குடி மக்களின் வாழ்க்கையிலிருந்து அவர்களின் விவசாய நடைமுறைகள் மற்றும் நீர்வள மேலாண்மையை குறிப்பாக அவர்களின் வழிபாடு, திருவிழா, மருத்துவம், சடங்குகள் மற்றும்*

*பாரம்பரிய நம்பிக்கைகளின் பல்வேறு வடிவங்களில் சித்தரிக்கிறார். இவை அவர்களின் அன்றாட வாழ்க்கையுடன் நெருக்கமாக தொடர்புடையவை, மேலும் இந்த ஆராய்ச்சிக் கட்டுரை எழுத்தாளர் சோ தர்மனால் விவரிக்கப்பட்ட கிராமிய வாழ்க்கை, தமிழ் மக்களின் நடைமுறைகள் குறித்து ஆய்வதாக இக்கட்டுரை அமைகிறது.*

***குறிப்பு சொற்கள்*** *: சோ தர்மன், பண்பாடு, நம்பிக்கை, கரிசல் நிலம், வழிபாடு, சடங்குகள்..*

## முன்னுரை:

பண்பாடு என்பது ஒரு சமூகத்தின் அடையாளம். அது தலைமுறை தலைமுறையாக கடத்தப்படும் அறிவு, நம்பிக்கைகள், கலை, ஒழுக்க நெறிகள், சட்டங்கள், பழக்கவழக்கங்கள் மற்றும் திறன்களை உள்ளடக்கியது. ஒவ்வொரு நிலப்பரப்பிற்கும், சமூகத்திற்கும் தனித்துவமான பண்பாட்டு மரபுகள் உள்ளன. கரிசல் நிலம் தனது தனித்துவமான புவியியல் மற்றும் சமூகக் காரணிகளால் ஒரு தனித்துவமான பண்பாட்டைக் கொண்டுள்ளது. கரிசல் மண்ணின் வறண்ட நிலப்பரப்பு, விவசாய வாழ்க்கை முறை, மக்களின் மன உறுதி, நம்பிக்கைகள் மற்றும் பழக்கவழக்கங்கள் ஆகியவை இணைந்து ஒரு தனித்துவமான பண்பாட்டு மரபை உருவாக்கியுள்ளன.

சோ.தர்மன் கரிசல் நிலத்தின் முக்கியமான எழுத்தாளர்களில் ஒருவர். அவரது படைப்புகள் கரிசல் மக்களின் வாழ்க்கை, அவர்களின் நம்பிக்கைகள், சவால்கள் மற்றும் பண்பாட்டு மரபுகளை ஆழமாகப் பதிவு செய்கின்றன. அவர் கரிசல் நிலத்தின் வட்டார மொழியைப் பயன்படுத்தி, அந்த மண்ணின் மணத்தை தனது எழுத்துக்களில் கொண்டு வருகிறார். அவரது படைப்புகள் கரிசல் மக்களின் வாழ்வியலை பிரதிபலிக்கும் கண்ணாடியாக உள்ளன.

கல்தோன்றி மண்தோன்றா காலத்தே வாளொடு முன்தோன்றியவர்கள் தமிழர்கள் அவர்கள் நாகரிகத்திலும் பண்பாட்டிலும் சிறந்து விளங்கியதை அகச்சான்றுகளும் புறச்சான்றுகளும் ஆவணப்படுத்தியுள்ளன. அப்பண்பாடு என்பது நம்பிக்கை, பழக்கவழக்கம், சமுதாய அக்கறை, கலை போன்ற பல்வேறு கூறுகளைக் கொண்டது அவை போன்ற சிறந்த பண்புகளால்தான் மனிதன் விலங்குகளிடமிருந்து வேறுபட்டு நிற்கிறான். அவன் உள்ளத்தில் சிறந்த அனுபவங்கள் நிறைந்து அவை பண்பாடுகளாக உருப்பெறுகின்றன. மக்கள் வாழும் பகுதி கிராமம், நகரம் என இரண்டு பிரிவுகளைக் கொண்டது. கிராமம் என்பதற்கு நாட்டுப்புறம் என்ற வேறு பெயரும் உண்டு அந்நாட்டுப்புறம் இயற்கை வளங்கள் நிறைந்த விவசாய நிலங்களையும் காடுகளையும் தன்னகத்தே கொண்டது. இவ்வுலகம் நிலைத்திருப்பதற்கு அடிப்படை காரணம் நாட்டுப்புறமே. அப்பகுதியில் வாழும் மக்கள் பழந்தமிழர்களின் வாழ்வியல் நெறிகளைப் பாதுகாப்பவர்களாகத் திகழ்கின்றனர். அவர்கள் இயற்கையோடு இயைந்து, பாரம்பரிய மரபுகளைப் பின்பற்றி வாழ்கின்றனர். முன்னோர்கள் செய்த செயல்களில் உண்மைத்தன்மையும், நன்மையும் இருப்பின் அவற்றை பின்வரும் தலைமுறையினர் கடைபிடித்து வாழ்வது மரபு ஆகும். அதனடிப்படையில், 'சோ.தர்மன் புதினங்களில்' காணக்கிடக்கும் நாட்டுப்புற மக்களின் வாழ்வியல் மரபுகளை அடையாளப்படுத்தும் விதத்தில் இவ்வாய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

### சோ.தர்மன்: ஒரு அறிமுகம்

சோ.தர்மன் ஒரு தமிழ் எழுத்தாளர் மற்றும் சாகித்ய அகாடமி விருது வென்றவர். அவர் உருளைக்குடி கிராமத்தில் பிறந்தார். கரிசல் நிலத்தின் விவசாய வாழ்க்கை முறையையும், அங்குள்ள மக்களின் போராட்டங்களையும், நம்பிக்கைகளையும் தனது படைப்புகளில் சித்தரிப்பதில் வல்லவர். அவரது முக்கியமான படைப்புகளில் 'சூல்', 'சோகவனம்', 'தர்மம்' மற்றும் 'கூகை' ஆகியவை அடங்கும்.

சோ.தர்மனின் எழுத்துக்கள், கரிசல் நிலத்தின் மக்களின் வாழ்க்கையை ஆழமாகப் புரிந்துகொள்ள உதவுகின்றன. அவர் அந்த மக்களின் மொழி, பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள் மற்றும் சடங்குகளை துல்லியமாகப் பதிவு செய்கிறார். அவரது படைப்புகள் கரிசல் பண்பாட்டின் ஒரு ஆவணமாகக் கருதப்படுகின்றன.

**சோ.தர்மன் படைப்புகளில் கரிசல் பண்பாட்டு மரபுகள்**

சோ.தர்மனின் படைப்புகளில் காணப்படும் கரிசல் பண்பாட்டு மரபுகளை பின்வரும் தலைப்புகளின் கீழ் ஆராயலாம்:

**பண்பாடு**

மனித இனம் அறிவு நிலையில் வளர்ந்து, சிறந்த ஒழுக்க நெறிகளைப் பின்பற்றும் சமூகமாக மாறும் நிலையைப் பண்பாடு என்பர். பண்பாடு மனித உள்ளத்தோடு தொடர்புடையது. மனித இனத்தின் அறிவு வளர்ச்சியின் வெளிப்பாடும், மனிதனை பிற உயிரினங்களிடமிருந்து வேறுபடுத்திக் காட்டக்கூடியதும் பண்பாடாகும். மக்களின் சமூக வாழ்க்கையின் வளர்ச்சி கருதி, பாங்கு அறிந்து, பெருமை உணர்ந்து, பயன் தெரிந்து ஒழுகும் பண்பைதான் பண்பாடு என்று தமிழ்ச் சான்றோர் குறிப்பிடுகின்றனர். ஓர் இனத்தின் பண்பாடு அவ்வினத்தைப் பிற இன மக்களிடமிருந்து வேறுபடுத்திக் காட்டுகிறது. ஒவ்வொரு இனக்குழுவுக்கும் தனக்கென தனித்த பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள், சடங்குமுறைகள் என எண்ணிலடங்கா வேறுபாடுகளை முதன்மையாகக் கொண்டே அமைந்துள்ளன.

மா.இராமலிங்கம் என்பவர், "பண்பாடு என்பது காலங்காலமாக ஒரு குறிப்பிட்ட சமூகத்தினரிடம் வழிவழியாக தொடர்ந்து வருகிற சில அகப்புற ஒழுங்கு முறையைக் குறிப்பதாகும். சமூகக் குழுக்கள் தம் வசதி கருதியும் கட்டுக்கோப்பை முன்னிட்டும் சிலவற்றை உயர்ந்ததென்றும் விழுமியமென்றும் கருதி அவற்றை நடைமுறை ஒழுகலாறாக தழுவிக் கொள்ளும் நிலையில் உருவாவது பண்பாடு ஆகும்." என்று குறிப்பிடுகிறார். இவ்வாறு குறிப்பிட்ட இனம் சார்ந்த மக்களின் தனித்துவத்தை அறிந்துக்கொள்வதற்கு அவர்களின் வாழ்வோடு பிண்ணிப் பிணைந்துள்ள பண்பாட்டு மரபுகளை அறிந்துக்கொள்வது அவசியமாகிறது. அவ்வகையில் சோ.தர்மன் புதினங்களில் காணப்படும் மக்களின் அறநெறிகள், பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள், திருவிழாக்கள், சடங்குகள் போன்றவற்றை இங்கு காணலாம்.

**பழக்க வழக்கங்கள்**

பழக்கம் என்பது சூழ்நிலைக்கும் தேவைக்கும் ஏற்ப தனிமனிதனிடம் வேர்விடுகின்ற செயல்பாட்டின் வடிவமாகும். "பழக்கம் என்பதற்கு இணையான ஆங்கிலச் சொல் 'Habit' பல தனிமனிதர்களின் பழக்கங்கள் ஒரு குழுவின், ஒரு இனத்தின், சமுதாயத்தின் தொடர்ப் பழக்கங்களாக வளர்ந்து மரபாக முற்படும்பொழுது அது வழக்கம் என்ற நிலைக்கு உயர்கிறது." என்கிறார் பாக்கியாமேரி. பழக்கம் என்பது தனிமனிதனைச் சார்ந்த தொடக்கநிலை. வழக்கம் என்பது சமுதாயம் சார்ந்த தொடர் நிலை. தனிமனிதன் ஒருவன் பழகிப்போன முறையில் திரும்பத் திரும்பச் செய்துவரும் ஒரு குறிப்பிட்ட செயலைப் பல மனிதர்கள் ஒன்றாகச் சேர்ந்து செய்கின்ற பொழுது அது வழக்கமாகிறது. குறிப்பிட்ட பழக்க வழக்கங்கள் ஓர் சமுதாயத்தில் தொன்றுதொட்டு நிலைபெறும் பொழுது மரபு என்ற வடிவத்தைப் பெறுகிறது. ஒவ்வோர் சமூகத்துக்கும் தனித்தன்மைக் கொண்ட பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள் அச்சமூகத்தின் தொன்மைச் சின்னங்களாகவும், பண்பாட்டு மரபுகளாகவும் விளங்குகின்றன. அவ்வகையில் சோ.தர்மன் புதினங்களில் கடைப்பிடிக்கப்பட்ட பழக்கவழக்கங்களை ஆய்வதன் மூலம் கரிசல் மக்களின் தனித்தன்மையையும் பண்பாட்டு மரபையும் இனங்கண்டு கொள்ளலாம்.

கிராமத்திலுள்ள அனைவரும் சேர்ந்து, ஒரு நடைமுறையினை பின்பற்றுவது சமூகம் சார்ந்த பழக்கவழக்கமாகிறது. கிராமத்தில் எந்தவொரு பொது நிகழ்வு நடைப்பெறும் போதும் அதனை ஊர்

மக்களுக்கு முன்பே அறிவிக்கும் ‘ஊர்சாற்றுதல்’ வழக்கம். ஊர் பஞ்சாயத்து நடைப்பெறும் பொழுதும், கண்மாய் நடை திறக்கும் பொழுதும் அடைக்கும் பொழுதும் ஊர்சாற்றுதலை ‘சூல்’ புதினம் பதிவு செய்கிறது. தொத்தல்பகடை என்னும் அருந்ததிய சமூக மக்களே ஊர்சாற்றும் பணியைச் செய்கின்றனர். “அய்யாமாரே, அம்மாமாரே, நல்லா கேட்டுக்கோங்க சாமிமாரே! நாளைக்கு நம்ம ஊரு கண்மா நட சாத்தப்போராங்க.” என்னும் வரிகளில் கிராமத்தில் நடைப்பெறும் நிகழ்வுக்கு அனைவரும் தவறாது பங்குபெற வேண்டுமென்ற செய்தியை அறிவிக்க ஊர்சாற்றுதல் என்னும் நடைமுறை வழக்கத்தில் உள்ளது வெளிப்படுகிறது.

கிராமத்திற்கு புதிதாக யாரேனும் அடைக்களம் வேண்டி வந்தால் ஊரிலுள்ள பொது மடத்தில் தங்கிக்கொள்ளலாம். அவர்களுக்கு வேண்டிய உணவினை அவ்வூர் இளைஞர்கள் ஒவ்வொரு வீடுகளிலிருந்தும் வாங்கிவந்து தருவர். தங்கள் ஊரினை நம்பி வந்தவர்கள் உணவுக்காக தட்டேந்தி யாசகம் வாங்கக் கூடாதென்பது கரிசல்நில மக்கள் பின்பற்றும் வழக்கமாகும். இந்நடைமுறையினை ஆசிரியர் ‘சூல்’ புதினத்தில் பதிவு செய்கிறார். இதனை, “திருவோடு, வேல், சின்ன துணி மூட்டை, கூட்டத்தை வெறித்துப் பார்த்தான் பண்டாரம், பெரும்பாலும் ஊருக்கு வரும் பண்டாரங்கள், பரதேசிகள் தங்கினால் ஊர் இளவட்டங்களே தெருவில் போய் வீடு வீடாக சோறுவாங்கி வந்து கொடுப்பது வழக்கம். எக்காரணம் கொண்டும் சோற்றுக்காக தெருவில் வந்து கையேந்திவிடக் கூடாது என்பது பள்ளக்குடித் தெருவில் பரம்பரையாய் உள்ள பழக்கம். வித்தைக்காரர்கள் வரலாம். தானியப் பிச்சை மட்டுமே வாங்க வேண்டும். சோற்றுப் பிச்சை கிடையாது. உள்ளூர் இளவட்டங்கள் வாங்கிக்கொடுத்தால் ஒழிய யாருக்கும் சோற்றுப் பிச்சை கிடையாது.” பள்ளர் சமூக மக்களிடம் காணப்படும் இத்தகைய பழக்கமானது, இம்மக்கள் விருந்தோம்பல் பண்பில் சிறந்து விளங்கியுள்ளனர் என்பதை வெளிபடுத்துவதாக அமைகிறது.

**அன்ன உத்திரம்**

அன்ன உத்திரம் என்பது உணவிற்கு உத்திரவாதம் என்பதாகும். கிராமங்களில் பெற்றோர்கள் தங்கள் முதுமைக் காலங்களில் தங்கள் பிள்ளைகளுக்குச் சொத்துகளைப் பகிர்ந்து கொடுப்பர். அவ்வாறு கொடுக்கும்போது பிள்ளைகளின் உழைப்பில் வாழ விரும்பாதவர்கள் தங்களுக்கென ஒரு பங்கை எடுத்து வைத்துக்கொள்வர். முதுமைக் காலத்தில் பெற்றோர்களைக் கவனித்துக்கொள்ளும் பிள்ளைக்கு அவர்களின் கடைசி சொத்து கொடுக்கப்படும். முதியவர்கள் வயதான காலத்தில் உணவுக்குச் சிரமப்படாமல் மரியாதையாக கவனிக்கப்படுவதற்காக அத்தகைய நடைமுறை கிராமங்களில் கையாளப்பட்டுள்ளது. இன்றைக்கு மறைந்த இத்தகைய வழக்கத்தை ஆசிரியர் ‘கூகை’ புதினத்தில், “நாளையிலிருந்து இந்த வீடும் ஒனக்குதான். வயக்காடும் ஒனக்குதான். ஒன்னோட மக்கள்ள யாரு உனக்கு கஞ்சி ஊத்துராங்களோ அவனுக்கு இத எல்லாத்தையும் நீ குடுத்திரு அதுவரைக்கும் கை மொதலுக்கும் சாவு மொதலுக்கும் ஒங்கிட்டயே இருக்கட்டும்.” என்ற வரிகளில் காணமுடிகிறது. மேலும், அந்தக் காலத்தில் சட்டரீதியாகப் பெண்களுக்குச் சொத்தில் பங்கு கிடையாது. ஆனால் கிராமங்களில் நடைமுறையில் பெண்களுக்குச் சொத்து பகிர்ந்தளிப்பது உண்டு. திருமணமான பெண்கள் புகுந்த வீட்டில் ஏற்படும் சண்டைகளால் பிரிந்து வந்துவிட்டால், தன் சகோதரர்களின் வீட்டிற்கு செல்லாமல் தன் பெற்றோருடன் தங்கி அவர்களையும் கவனித்துக்கொள்வர். அப்போது அவர்களுக்குக் அன்ன உத்திர சொத்துக்களே கைகொடுத்து உதவுகிறது.

**நம்பிக்கைகள்**

ஒரு சமூகத்தின் பண்பாட்டு மரபினை அறிவிக்க வல்லன அச்சமூகத்தின் நம்பிக்கைகளாகும். மனித வாழ்க்கை நம்பிக்கைகளால் ஆனது. அவை சமூகத் தேவை மற்றும் குறிக்கோள்களின் அடிப்படையில் தோன்றியன. மனிதனின் தன்னல உணர்வும் சமுதாய உணர்வுமே நம்பிக்கைகளை வளர்த்து வருகின்றன. நம்பிக்கைகள் என்று தோன்றின என்பதைக் கண்டறிந்து கூற இயலாத அளவிற்கு தொன்மையானதும், மரபுவழிப்பட்டதுமாகும். நம்பிக்கைகள், இயற்கையால் படைக்கப்பட்டுள்ள பொருள்களுக்கும், மனிதனின் செயல்களுக்கும், தொடர்புண்டு என்ற கருத்தேற்றத்தின் அடிப்படையில் அவை தோன்றியனவாக காட்சியளிகின்றன.

நம்பிக்கைக் குறித்து கூறும் சு.சக்திவேல், "நம்பிக்கைகள் பெரும்பாலும் அச்சவுணர்வின் அடிப்படையாகத் தோன்றியதாகக் காட்சியளித்தாலும் இயற்கைக்கு அப்பாற்பட்ட செயல்களை உணராதபொழுதும் மனித வாழ்வில் ஏற்படுகின்ற சில நிகழ்வுகளுக்குக் காரணம் கற்பிக்க இயலாத பொழுதும் மனித மனமானது சிலவற்றைப் படைத்துக் காரணம் கற்பித்துக் கொள்கிறது. அவைகளே நம்பிக்கைகளாக உருவாகின்றன." மனித சிந்தனைக்கு அப்பாற்பட்ட செயல்பாடுகளே நம்பிக்கைகளாக உருப்பெறுகின்றன என்கிறார்.

இன்றைய நாகரிக மனிதனிடம் காணப்படும் பல நம்பிக்கைகள் நாகரிகமற்ற பழங்குடி மக்களிடமும் காணப்படுகின்றன. எனவே நம்பிக்கை என்று தோன்றியது என வரையறுப்பது இயலாத ஒன்றாகும். அவை பெரும்பாலும் நாகரிகம் தோன்றாத காலத்தில் வாழ்ந்த மக்களிடம் தோன்றி நிலை பெற்றனவாகக் இருக்கலாம். நம்பிக்கை என்பது ஒன்றைப் பற்றிய உண்மையை ஏற்பது என்பதைவிட, ஒன்றின் மீதுள்ள விருப்பத்தை நிறைவேற்றிக்கொள்ள எடுக்கும் முயற்சி என்பது பொருந்தும். விருப்பங்களின் அடிப்படையில் தோன்றிய இந்நம்பிக்கை காலப்போக்கில் மந்திர, தந்திரங்களோடும் தொடர்புக் கொண்டு சடங்குகளாக மாறின. இதுகுறித்து,

"பழங்குடி நிலையிலிருந்த மனிதன் நாகரீகம் அடைந்தாலும் பழங்குடி மனநிலை அவனைவிட்டுப் போகவில்லை. பழங்கால மனிதன் தன்னைச் சுற்றி நடக்கின்ற காரியங்களுக்கு காரணங்கள் கண்டுபிடிக்க இயலாத நிலையில் இருந்தான். பின்னர் இயற்கையைக் கட்டுப்படுத்த விரும்பிச் செய்வினையில் ஈடுபட்டான். செய்வினை ஆதிக்கம் குறைந்த சமுதாயத்தில் செய்வினைபற்றிய நம்பிக்கைகள் நாட்டுபுற நம்பிக்கைகளாக மாறின. சமூக நீதியானது சமூக மாற்றத்திற்குப் பின் நாட்டுப்புற நம்பிக்கையாக மாறிற்று." என்று சு.சக்திவேல் நம்பிக்கையின் தோற்றத்தை எடுத்துரைக்கிறார்.

**நிமித்தங்கள்**

நிமித்தங்கள் என்பது வாழ்வில் பின் நிகழவிருக்கும் நன்மை தீமைகளைச் சில குறியீடுகளின் வாயிலாக முன்னுணர்த்துவதாகும். இதனை சகுணம் எனக் குறிப்பிடுகிறோம். பழங்காலத் தமிழர் இதனை புள், நிமித்தம் ஆகிய இரு சொற்களால் சுட்டியுள்ளனர். வருங்காலத்தில் நடக்கவிருப்பதை முன்னறிவிக்கும் அறிகுறியாக நிமித்தங்களை மக்கள் கருதுவதனைப் பண்டுதொட்டு இன்றுவரையுள்ள சமூகங்களின் வாழ்வியல்கள்; உணர்த்தி நிற்கின்றன. பழந்தமிழரது நம்பிக்கைப் பரந்துபட்டவை. நிமித்தம் என்பது வாழ்வில் நிகழவிருக்கும் நன்மை தீமைகளை சில குறியீடுகளின் வாயிலாக முன்னமே உணர்த்துவதாகும். நிமித்தங்களை அவற்றின் செயற்பாட்டு விளைவுகளை அடிப்படையாக வைத்து நன்னிமித்தம், தீயநிமித்தம் என வகைப்படுத்தப்படுகின்றனர். இதனை, "நிமித்தங்கள் பெரும்பாலும் மனித மனம் முடிவெடுக்க இயலாத சூழ்நிலைகளில் தோன்றுவனவாகவே காட்சி தருகின்றன. மனிதன் ஆற்றப்புகும் செயல்களுக்கும், இயற்கையில் நிகழும் நிகழ்வுகளுக்கும் ஒருவிதத் தொடர்பு இருப்பதாக மனிதமனம் கற்பித்துக் கொண்ட நிலையில் நிமித்தக்கூறுகள் உருவாகத் தொடங்கின. காலப்போக்கில் வாழ்வியலில் தொடர்ந்து நிகழ்ந்த நிகழ்ச்சிகளோடு இவ்வியற்கை நிகழ்வுகள் இயைந்து நோக்கப்பட்ட நிலையில் அவை நிமித்தங்களாக வடிவெடுத்தன." என க.காந்தி குறிப்பிடுவதன் மூலம் அறிந்துக்கொள்ள முடிகிறது.

சோ.தர்மன் புதினங்களில், காக்கையின் எச்சம் தலையில் விழுந்தால் இறப்பு நேரும், வெளியில் செல்லும் போது பருந்து தலைக்கு மேல் பறந்தால் செல்லும் காரியம் வெற்றியடையும், சாக்குருவி சத்தம் போட்டால் இறப்பு நேரும், ஏதேனும் நற்காரியமாக வெளியில் செல்லும்போது சகுணம் பார்த்து புறப்பட வேண்டும் என்ற பழக்கததைக் கரிசல்நில மக்கள் கொண்டிருப்பதை ஆசிரியர் 'பதிமூனாவது மையவாடி' புதினத்தில் குறிப்பிடுகிறார்.

**திருவிழாக்களும் சடங்குகளும்**

கரிசல் மக்கள் பல்வேறு திருவிழாக்களைக் கொண்டாடுகிறார்கள். பொங்கல், தீபாவளி, மற்றும் கிராம தேவதைகளின் திருவிழாக்கள் முக்கியமானவை. இந்த திருவிழாக்கள் சமூக ஒற்றுமையை

வலுப்படுத்துகின்றன. அவர்கள் திருமணம், இறப்பு மற்றும் பிற முக்கியமான நிகழ்வுகளின்போது பல்வேறு சடங்குகளை மேற்கொள்கிறார்கள். இந்த சடங்குகள் அவர்களின் பாரம்பரிய நம்பிக்கைகள் மற்றும் பழக்கவழக்கங்களை பிரதிபலிக்கின்றன.

சோ.தர்மனின் படைப்புகளில் இந்த திருவிழாக்களும் சடங்குகளும் விரிவாக விவரிக்கப்பட்டுள்ளன. அவர் அந்த சடங்குகளின் நோக்கத்தையும், அவற்றின் பின்னணியில் உள்ள நம்பிக்கைகளையும் விளக்குகிறார்.

**சடங்குகள்**

மனித வாழ்வில் ஒவ்வொரு காலகட்டத்திலும் பழக்க வழக்கங்கள் தமது குடும்பத்தின் மரபுகளையும், இனத்தின் வழக்குகளையும் தனித்துக் காட்டுகின்றன. அதன் அடுத்த நிலையில் சமுதாயத்தில் பல இனத்தவர்களின் சிறப்புப் பண்பாடுகளையும் உலகிற்கு எடுத்துக் கூறுவதில் சடங்குகள் மிக இன்றியமையாததாக அமைகின்றன. ஓர் இனத்தின் அல்லது குடும்பத்தில் உள்ள முன்னோர்கள் மேற்கொண்ட செயல்களை அடுத்த தலைமுறையினர் காரணக் காரியங்களின்றி பின்பற்றி வருவதைச் சடங்குகள் எனக்கொள்ளலாம்.

“வழிவழியாக வரும் பழமரபுகளைக் காத்தல் மனித மனதின் வேரூன்றிய செயலாகும். சடங்குகள் இப்பணிக்கு பெரிதும் துணைபுரிகின்றன. முன்னோர் செய்த செயல்களை காரண காரிய ஆராய்ச்சியில் ஈடுபடாமல் தாம் கண்டவாறே பின்பற்றுவதும் நிகழ்த்துவதும் சடங்கின் முறை எனச் சடங்கின் தன்மையைப் பற்றி வாழ்வியற் களஞ்சியம் குறிப்பிடுகின்றது.

மனிதன் பிறப்பு முதல் இறப்பு வரையிலும் பல்வேறு சடங்குகளைத் தம் வாழ்வில் மேற்கொண்டு வருகிறான். அவற்றுள் சோ.தர்மன் புதினங்களில் வழிபாட்டுச் சடங்கு குறித்த பதிவுகளே அதிகமாகக் காணப்படுகிறது. கிராமங்களில் சிறுதெய்வ வழிபாடுகளில் நேர்த்திக் கடன் செலுத்துதல் என்பது சடங்குகளில் முக்கியமான ஒரு நிகழ்வாகும். சுருக்கமாக ‘நேமிக்கம்’ என்ற வார்த்தையைப் பயன்படுத்துவர். மக்கள் பின்பற்றிய சில வழிபாட்டு முறைகளில் நேர்த்திக்கடன்கள் செலுத்துதல் என்பது நன்றியின் வெளிப்பாடாக அமைகிறது. தாங்கள் நினைக்கின்ற காரியத்தை நிறைவேற்றி வைத்தால் நினைத்த காணிக்கையைச் செலுத்துவதாக தாங்கள் வழிபடும் தெய்வங்களை வேண்டிக்கொள்வதே நேர்த்திக் கடனாகும். பொங்கல் வைத்து வழிபடுதல், முடி காணிக்கையாக கொடுத்தல், அக்னி சட்டி எடுப்பது, காவடி எடுத்தல், மாவிளக்கு எடுத்தல், கிடாய் வெட்டுதல், கும்பிடு சோறு போடுதல் போன்ற பல்வேறு சடங்குகள் உண்டு. ஒவ்வொரு தெய்வத்திற்கும் சடங்குகள் மாறுபடும். தாம் வேண்டிக்கொண்ட காரியம் நிறைவேறினாலோ குறிகேட்கும் போது தெய்வம் படையலிடச் சொன்னாலோ அதனை நிறைவேற்றுவதனை நேர்த்திக்கடன் நிவர்த்தித்தல் என்பர்.

‘சூல்’ புதினத்தில் மயிலு என்னும் நிறைமாத கர்ப்பிணிப் பெண் தன் குழந்தைப்பேற்றை நினைத்து வருந்தும் சமயத்தில் அவளது தாய்நம்பிக்கைக் கொடுக்கும் விதமாக,“ஓம் கணவன் வீட்டு பொலதாம்பரம் கோயிலுக்கு கெடா வெட்டி, பொங்க வெச்சு பேர் விடுறம்னு நேந்துக்கோ எல்லாம் சரியாப் போகும். என்கிறாள். இத்தகைய வேண்டுதல்கள் செய்வதனால் இறைவன் நல்வழி காண்பிப்பார் என்பது மக்களின் நம்பிக்கை.

அருந்ததியர் சமூகத்தினர் வழிபடும் தெய்வமான உளிகருப்பன் குறித்து ஆசிரியர் பதிவு செய்கிறார். அருந்ததியர் சமூகத்தைச் சேர்ந்த மாதாயி தன் சமூகத்தைச் சேர்ந்த கருப்பன் என்பவனால் கரப்பமடைந்து ஏமாற்றப்படுகிறாள். ஊர்கூட்டத்தில் கருப்பன், மாதயி சுமக்கும் குழந்தைக்கும் தனக்கும் சம்பந்தமில்லை என்று தன்மேல் சுமத்தப்பட்ட குற்றத்தை மறுத்துவிட்டான். தான் ஏமாற்றப்பட்டதை ஏற்க முடியாத மாதாயி, தன் நிறைமாதத்தின் போது கருப்பன் வரும் வழியில் உளியைக் கொண்டு தாக்கி கருப்பனைக் கொலை செய்கிறாள். அதோடு தன் வயிற்றில் இருக்கும் குழந்தையை அறுத்து எடுத்து கருப்பன் மேல் வீசி அவளும் அவ்விடத்திலேயே இறந்து போகிறாள்.

இவ்வாறு கொடூரமாக இறந்தவர்களுக்கு அவ்விடத்திலேயே அம்மக்கள் கல்நட்டு குலதெய்வமாக வணங்கி வருகின்றனர். மாதாயி தன்னை வணங்கும் பெண்களுக்குத் திருமண பாக்கியம், குழந்தை வரம் வேண்டுவோர்க்கு குழந்தைவரம் தந்து காப்பதாக மக்கள் நம்பிக்கையுடன் வழிபடுகின்றனர். இக்கோவிலுக்கு எட்டயப்ப மகாராஜா வந்து வழிபட்டு சென்ற குறிப்புகள் உள்ளதாக ஆசிரியர் பதிவு செய்கிறார். இதுகுறித்து 'சூல்' புதினத்தில் பின்வருமாறு ஆசிரியர் குறிப்பிடுகிறார்.

"ஊருக்குள் நுழையும் பெரும் பாதையின் முகப்பில் உளிக் கருப்பன் கோயில். சக்கிலிக்குடி ஜனங்களின் துடிப்பான சாமி. இரண்டு வருடத்திற்கு ஒருமுறை நடக்கும் உளிக்கருப்பன் சாமி திருவிழா பிரசித்தம். எட்டயபுரம் மன்னரே நேரில் வந்து தரிசித்துச் சென்றதாக ஐதீகம். ஆனால் இன்றைக்கும் திருவிழாவின் போது அரண்மனை பிரதிநிதி வந்து விபூதி பெற்றுச் செல்லும் சடங்கு தொடர்கிறது."என்று சிறுதெய்வ வழிபாடு குறித்து ஆசிரியர் வெளிப்படுத்துகிறார்.

**தெய்வ வழிபாடும் நம்பிக்கைகளும்**

கரிசல் மக்கள் பல்வேறு தெய்வங்களை வழிபடுகிறார்கள். கிராம தேவதைகள், குலதெய்வங்கள் மற்றும் இயற்கை சக்திகள் அவர்களின் வழிபாட்டில் முக்கிய பங்கு வகிக்கின்றன. சோ.தர்மன் தனது படைப்புகளில் இந்த தெய்வங்களின் பெயர்களையும், அவர்களை வழிபடும் முறைகளையும் விவரிக்கிறார்.

அவர்கள் பேய், பிசாசு மற்றும் பிற இயற்கைக்கு அப்பாற்பட்ட சக்திகளையும் நம்புகிறார்கள். அவர்கள் நோய்கள் மற்றும் துன்பங்களுக்கு இயற்கைக்கு அப்பாற்பட்ட சக்திகளே காரணம் என்று நம்புகிறார்கள். இதற்காக, அவர்கள் மந்திரவாதிகள் மற்றும் பூசாரிகளின் உதவியை நாடுகிறார்கள்.

**குலதெய்வம்**

குலத்தினைத் தொன்றுதொட்டு காக்கும் தெய்வம் குலதெய்வம். தெய்வங்களில் மிகவும் வலிமை வாய்ந்ததாகவும் எளிதில் அருளை வழங்கக் கூடியதாகவும் மற்ற தெய்வ வழிபாடுகளின் பலன்களையும் பெற்றுத் தரக்கூடியதாகவும் குலதெய்வங்கள் அமைகின்றன. குலதெய்வங்கள் பற்றி துளசி இராமசாமி கூறுகையில் "மக்களோடு இருந்து வாழ்ந்தவர்கள் தெய்வ நிலைக்கு உயர்ந்து குலதெய்வங்களாகிறார்கள். இதுதான் திராவிட இனத்தின் பொதுவான குலதெய்வமுறை" என்று குறிப்பிடுகிறார். குடும்பநலன் பொருட்டு வாழ்ந்து உயிர் துறந்த ஒருவரை அக்குடும்ப வழியினர் தெய்வ நிலைக்கு உயர்த்தியுள்ளனர். ஆகையால், அக்குறிப்பிட்ட குடும்பத்தவர்களுக்குக் குடும்ப தெய்வமாக விளங்கிய தெய்வம், உறவுமுறை விரிவடையும்போது குலதெய்வமாக மாறுகிறது. இக்குலதெய்வ வழிபாட்டின் சிறப்பினைக் குறித்து ஆசிரியர் 'வௌவால் தேசம்' புதினத்தில் எடுத்துரைக்கிறார்.

"அய்யா எங்களுக்கு ஊரு இந்த ஊரு கெடையாது, ரொம்ப தூரம் உருளைக்குடி, அதுவும்போக இங்க வந்திருக்கிற ஜனங்க ஒரே ஊரு கெடையாது, நாளா ஊர்லந்தும் வந்திருக்காங்க. இது எங்க குலதெய்வம், பரம்பர பரம்பரையா நாங்க இதைத்தான் கும்பிடுறோம். எங்க வம்சத்துல யாருக்கு முதல் குழந்தை பிறந்தாலும் இந்தச் சாமியோட பேரு வச்சு மொட்டை போடுறது எங்கக் குலவழக்கம் துரைகளே. எங்க முப்பாட்டன், பாட்டன், அப்பன், அவங்களோட காலத்தடம் பட்ட இடம். அதே எடத்துல அவங்க பாதத்துக்கு மேல எம்பாதம் படனும், என் கால்தடம் பட்ட எடத்துல என் மகனோட கால்தடமும், அவனோட கால்தடத்து மேல என் பேரனோட கால்தடமும் படணும், அந்த நம்பிக்கையை நாங்க விடவே மாட்டோம் துரை." பல்வேறு காரணங்களால் வெளியூர்களுக்குச் சென்று அங்கே நிரந்தரமாய் தங்கி வாழும் மக்கள், தங்கள் வாழ்வின் முக்கியமான தருணங்களில் குலதெய்வ வழிபாட்டிற்காக தங்களின் பூர்வீக இடத்திற்கு வருகின்றனர். இக்கூற்றின் வழிகுலதெய்வ வழிபாட்டின் முக்கியத்துவத்தை ஆசிரியர் சுட்டுகிறார்.

### சமூக உறவுகளும் வாழ்க்கை முறையும்

கரிசல் மக்கள் வலுவான சமூக உறவுகளைக் கொண்டுள்ளனர். அவர்கள் ஒருவருக்கொருவர் உதவி செய்து, கஷ்டங்களை பகிர்ந்து கொள்கிறார்கள். அவர்களின் வாழ்க்கை முறை எளிமையானது மற்றும் இயற்கையோடு இணைந்தது. சோ.தர்மன் தனது படைப்புகளில் அவர்களின் சமூக உறவுகள் மற்றும் வாழ்க்கை முறையை யதார்த்தமாக சித்தரிக்கிறார்.

அவர்களின் பேச்சு வழக்கு, உணவுப் பழக்கம் மற்றும் உடைகள் ஆகியவை தனித்துவமானவை. இந்த அம்சங்கள் கரிசல் பண்பாட்டின் ஒரு அங்கமாகும்.

### காவல் தெய்வ வழிபாடு

காவல் தெய்வம் என்பது நம்மை அனைத்து சூழ்நிலைகளிலும் காத்து வருகின்ற தெய்வம். ஓர் ஊரையோ, நிலப்பரப்பையோ, பண்பாட்டையோ, தொழிலையோ காப்பதாக மக்களால் கருதப்பட்டு வழிபட்டுவரும் தெய்வமாகும். இக்காவல் தெய்வங்கள் ஒரு காலத்தில் மனிதனாக இருந்து பின் தெய்வமாக மாறி அருள்பாலித்து வருகின்றன என்று நம்பப்படுகின்றன. பண்டைக் காலந்தொட்டு ஊரின் நன்மைக்காக உயிர்விட்ட ஒருவருக்கு நடுகல் எடுத்து தெய்வமாக வழிபட்டு வருவது மரபு. கிராமங்களில் வேளாண்மை நீர்பாசனத்திற்காக கட்டப்படும் ஏரிகளில் அதிகமாக மழை பெய்யும் சமயங்களில் ஏரியின் மடை திறக்காவிட்டால் நீர் நிறைந்து மடை உடைபட்டு கிராமம் பாதிக்கப்படும். இத்தகைய சூழலில் மடையைத் திறக்கப்போகும் ஏரியை பராமரிக்கும் நீர்பாய்ச்சியை ஊர்மக்கள் அனைவரும் கூடி வணங்கிவிட்டு அவ்வூரிலுள்ள மக்களை கிராமத்தைவிட்டுபாதுகாப்பான இடங்களுக்கு அனுப்பி வைக்கப்பர். மடை திறக்கும்போது தண்ணீர் முழு வேகத்துடன் வெளியேறுவதால் நீர்பாய்ச்சி உயிரிழக்கக் கூடும். இவ்வாறு உயிரிழந்தவர்களின் குடும்பத்திற்கு நிலம் வழங்கி ஊர்மக்கள் பார்த்துக்கொள்வர். உயிரிழந்தவருக்குச் சிலைவைத்து கடவுளாக வணங்குவர். இத்தகைய காவல் தெய்வம் குறித்து ஆசிரியர் ‘சூல்’ பதிவு செய்கிறார். உருளைக்குடி கிராமத்தின் கண்மாயில் நடவுக்காக திறக்கப்பட்ட மடைகளில் ஒரு மடையில் தண்ணீர் வராமல் அடைத்துவிட்டது. அதன் அடைப்பை திறந்துவிடுவதற்காக அவ்வூரிலுள்ள மடைக்குடும்பனான கருப்பன் நீரினுள் மூழ்கி அடைப்பை எடுத்துவிட்டான். அடைப்பினை எடுப்பதற்கு வெகுநேரம் நீருக்குள் மூழ்கியிருந்ததால் மூச்சஅடக்க முடியாமல் இறந்துவிட்டான். இவ்வாறு ஊரின் நன்மைக்காக உயிர்விட்ட காரணத்தினால் ஐயனாருக்கு அருகில் நீர்பாய்ச்சி கட்டக் கருப்பனுக்கு சிலை வைத்து காவல் தெய்வமாக மக்கள் வழிபடுகின்றனர். என்பதை,

“கண்மாய்த் தண்ணீர் கரும்பு, நெல்லு, கடலை, வெற்றிலை, காய்கறிகள், பயறுகள் என மாறிமாறி சம்சாரிகளைக் காப்பாற்றியது. மடைக்குடும்பன் கருப்பன் ஐயனாரப்பன் அருகிலேயே சிலையாகிப் போனான். கருப்பனின் முன்னால் தவறாமல் பொங்கள் பானைகள் பொங்கி வழிகின்றன. இடப்பக்கம் கண்மாய் வலப்பக்கம் வயல்கள். தண்ணீரின் சலசலப்பும், பறவைகளின் கொச்சட்டமும் அய்யனாரப்பனின் அருகாமையும் கருப்பன் காவல் தெய்வமாக மாறிப் போனான். கையெடுத்துக் கும்பிடாத ஜனங்கள் இல்லை.” இங்கு மக்களுடன் வாழ்ந்து, மக்களுக்காக நன்மை செய்தவர்களே காவல் தெய்வங்களாக வழிப்படப்படுகின்றனர் என்பதை உணர முடிகிறது.

### மழைவளச் சடங்குகளும் மழைத் தெய்வ வழிபாடும்

மழைச் சடங்கு நாட்டுப்புற மக்களால் நிகழ்த்தப்படும் வளமைச் சடங்குகளுள் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். வேளாண் தொழிலுக்கு அடிப்படையாக விளங்குவது மழை. கிராமங்களில் மழை பொய்த்து கடுமையான வறட்சி மற்றும் பஞ்சம் ஏற்படும் காலங்களில் மழையை வரவைக்க மழைச்சோறு உண்ணுதல் என்னும் சடங்கு நிகழ்த்துகின்றனர். மழைவேண்டி தங்களை உடல் ரீதியாகவும் மனரீதியாகவும் வருத்தி சடங்குகள் மேற்கொள்கின்றனர். இத்தகைய சடங்குகள் மூலம் வருணபகவான் கருணைக் கொண்டு மழை

பொழிவிப்பார் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் உருவான ஒரு பண்பாட்டு நிகழ்வே ‘மழைக்கஞ்சி’ சடங்காகும்.

“இயற்கை நமக்கு உதவ வேண்டுமாயின் நாமும் இயற்கையைப்போல செய்து காட்டவேண்டும். நாம் செய்வதைப் பார்த்து இயற்கையும் அதே போலச் செய்யும் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் நிகழ்த்தப் படுபவையே வளமைச் சடங்குகள்.”என்ற மழை சடங்கு குறித்த விளக்கம் குறிப்பிடத்தக்கது. மழை இல்லாத சமயத்தில் மழை பெய்விக்க வேண்டியும், மழை மிகுந்து வீணாகும்போது மழையினை நிறுத்தவும் இறைவனை வேண்டி மக்கள் மேற்கொண்ட சடங்கு முறைகள் பண்டைக் காலம் முதல் ஒவ்வொரு நிலப்பகுதியிலும் அந்நிலத்திற்குறிய சூழலுடன் நடைப்பெற்றுள்ளதை சங்க இலக்கியங்கள் வாயிலாக அறிய முடிகிறது. தமிழ்நாட்டில் பல்வேறு பகுதிகளில் உழவர்களால் மழை வேண்டி இச்சடங்குகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றது. இவை மழைச் செம்பு எடுத்தல், மழைக்கஞ்சி காய்ச்சுதல், கொடும்பாவி கட்டி எரித்தல், ஒப்பாரி வைத்தல், போன்ற பல்வேறு பெயர்களில் மக்களால் நிகழ்த்தப்பட்டு வருகின்றன. மழையினை நம்பி விவசாயம் செய்யும் கரிசல் நிலப்பரப்பில் மழை பொய்த்துப்போகும் சூழலில் ஊர்மக்களின் ஒத்துழைப்போடு பெண்கள் முன்னெடுக்கும் சடங்காகும். ஊரிலுள்ள பெண்கள் மற்றும் குழந்தைகள் கூட்டாகச் சேர்ந்து, ஊரிலுள்ள அனைவரது வீடுகளுக்கும் சென்று ஊரார் தருகின்ற ‘சோலக் கஞ்சி, வரகுச் சோறு, சாமைச் சோறு, கேப்பைக் களி, கேப்பைக் கூழ், பச்சை நெல் சோறு, அவித்த குருதவாலி சோறு, போன்றவற்றை சேகரித்து, ஊர் மந்தையிலோ அல்லது கண்மாய் கரையிலோ சென்று ஒரே பானையில் கஞ்சியாகச் சமைத்து உண்ணுகின்றனர். உண்டு முடித்தப்பின் கரிசல் வெக்கையில் உணவு உண்ட பெண்களை அங்கிருக்கும் ஆண்கள் துரத்திச்சென்று செருப்பினால் அடித்து அழ வைக்கவேண்டும். அவ்வாறு அழும்போது கண்ணீர் பூமாதேவியின்மேல் விழவேண்டும். பெண்கள் மழைவேண்டி அழுதுக்கொண்டே ஓடி ஒப்பாரி வைக்கவேண்டும் என்பது இச்சடங்கு. மக்கள் துயரினைக் கண்டு மழைத் தெய்வமானது மழையைப் பொழியும் என்னும் நம்பிக்கையோடும் வேட்கையோடும் வேண்டுதலோடும் இத்தகைய சடங்குகள் நிகழ்தப்படுகின்றன.

### மழை வழியனுப்பும் சடங்கு

வேளாண் மக்களின் வாழ்வியலில் மழையை வழியனுப்பும் சடங்கு மிக முக்கியமானதாகும். விவசாயத்திற்கு தேவையான நீராதாரமான கண்மாய்கள், குளங்கள், ஊருணிகள் போன்றவை பெருகி நீர் கிடைத்தபின்பு மழைநீரைத் தேவையின்றி வீணாக்காமல் இருப்பதற்காக, மழையை நிறுத்த மழையை வழியனுப்பும் சடங்கைக் நிகழ்த்துகின்றனர். மழைநிறுத்தும் சடங்கு செய்வதற்கு ‘தூள்மாவுசாமி’ என்னும் தெய்வத்திற்குச் சடங்காற்றுதலாக மழைச்சடங்கு அமைகிறது. இதனை, “கண்மாய் நெறஞ்சுபோச்சு, ஊரணியும் பெருகிருச்சு, காடு பூராவும் வெதப்பு முடிஞ்சிருச்சு, வயக்காடு நடவு ஆரம்பிச்சாச்சு. இனி மழ எதுக்கு, போதும்ல்ல. பெறகென்ன வழியனுப்பியிற வேண்டியதான? இந்த மாசத்துக்குள்ள ஒரு நல்லநாளக் குறிச்சு வாங்குங்க, தொள்ளுசாமியக் கும்புட்டு மழைய நிப்பாட்டிருவம்.” என்னும் வரிகள் மழை வேண்டிய அளவு பெய்து, நடவு, விதைப்பு வேலைகள் முடிந்துவிட்டதால், மழைத்தண்ணீர் வீணாகக் கூடாதென்று நல்லநாளில் கடவுளை வணங்கி பொங்கலிட்டு வழிபட்டு, மழை போதும் என்று தாங்கள் கைகளில் வைத்துள்ள மாவினை வானம் நோக்கித் தூவி மேகம் புகையாக மாறவேண்டி மழைச்சடங்கினை நிகழ்த்துகின்றனர். இச்சடங்கு மழைநீர் தேவை நிறைவுபெற்றபின் வீணாவதைத் தடுக்கும், இயற்கையுடன் கைக்குலுக்கும் முயற்சியாக நிகழ்த்தப்படுவதை அறிய முடிகிறது.

### மருத்துவம் மற்றும் நாட்டு வைத்தியம்

கரிசல் மக்கள் நாட்டு வைத்தியத்தை பெரிதும் நம்புகிறார்கள். அவர்கள் மூலிகைகள், செடிகள் மற்றும் விலங்குகளின் பாகங்களைப் பயன்படுத்தி நோய்களைக் குணப்படுத்துகிறார்கள். அவர்கள் பாரம்பரிய மருத்துவர்களையும், நாட்டு வைத்தியர்களையும் நம்புகிறார்கள். சோ.தர்மன் தனது படைப்புகளில் இந்த நாட்டு வைத்திய முறைகள் மற்றும் பாரம்பரிய மருத்துவர்களைப் பற்றி எழுதுகிறார்.

அவர்கள் நோய்களைத் தீர்க்க மந்திரம் மற்றும் தாயத்துகளையும் பயன்படுத்துகிறார்கள். இது அவர்களின் நம்பிக்கைகள் மற்றும் சடங்குகளின் ஒரு பகுதியாகும்.

**மருத்துவம்**

ஒவ்வொரு மனித சமுதாயமும் தனக்கென ஒரு மருத்துவ முறையைக் கொண்டுள்ளது. நோயும் மருத்துவமும் மனித இனப் பண்பாட்டு வரலாற்றில் பிரிக்க முடியாதவை. மருத்துவத்தை அவ்வந் நிலமே நிர்ணயிக்கிறது. மனிதன் தான் உணர்ந்த உண்மைகளின் அடிப்படையிலும், பிறருடைய அனுபவ அறிவினாலும் இன்ன நோய்க்கு இன்ன மருந்து அல்லது மருத்துவம் என்பதனை உருவாக்கிக் கொள்கிறான். ஒரு சமுதாயத்தின் பழமை, வரலாற்றுச் சிறப்பியல்புகள் ஆகியவற்றை வெளிப்படுத்த வல்லவையாக அச்சமுதாயத்திலிருந்து, வெளிப்படுகின்ற பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள், சடங்குகள், நாட்டுபுறக்கலைகள், வழிபாடுகள் மட்டுமல்லாது அச்சமூகத்தில் பின்பற்றுகின்ற மருத்துவ முறைகளும் அடங்குகிறது. அம்மருத்துவ முறைகள் சமுதாய வளர்ச்சிக்கும், வாழ்விற்கும், வரலாற்றிற்கும் பெருந்துணையாக நிற்கிறது என்பது யாவரும் அறிந்த உண்மையாகும்.

“நாட்டுபுற மக்கள் கையாளும் மருத்துவ முறைகளை நாட்டுபுற மருத்துவம் என்பர். இவை Folk Medicine, Ethno Medicine, Popular Medicine, Popular health culture, Ethnoiatry Ethnoiatrics. எனப் பல பெயர்களால் அழைக்கப்படுகின்றன. தமிழக கிராமப்புறங்களில் நாட்டுவைத்தியம், கைமருத்துவம், பாட்டி வைத்தியம், மூலிகை மருத்துவம் என்றெல்லாம் கூறுவர். நாட்டுபுற மருத்துவம் அதற்கென வேத காலத்திலேயே நடைமுறையில் இருந்தது. அறிவியல் நாகரிக இயந்திர வளர்ச்சி பெற்ற காலத்திலும்கூட கிராமப்புறங்களில் நாட்டுபுற மருத்துவம் வழக்கில் இருந்தது குறிப்பிடத்தக்கது.” இவ்வாறு நாட்டுபுற மருத்துவம் உலகம் தோன்றிய காலம்முதலே இருந்து வந்திருப்பதை சு.சக்திவேல் பதிவு செய்கிறார்.

கரிசல்நில மக்கள் ஆங்கில மருத்துவத்தை அதிகமாக பயன்படுத்தாமல், தங்கள் நிலங்களில் விளையும் மூலிகைகளையும் மிளகு, சீரகம் போன்ற நறுமணப் பொருட்களையும் மருந்தாகப் பயன்படுத்தியுள்ளமை ஆசிரியர் சுட்டுகிறார். நாம் வாழும் இடங்களில் நம்மைச் சுற்றி பல உயிர்கள் வாழ்கின்றன. அவற்றில் ஆபத்தில்லாத உயிர்களும் ஆபத்தான உயிர்களும் நிறைந்து காணப்படுகின்றன. தீமை செய்யும் உயிரினங்களான தேள், வண்டு, பூரான், பாம்பு போன்றவை நம்மைச் சுற்றி காணப்படுகின்றன. கரிசல்நிலத்தில் வேளாண் மக்கள் காடுகளில் வேலை செய்யும்போதும் இத்தகைய விடப் பூச்சிகளின் தாக்குதல்களிலிருந்து தங்களைப் பாதுகாத்துக்கொள்ள அவற்றிற்கான மருந்துகளை நாட்டுபுற மக்கள் அறிந்து வைத்துள்ளனர். கரிசல் நிலத்தில் பாம்பு, தேள் போன்ற விஷக்கடிகளால் ஆபத்து நேர்வது தொடர்ந்து நிகழ்வதால் அவற்றின் விடத்திலிருந்து தங்களைக் காத்துக்கொள்ள நாட்டுப்புற மந்திர மருத்துவ முறைகளை பயன்படுத்துகின்றனர். மந்திர மருத்துவமான பார்வை பார்த்தல் குறித்து ‘வௌவால் தேசம்’ புதினத்தில் ஆசிரியர் வெளிப்படுத்துகிறார்.

“ஊர் ஊருக்குப் பார்வை பாக்கிற ஆட்கள் இருக்காங்க, அவங்ககிட்டப் போயி பார்வை பார்த்தா எப்படியான விடமும் தானா எறங்கிரும், அவங்க ஓசியிலதான் வைத்தியம் பாக்கணும். காசு வாங்குனா மந்திரம் பலிக்காது. அந்த மந்திரத்த அவங்க வேற யாருக்கும் சொல்லித்தர மாட்டாங்க, வாரிசுகளுக்கு மட்டுந்தா சொல்லித்தருவாங்க. பரம்பர பரம்பரையா வரும்.” என்று கரிசல் மக்கள் இத்தகைய மந்திர மருத்துவ முறையை கைக்கொண்டு வந்துள்ளது வெளிப்படுகிறது.

**முடிவுரை**

நாட்டுப்புற மக்களின் பழக்க வழக்கம் நம் நாட்டின் தொன்மையையும் மனித உணர்வுகளையும் வரலாற்றையும் பறைசாற்றுவதாய் விளங்குகிறது. அம்மக்களின் வாழ்வோடு ஒற்றிணைந்துள்ள நம்பிக்கைகள் அவர்களை வழிநடத்தியுள்ளன. நாட்டுப்புற மக்கள் கொண்டாடும் விழாக்கள் பண்பாடு, நாகரிகம் போன்றவை நிலைத்திருப்பதற்கும் வளர்வதற்கும் காரணிகளாக அமைந்துள்ளன இயற்கையால் நன்மை, தீமை ஏற்பட்ட பொழுது. அவற்றிற்கு நன்றி செலுத்தவும். அவற்றை அமைதிப்படுத்தவும் சடங்குகள்

மேற்கொள்ளப்பட்டுள்ளன. இயற்கை சார்ந்த அனுபவ அறிவின் வழியாக நாட்டுப்புற மக்களால் வழிவழியாக தொடர்ந்து வந்துள்ளது நாட்டுப்புற மருத்துவம் இன்றைய நாகரிக உலகில் மக்களின் வாழ்வில் பல மாற்றங்கள் ஏற்பட்டிருந்தாலும் மரபுகளான நம்பிக்கை பழக்க வழக்கம். சடங்கு விழா போன்றவற்றை அவர்கள் பின்பற்றி வருவதை ‘சோ.தர்மன் புதினங்களின்வழி இக்கட்டுரையில் ஆவணப்படுத்தப்பட்டுள்ளது.

**பார்வை நூல்கள்**


1. தர்மன். சோ., சூல், 2016 அடையாளம் பதிப்பகம் திருச்சி.
2. தர்மன். சோ., ,கூகை, 2015 அடையாளம் பதிப்பகம் திருச்சி.
3. தர்மன். சோ., பதின்மூன்றாவது மையவாடி, 2019 அடையாளம் பதிப்பகம் திருச்சி.
4. தர்மன். சோ., தூர்வை, 1996 அடையாளம் பதிப்பகம் திருச்சி.
5. தர்மன். சோ., வௌவால், 2021 தேசம் அடையாளம் பதிப்பகம் திருச்சி.
6. நாலடியார் உரைவளம் 1980, சரசுவதி மகால் நூல்நிலையம், தஞ்சாவூர்.
7. பாக்கியமேரி., தமிழர் பண்பாடும் பயன்பாடும், 2017, பூவேந்தன் பதிப்பகம், சென்னை.
8. டாக்டர் சு சக்திவேல்., நாட்டுப்புற இயல் ஆய்வு, 2019, மணிவாசகர் பதிப்பகம் சென்னை.
9. இராஜேந்திரன் அ., நாட்டுப்புற பண்பாட்டு பழக்கவழக்கங்கள், 2017, திருமலா பப்ளிகேஷன்ஸ் சென்னை.
10. காந்தி கா., தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும், 2008 , உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம் சென்னை.


**REFERENCES:**


1. Tharman. So., Sool, 2016 Identity Publishing House Trichy.
2. Tharman. So., ,Kookai, 2015 Identity Publishing House Trichy.
3. Tharman. So., Thirteenth Main, 2019 Identity Publishing House Trichy.
4. Tharman. So., Doorvai, 1996 Identity Publishing House Trichy.
5. Tharman. So., Bat, 2021 Desam Identity Publishing House Trichy.
6. Naladiyar Urivalam 1980, Saraswathi Mahal Library, Thanjavur.
7. Pakiyameri., Tamil Culture and Use, 2017, Bhuvendan Publishing House, Chennai.
8. Dr. Su Sakthivel., Folklore Research, 2019, Manivasagar Publishing House, Chennai.
9. Rajendran A., Folk Cultural Customs, 2017, Tirumala Publications Chennai.
10. Gandhi K., Tamil Customs and Beliefs, 2008, World Tamil Research Institute, Chennai.

தமிழ்மணம் சர்வதேசத் தமிழ் ஆய்விதழ்
Tamilmanam International Research Journal of Tamil Studies | ISSN (o): 3049-0723
[Impact Factor: 8.47] Monthly, Peer-Reviewed, Refereed, Indexed Journal with IC Value: 86.87
Volume - 1, Issue - 09, June - 2025



DOIs: https://doi.org/10.63300/tmXXXXXXXXXX --:-- Research Paper

# Scientific Thoughts in the Works of S. Balabharathi

**Mrs. K. Vimala**
Assistant Professor, Department of Tamil,
Dr. SNS Rajalakshmi College of Arts and Science (Autonomous) Coimbatore – 49
Email: vimala11tamil@gmail.com

***Abstract:*** *Literature is that which is written with a sense of beauty in profound meaning and is connected to human life. In the vast world of literature, the novel is a form of literature. Every novel reveals the inner principles of the author who created it, and serves as a mirror of the times, reflecting the opinions and emotions of the people who lived during his time. Literature that encompasses concept, form, emotion, and imagination attain a lasting life. A goal is essential for individual life, where 'ilakku' means 'goal' and 'iyam' means 'to express', thus signifying a purpose. Similarly, every novel is created with a purpose in mind. In that way, the author S. Balabharathi has recorded scientific thoughts through his works. The purpose here is to investigate it..*

***Key Words:*** *Aesthetics, goal, inner principles, scientific thoughts.*

# யெஸ்.பாலபாரதி படைப்புகளில் அறிவியல் சிந்தனைகள்

**திருமதி க.விமலா,**
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை,
டாக்டர். எஸ்.என்.எஸ். இராஜலட்சுமி கலை அறிவியல் கல்லூரி (தன்னாட்சி) கோயம்புத்தூர் - 49.

***ஆய்வுச் சுருக்கம் :*** *ஆழ்ந்த பொருளில் அழகுணர்ச்சி ததும்ப எழுதப்பெறுவதோடு, மனித வாழ்வோடு இணைந்தது இலக்கியம் ஆகும். பரந்துப்பட்ட இலக்கிய உலகில் புதினம் என்பது இலக்கியத்தின் ஒரு வடிவமாகும். ஒவ்வொரு புதினமும் அதனைப் படைத்த ஆசிரியனது உள்ளக் கோட்பாடுகளை வெளிப்படுத்துவதோடு, அவன் வாழ்கின்ற காலத்திலிருந்த மக்களின் கருத்துகளையும், உணர்ச்சிகளையும் வெளிப்படுத்தும் காலக் கண்ணாடியாக விளங்குகின்றது. கருத்து, வடிவம், உணர்ச்சி, கற்பனை ஆகிய நான்கும் அமையப்பெற்ற இலக்கியங்கள் நீடித்த வாழ்வை பெறுகின்றன. தனிமனித வாழ்க்கைக்கு குறிக்கோள் அவசியமானது இதில் 'இலக்கு' என்றால் 'குறிக்கோள்' எனவும், 'இயம்' என்றால் 'இயம்புவது' எனப் பொருள் கொண்டு குறிக்கோளை உணர்த்துகின்றன. அதுபோல ஒவ்வொரு புதினமும் ஒரு பயன் கருதிப் படைக்கப்பட்டதாகும். அவ்வகையில் ஆசிரியர். யெஸ்.பாலபாரதி தமது படைப்புகளின் வழி அறிவியல் சிந்தனைகளைப் பதிவு செய்துள்ளார். அதனைக் குறித்து ஆய்வதே இங்கு நோக்கமாக அமைகின்றது.*

***குறிப்பு சொற்கள்*** *: அழகுணர்ச்சி, குறிக்கோள், உள்ளக் கோட்பாடுகள், அறிவியல் சிந்தனைகள்*

## முன்னுரை:

வாழ்க்கையில் காணப்படும் ஆழமான உணர்ச்சிகள், போராட்டங்கள் இவற்றை அடிப்படையாகக் கொண்டு தோன்;றும் புதினங்கள் சிறப்புடையனவாக அமைகின்றன. சில புதினங்களில் கருத்துகள் ஆழமானதாகவும், அறிவியல் சிந்தனைக்கு உட்பட்டதாகவும் அமைந்துள்ளன. மேலும், கருத்துகள் மெய்ம்மையின் அடிப்படையில் அமைந்ததோடு மட்டுமின்றி, கற்போர் மனதைக் கவர்வதாய் அமைந்துள்ளன. ஆசிரியர். யெஸ்.பாலபாரதி 'ஆமை காட்டிய அற்புத உலகம்' எனும் புதினம் வழி கடலில் தோன்றும் அற்புதங்கள் குறித்தும், அங்கு வாழ்கின்ற உயிரினங்கள் குறித்த பல்வேறு அறிவியல் சார்ந்த சிந்தனைகளையும்;, 'புதையல் டைரி' ; எனும் புதினம் வழி புதிர்கள் சார்ந்த அறிவியல் சிந்தனைகளையும் பதிவு செய்துள்ளார். அதனைக் குறித்து இங்கு காண்போம்

**கடல்வாழ் உயிரினங்களும் வாழ்வியலும்:**

நாம் வாழக்கூடிய இப்பூமியானது மூன்றில் இரண்டு பங்கு கடலால் சூழப்பட்டது. இக்கடலில் பல அழகிய அம்சங்கள் நிறைந்து காணப்படுகின்றது. பல வளங்களை தன்னகத்தே கொண்டுள்ளதோடு, பல்வேறு உயிரினங்களின் வாழ்விடமாக இருக்கின்றது. கடலில் ஒரு செல் உயிரி அமீபா முதல் பல செல்கள் கொண்ட உயிரிகள் வரை வாழ்கின்றன. மேலும், உப்பு, பொட்டாசியம், யுரேனியம் போன்ற கனிமப் பொருட்களும் கடலில் அடங்கியுள்ளன. நாட்டின் பொருளாதார வளர்ச்சியை நிர்ணயிக்கும் காரணிகளுள் கடலில் காணப்படும் வளங்கள் முக்கிய பங்கு வகிக்கின்றன. கடலுக்கு தமிழில் பல பெயர்கள் உண்டு. அவற்றுள் 'முந்நீர்' எனும் பெயரானது மழைநீர், ஆற்றுநீர் மற்றும் நிலத்தடி நீர் எனும் மூன்று மூலங்களிலிருந்து நீரைப் பெறுவதால் அமையப்பெற்றது. மேலும், கடலின் மேற்பரப்பு ஒன்றாக காணப்பட்டாலும், ஒவ்வொரு கடலும் வெப்பநிலை, உப்பின் அளவு, அடர்த்தி போன்றவற்றால் வேறுபடுகின்றன.

வானில் இருந்து வரும் மழை நீர் பூமியில் உள்ள நீர் நிலைகளான ஆறு, குளம், கடல் போன்ற பகுதிகளை அடைகின்றது. கதிரவனிடமிருந்து வெளிவரும் வெப்பத்தால் நீர் ஆவியாகி மீண்டும் குளிர்ந்து மழையாகப் பொழிகிறது. இந்நிகழ்வு சுழற்சியால் மட்டுமே நிகழ்கிறது என்பது அறிவியல் கருத்து.

இதனைப் பட்டினப்பாலை பின்வருமாறு எடுத்துரைக்கிறது

"வான்முகந்தநீர் மலைப்பொழியவும்
**மலைப் பொழிந்தநீர் கடல்பரப்பவும்**
**மாரிபெய்யும் பருவம்போல**
நீரினின்றும் நிலத்துஏற்றவும் (126-129)

எனும் வரிகள் கடல் மற்றும் பிற நீர் நிலைகளில் உள்ள நீரானது சூரியக் கதிர்களிடமிருந்து வெளிவரும் வெப்பக் கதிர்களால் ஆவியாகி மீண்டும் குளிர்ந்து மழையாக பொழிகின்றது, இது தொடர்ந்து நடைபெறும் சுழற்சிவினை நிகழ்வாகும் என்பதை அறிய முடிகின்றது.

**ஆமை காட்டிய அற்புத உலகம்:**

அன்று விடுமுறை என்பதால் நண்பர்களான குமார், பாண்டிராஜ், முருகன் ஜான்சன் மற்றும் அமீர் ஆகிய ஐவரும் கடற்கரைக்கு நீச்சல் அடிக்க செல்கின்றனர். ஒவ்வொருவரும் தங்கள் ஆடைகளை களைந்துவிட்டு நீருக்குள் குதிக்க ஆயத்தமாகின்றனர். அமீர் குதிக்க ஆயத்தமானபோது 'யாராவது என்னைக் காப்பாத்துங்களேன்' என்று குரல் சற்று மெலிதாகக் கேட்டது. ஒரு ஆமை பாறை இடுக்கில் மாட்டிக் கொண்டு அவ்வாறு ஓலமிட்டுக் கொண்டிருந்தது. மீண்டும் மீண்டும் அந்த சப்தம் ஒலிக்கவே, நண்பர்கள் மெதுவாகச் சென்று ஆமையைக் கண்டனர். என்னடா ஆமை பேசுகிறது? என வினவிக் கொண்டு, அதனருகில் சென்று மெதுவாக அதனைக் காப்பாற்றி பாறையின் மீது நிமிர்த்தி வைத்தனர்

தன்னைக் காப்பாற்றிய நண்பர்களுக்கு நன்றி கூறிய ஆமை ஒவ்வொருவரின் பெயரையும் தெரிந்துக் கொண்டு, எனது பெயர் ஜீனியர் ஜோனதன் சுருக்கமாக 'ஜீஜோ' என அழைப்பர். நீங்கள் எனக்கு செய்த உதவிக்கு கைமாறாக, நான் உங்களை எங்கள் கடல் உலகின் ஆழமான பகுதிக்கு அழைத்துச் செல்கிறேன் எனக் கூறியது. மேலும், அவர களை தங்களின் அற்புத உலகத்திற்கு அழைத்துச் செல்வதற்கான ஏற்பாட்டுடன் வந்தது. உடனே நண்பர்கள் கடல் தண்ணீர் ஏன் நீலமாக இருக்கிறது? என்று வினவ,

இதனை,

"**கடலின் தண்ணீர் ஏன் நீலமாக இருக்கிறது? என்று சிந்தித்து,**
**அதற்கு விடையும் கண்டுபிடித்தவர் சர்.சி.வி.ராமன். இதற்கான**
**பதிலை சரியாகக் கண்டுபிடித்ததால் நோபல் பரிசு பெற்றார்.**
**சூரியஒளி, தண்ணீர் மூலக்கூறுகள் மூலம் சிதறடிக்கப்படுவதால்**
**கடல் நீலநிறமாக தோன்றுவதாகக் கண்டுபிடித்தார். இதை**

**"ராமன் விளைவு" என அழைத்தனர். இந்த விளைவு கண்டுபிடிக்கப்பட்ட நாள் 1928, பிப்ரவரி 28. இந்த நாளையே தேசிய அறிவியல் தினமாக இந்தியாவில் கொண்டாடி வருகிறோம்.**

ஆமை காட்டிய அற்புத உலகம்: ப.எ.17

எனும் பகுதி வழி, கடல்நீர் நீலநிறமாக இருப்பதற்குக் காரணம் "ஒளிச்சிதறல்" நிகழ்வே என்பதனையும், அறிவியல் தினம் கொண்டாடப்படுவதன் பின்னணி இதுவாகும் எனும் செய்தியையும் அறிய முடிகின்றது

**ஆமை:**

ஆமைக்கு ஆயட்காலம் அதிகம் எனவும், முட்டையிட்டு குஞ்சு பொரிக்கும் இனத்தைச் சேர்ந்தவை உலகில் ஏறத்தாழ 200 வகையான ஆமை இனங்கள் உள்ளதாகவும,; அவற்றில் பல அழிந்து வரும் நிலையில் உள்ளதாகவும் அறியப்படுகிறது. ஆமைகளின் ஆயட்காலம் அதிகமாக இருப்பதற்குக் காரணம் அவற்றின் இதயம் நிதானமாகத் துடிப்பதே ஆகும்.

இதனை.

**"பொதுவாக உயிரினங்களில் ஆமைகளுக்கு நீண்ட ஆயள் உள்ளது. இதற்கு என்ன காரணம் என்று ஆய்வு செய்தபோது, இதன் இதயம் மிகவும் நிதானமாகத் துடிப்பதே இவற்றின் நீண்ட ஆயுளுக்கு காரணம் என்று கண்டுபிடித்துள்ளனர். கடல் ஆமைகளில் சில 130 ஆண்டுகள் வரை கூட உயிர் வாழும்;".**

மேலது. ப.எ. 23.

எனும் பகுதி, வழி அறியமுடிகின்றது.

**திருக்கை மீன்கள்.**

திருக்கை மீன்கள் காண்பதற்கு தட்டையாக இருக்கும். இவற்றில் செதில்கள் இருப்பதில்லை. இவை கடலின் அடியில் புதைந்துக் கொண்டு, மற்ற மீன்கள் தங்கள் அருகில் வரும்வரை காத்திருந்து வேட்டையாடும் குணம் உடையவை. மேலும் இவை மின்சாரம் வெளிப்படுத்தும் தன்மை உடையவை,

இதனை,

**"திருக்கையின் வால் பகுதியை வெட்டி எடுத்து மனிதர்கள் ஆயுதமாகப் பயன்படுத்துவார்கள். மனிதனைக் கொல்லும் அளவுக்கு "220 வோல்ட்" மின்சாரத்தை வெளிப்படுத்தும் தன்மை கொண்ட திருக்கை இனமும் உண்டு" .**

மேலது. பக் 35.

எனும் பகுதி வழி திருக்கை மீன்களின் வால்பகுதி கடினமானது எனவும், மின்சாரத்தை வெளிப்படுத்துவதோடு, எதிரிகளைக் கொல்லும் அளவிற்கு பலம் வாய்ந்தது என்பதை அறிகின்றோம்.

**ஜெல்லி மீன்கள்:**

ஜெல்லி மீன்களில் ஒளிரும் தன்மையுள்ளவை மற்றும் தன்மையற்றவை என வகைகள் உள்ளன. அவற்றில் ஒளிரும் தன்மையுள்ள மீனைத் தொட்டால் அதிர்வு (shock) ஏற்படுவதாக குறிப்பிடப்படுகிறது. இதன் உடல் பகுதி நீரினால் ஆனதாகவும், இவற்றின் உடம்பில் அதிக நச்சுத் தன்மை உடையது எனவும். ஆழகான உயிரினமாக இருந்தாலும் ஆபத்து கொண்ட உயிரினம் என்பதை,

**"கடலில் காணக்கிடைக்கும் வித்தியாசமான உயிரினங்களில் ஜெல்லி மீன்களும் அடங்கும். இதன் உடலில் பெரும்பகுதி நீரினால் ஆனது. மீதமிருக்கும் பகுதியும் கொழ கொழ தன்மையான திடப்பொருளால் ஆனது. இதனால் ஒளி ஊடுருவும் தன்மையுடையதாக**

**இவை உள்ளன. இருட்டில் பார்க்க ஜொலிப்பது போல ஒளிரும்.**
**மனிதனைக் கொல்லும் அளவுக்கு கடுமையான நச்சுத்தன்மை**
**கொண்ட ஜெல்லி மீன் வகைகளும் உண்டு. பார்ப்பதற்கு அழகாகத்**
**தோன்றினாலும் மிகுந்த ஆபத்து கொண்ட உயிரினம்**"

மேலது.பக் 42.

இதன் வழி, ஜெல்லி மீன் பார்ப்பதற்கு அழகாகத் தோன்றினாலும் ஆபத்து நிறைந்த ஓர் உயிரினம் எனவும், ஒளி ஊடுருவும் தன்மை கொண்டது எனவும், அதிக நச்சுத்தன்மை கொண்டது என்பதையும் அறிய முடிகின்றது.

**திமிங்கலம்:**

பாலுட்டி இனமான திமிங்கலம் அதிக எடை கொண்ட ஒரு கடல்வாழ் உயிரினம்.
இதனை,

"**திமிலங்களில் 70க்கும் மேற்பட்ட வகைகள் உள்ளன. குட்டி போட்டு**
**பால் கொடுக்கும் உயிரினம். குட்டியாகப் பிறக்கும் போதே 20 அடி**
**நீளமும் 1000 கிலோ எடையும் இருக்கும். பிறந்தவுடன் மணிக்கு**
**ஐந்துகிலோ வீதம் இதன் எடை அதிகரிக்குமாம்" .**

மேலது.ப.எ 49

எனும் பகுதி வழி திமிங்கலம் ஒரு பாலூட்டி இனம் எனவும், அதிக எடை கொண்ட ஒரு உயிரினம் எனவும் அறியப்படுகின்றது.

**ஆக்டோபஸ்:**

ஆக்டோபஸ் பற்றி குறிப்பிடப்படும் செய்தி நம்மை வியப்பில் ஆழ்த்துவதாக உள்ளன.
ஏனெனில்,

**" எட்டுக்கால் கொண்ட ஒரு கடல்வாழ் உயிரினம் ஆக்டோபஸ்.**
**இதன் கால்களில் இருக்கும் உறிஞ்சும் குப்பிகள் வழி,**
**சுவை உணர்வுகளையும் அறிகின்றன. தனது நிறத்தை**
**பச்சோந்தி போல மாற்றிக் கொள்ளும் வசதியுடையமாக இதன்**
**தோல் அமைந்துள்ளது. இதன் மூளை விரைவாகக் கற்றுக்**
**கொள்ளும்திறன் பெற்றது.எதிரிகள் நெருங்கி வந்துவிட்டால்,**
**கருப்பு வண்ணத்தில் ஒரு திரவத்த சுற்றுப்புறம் முழுவதும்**
**பீய்ச்சி அடித்துவிட்டு, இந்த கரும்புக வழியே தப்பித்துக் கொள்ளும்.**
**இதன் இரத்தம் நீல நிறத்தில் இருக்கும். மூன்று இதயங்கள் அதற்கு**
**இருந்தாலும் இவை அதிக நாட்கள் உயிர் வாழ்வதில்லை. இவற்றின்**
**அதிகபட்ச வாழ்நாளே 45 ஆண்டுகள்தாம்.**

மேலது. ப.எ. 55.

எனும் பகுதி வழி ஆக்டோபஸ், எதிரிகளிடமிருந்து தங்களை காப்பாற்றிக் கொள்ள தன்னைச் சுற்றி ஒரு திரவத்தை தன்னைச் சுற்றி பரப்பி விட்டு அதிலிருந்து வரும் கரும்புகை உதவியினால் தப்பித்துக் கொள்கின்றது. மேலும், இதன் குருதி நீல நிறத்தில் இருப்பதாகவும், மூன்று இதயங்கள் இருந்தும் அதிக நாட்கள் உயிர் வாழ்வதில்லை எனும் செய்தியையும் அறிய முடிகின்றது.

**சுறாமீன்கள்:**

சுறாமீன்கள் என்றாலே ஆபத்து நிறைந்தவை என்பது நாம் அறிந்த பொதுவான செய்தி. ஆசிரியர் தமது புதினத்தில் குறிப்பிடப்படும் செய்தி மிகவும் சிந்திப்பதற்குரியதாக உள்ளது.
இதனை,

**“சுறா மீன்கள் பிறக்கும்போதே பற்களுடன் பிறக்கும். இதற்கு பற்கள் நீள் வரிசையாக இருப்பதில்லை. அடுக்கு வரிசையில் இதன் பற்கள் இருக்கும். இதற்குப் பற்கள் விழுந்தால் அடுத்த ஏழு நாட்களுக்குள் அந்த இடத்தில் புதிய பற்கள் முளைத்து விடுகின்றது. இவற்றிற்கு நுண் ஒலியையும் துல்லியமாகக் கேட்கும் திறன் உண்டு. அதோடு பத்து லட்சம் துளியில் ஒரு துளி ரத்தம் கலந்தாலும் சரியாக மோப்பம் முடித்துவிடும். இவற்றைக் கொண்டே தனது உணவுக்கான வேட்டையை இவை மேற்கொள்கின்றன.”**

மேலது.பக் 62.

எனும் பகுதி வழி, சுறா மீன்களின் பற்கள் அமைப்பு குறித்து அறிவதோடு, மிக நுண்ணிய ஒலியையும் கேட்கும் திறன் பெற்றது எனவும், அதிக மோப்ப சக்தி திறன் பெற்றது என்பதையும் அறிய முடிகின்றது.

**டால்ஃபின்:**

கடல்வாழ் உயிரினங்களில் டால்ஃபின் பாலூட்டி வகையைச் சார்ந்த விலங்கு எனவும், அறிவுக்கூர்மை நிறைந்த விலங்கு எனவும் இதனைப் பற்றிய செய்திகள் மிகவும் சிறப்புடையனவாக உள்ளன.

இதனை,

**“டால்ஃபின், கடலில் வாழும் பாலூட்டி வகையைச் சார்ந்த விலங்கு. தமிழில் இதனை ‘ஓங்கில்’ என்று கூறுகிறோம். வேகமாக நீந்தும் திறன் படைத்தவை. ‘மனிதரின் நண்பர்’ என்றும் இதனைக் கூறுவர். இவை பெரும்பாலும் மனிதர்களைத் தாக்குவதில்லை. அறிவுக் கூர்மையுடைய விலங்கு என்பதால் மேலை நாடுகளில் இவற்றுக்கு நன்கு பயிற்சி கொடுத்த உளவு வேலைகளில் ஈடுபடுவதோடு கண்காட்சியும் நடத்துகிறார்கள். 2009 ஆம் ஆண்டில் ‘ஆற்று டால்ஃபின்’ இனத்தை இந்திய தேசிய நீர் விலங்காக அரசு அறிவித்துள்ளது.”**

மேலது.ப.எ.78.

எனும் பகுதி வழி, டால்ஃபின் குறித்த அரிய செய்திகளாக வேகமாக நீந்தும் திறன் பெற்றவை. மனிதரின் நண்பர், அறிவுக் கூர்மை உடைய மற்றும் உளவு வேலைகளில் ஈடுபடுத்தப்படுவதோடு, தேசிய நீர் விலங்கு டால்ஃபின் எனும் செய்தியையும் அறிய முடிகின்றது.

**புதையல் டைரி**

ஜான்சன், குமார், சல்மான், ராஜா இவர்கள் அனைவரும் நண்பர்கள். தங்கச்சிமடம் என்னும் ஊரில் வசிப்பவர்கள். ஜான்சனின் தங்கை சோபியா, இவர்களின் தாத்தா (கஸ்பர்) இருவருக்கும் ஒரு டைரியை (நாட்குறிப்பேடு) பரிசாக வைத்திருந்தார். 'தாத்தாவின் புதையல் பரிசு' என எழுதியிருந்த அதனை தன் மகனிடம் கொடுத்தார் ஜான்சனின் அப்பா. ஆனால் அதில் எழுதியிருந்த புதிர்களுக்கு பதில் எதுவும் புரியவில்லை. அதனைப் பெற்றுக் கொண்டவன் தன் நண்பர்களிடம் காண்பித்தான். குமாருக்கு ஏதும் புரியவில்லை. சல்மானிடம் கொடுத்தபோது அதனைப் படித்து விடுகதை போல் இருக்கிறது என்றான். புதிருக்கான விடைகளைக் கண்டறிந்துக் கொள்ளும் போது தாத்தாவின் 'புதையல் டைரி' அளிக்கும் புதையல் பற்றிய இரகசியம் வெளிப்படுவதோடு, அதன் முக்கியத்துவம் உணர்த்தப்படுகின்றது.

சல்மான் மீண்டும் மீண்டும் படித்து விடையைக் கண்டுபிடித்துவிட என எண்ணுகிறான். 'எதையும் ஆர்வத்தோடும் ஈடுபாட்டோடும் செய்தால் பெறலாம்' என்று தன் கணித ஆசிரியர் கூறிய செய்திகள் மனதில் ஓட புதிய விடையைக் கண்டறிந்தான் “உனக்குச் சொந்தமானது ஆனால் உன்னைத் தவிர பிறரே பயன்படுத்துவர்.

அது என்ன என்று சொல்?" என வினவ, தாத்தா நமது பெய சொல்லியிருக்கிறார் எனக் கூறியதும் நண்பர்கள் மகிழ்ச்சி அடைந்தனர்.

அறிவுப்பூர்வமாக சிந்திக்கும் வகையில் தாத்தா பல்வேறு புதிர்களை நாட்குறிப்பேட்டில் எழுதியிருந்தார். 'இந்த உலகம் புதிர்களால் ஆனது. தாவரங்கள் பச்சையாக இருப்பதற்கான காரணம். சூரியன் சுடுவதற்கான காரணம், பறவைகள் ஏன் பறக்கின்றன. சந்திரனின் ஒளி ஏன் சுடுவதில்லை எனும் பல்வேறு புதிர்கள் கண்டுபிடித்து மனித உலகத்திற்கு அளித்துள்ளனர். அதைப் போலவே நாட்குறிப்பேட்டிலும் அறிவுப்பூர்வமான பல்வேறு புதிர்களை எழுதியதோடு குறிப்புகளையும் தந்துள்ளேன். நீங்கள் அதற்கான விடையைக் கண்டுபிடிக்கிற உங்களுக்கு ஓர் அற்புதமான புதையல் கிடைக்கும்' எனக் குறிப்பிட்டிருந்தார்.
காந்தத்தினை நூலில் கட்டித் தொங்கவிட்டால் அது எந்தப்பக்கம் பாரத்து நிற்கும் என்கிற கேள்விக்கு இரண்டு பக்கங்களில் தெற்கிலிருந்து வடக்கு நோக்கிதான் நிற்கும்.
இதனை,

**"நாலு திசையில் தெற்குப் பக்கமும் வடக்குப் பக்கமும் பார்த்துச்**
**சுத்தும். காந்தத்துக்கு இரண்டு பக்கம் இருக்கு. ஒண்ணு தெற்கு,**
**இன்னொன்னு வடக்கு அதை ஒரு நூலில் கட்டித் தொங்கவிட்டால்,**
**அது தெற்கு பக்கத்திலிருந்து வடக்குப் பார்த்துதான் நிற்கும்".**
(யெஸ்.பாலபாரதி, புதையல் டைரி, ப.21)

எனும் பகுதி, காந்தம் வடக்கு பக்கம் நோக்கிதான் நிற்கும் என்பதை எடுத்துரைக்கின்றது.

நண்பர்கள் அனைவரும் அடுத்தபடியாக 25-ஆம் இலக்கம் கொண்ட வீட்டிற்குச் சென்றனர். அங்கே இருந்த தாத்தாவிடம் தங்களை அறிமுகம் செய்து கொண்டவுடன்இ உள்ளே சென்ற தாத்தா ஒரு கண்ணாடி பாட்டிலை எடுத்துக் கொடுத்தார். அதனுள் ஒரு வெள்ளைக் காகிதம் சுருட்டப்பட்டும் வாய்பகுதி கார்க் வைத்தும் அடைக்கப்பட்டிருந்தது. முயற்சிகள் செய்தும் அதனை திறக்க முடியவில்லை. ஊரின் ஒதுக்குப்புறமாகச் சென்று பாட்டிலைச் செங்குத்தாகப் போட்டான் சல்மான். அடிப்பாகம் உடைந்து அதனுள் இருந்த காகிதம் வெளியே வந்தது. ஆர்வத்துடன் திறந்துப் பார்த்த அவர்களுக்கு ஏமாற்றமாக இருந்தது. வெற்றுக் காகிதமாக இருக்கிறதே என்ன செய்ய என ஜான்சன் கேட்க. இது நிச்சயமாக வெற்றுக் காகிதமாக இருக்காது. இதனுள் ஏதாவது ஒரு புதிர் இருக்கும் என்றான் குமார், சல்மானுக்கு திடீரென்று ஒரு யோசனைத் தோன்றியது.

பழங்காலத்தில் இரகசியச் செய்திகளை இப்படித்தான் எழுதி அனுப்புவார்கள். பார்ப்பதற்கு வெற்றுக் காகிதமாக தோன்றினாலும், அதில் ஏதாவது ஓர் இரகசிய செய்தி இருக்கும். காகிதத்தை தண்ணீரில் நனைத்தாலோ. தீயில் காண்பித்தாலோ அதில் மறைந்து இருக்கும் எழுத்துகள் நன்றாகத் தெரியும். அதுமட்டுமின்றி, எலுமிச்சைச்சாறு. சோப்பு போன்றவற்றைக் கொண்டு காகித்தில் எழுதினாலோ பார்க்க ஒன்றும் தெரியாது. ஆனால் தண்ணீரில் நனைத்தால் நன்றாகத் தெரியும். மெழுகில் எழுதினால் அதனை நெருப்பின்மேல் காட்டினால்தான் நன்றாகத் தெரியும்.
இதனை பின்வரும் பகுதி விளக்குகிறது.

**"ஆமாண்டா, அந்த காலத்துல ரகசிய செய்திகளை இப்படித்தான் எழுதி**
**அனுப்புவாங்க. பார்க்க வெள்ளைக் காகிதமாகத்தான் தெரியும். அதில்**
**ஏதாவது எழுதி இருக்கிறதா என்று பார்க்க, காகித்ததைத் தீயில்**
**காட்டினாலோ, தண்ணீரில் நனைத்தாலோ அதில் மறைந்திருக்கும் எழுத்து தெரியும்".**

**"எலுமிச்சைச் சாறு அல்லது சோப்பை வச்சுக் காகிதத்தில்**
**எழுதினா சாதாரணமாகப் பார்க்க ஒன்றும் தெரியாது. நீரில்**

**நனைத்தால்தான் எழுத்து கண்ணுக்குத் தெரியும்"**

**"ஆமாண்டா.... மெழுகை வச்சுக் காகிதத்தில் எழுதியிருந்தா,**
**அந்த பேப்பரை நெருப்பின்மேல் காட்டினால்தான்**
**பளிச்சென எழுதியதைப் படிக்க முடியும்".**

(மேலது,ப.34)

எனும் பகுதி விளக்குகின்றது. இதன்வழி இரகசிய செய்திகளை அனுப்புவதற்கு இத்தகைய வழிமுறைகளைக் கையாண்டுள்ளனர் என்பதை அறிய முடிகின்றது.

காகிதத்தை தண்ணீரில் நனைத்ததும் சில எழுத்துகள் தெரிய ஆரம்பித்தன. சிறு நேரத்திற்குப் பிறகு காகிதம் நீரை முழுவதுமாக உறிஞ்சியவுடன் ஒவ்வொரு வார்த்தையும் நன்றாக தெரிய ஆரம்பிக்கிறது. ஒவ்வொரு வாக்கியத்தையும் எழுதிவைத்து படித்தவுடன் புதிருக்கான விடை கிடைத்தது.

கடிதத்தில் தாத்தா எழுதியிருந்த செய்தியில் இந்த உலகில் அழியாதச் செல்வம் கல்விச் செல்வம் மட்டுமே, அள்ள அள்ளக் குறையாத புத்தகங்கள் புதிய அனுபவங்களைத் தருவதோடு, மகிழ்ச்சியாக வாழவும் வழி வகுக்குகிறது. நீங்கள் கற்றுக் கொண்டதை மற்றவர்களுக்கும் கற்றுத் தரவும், புதிய செய்திகளை மற்றவருடன் பகிர்ந்துக் கொள்வதோடு, கற்பனைச் சிறகினை விரியுங்கள் புதிய அனுபவங்களைப் பெறுங்கள் என்பதனை,

**"எனதருமை செல்லங்களே, முதலில் இந்தப் புதையலை**
**கண்டுபிடித்தமைக்கு வாழ்த்துக்கள். காலத்தால் அழியாத சிறுவர்**
**இலக்கியப் படைப்புகள் இவை. அறிவியல், கதைகள், கட்டுரைகள்**
**எனப் பல பிரிவுகளில் உள்ள புத்தகங்களும் இதில் உள்ளன.**
**இந்த உலகில் அள்ள அள்ளக் குறையாத செல்வம் என்றால் அது**
**கல்விச் செல்வம் என்பதை மறக்காதீர்கள். இந்தப் புத்தகங்கள்**
**உங்களுக்குப் புதிய அனுபவத்தைக் கொடுக்கும். மகிழ்ச்சியாக**
**வாழவும் இவை உங்களுக்கு உதவும். நீங்கள் படித்து**
**அறிந்து கொண்ட விசயங்களை மற்றவர்களோடு பகிர்ந்துக்**
**கொள்ளுங்கள். கற்பனைச் சிறகு விரித்து உலகின் புதிய**
**அனுபவங்களைப் பெற வாழ்த்துக்கள்!".** (மேலது,பக்.55,56)

எனும் பகுதி விளக்குகின்றது. இதன்வழி, புத்தகங்கள் காலத்தால் அழியாத செல்வம் எனவும், அதன்மூலம் வாழ்வினில் புதிய அனுபவங்களைப் பெற முடியும் என்பதை உணர்த்துகின்றது. மேலும், புத்தகங்கள் நாம் மகிழ்ச்சியாக வாழவும் வகை செய்வதுடன் அவற்றின் மதிப்பையும் வலியுறுத்துகின்றது.

இப்படைப்பின் வழி, உலகில் மிகவும் உயர்ந்த செல்வம் கல்விச்செல்வம் என்பதை ஆசிரியர் உணர்த்துகின்றார். மற்ற அனைத்து செல்வங்கள் எல்லாம் காலத்தால் அழிந்து விடக்கூடியது. ஆனால் கல்விச் செல்வம் என்றும் அழியாதது. சிந்திக்கும் வகையில் அறிவுப்பூர்வமான பல்வேறு வினாக்களுக்கு விடுகதை வடிவிலும், புதிர் வடிவிலும் புதையலை கண்டுபிடிக்கும் நோக்கத்துடன் அமைத்திருப்பது புதிய அனுபவத்தைத் தருகின்றது. மேலும், 'என்றும் அழியாதவை புத்தகங்கள்' அவற்றின் மூலம் நமது வாழ்க்கை மேம்பாடு அடையும் என்பதையும் வலியுறுத்துகின்றார்.

**தொகுப்புரை:**

- யெஸ். பாலபாரதியின் புதினம் வழி கடல்வாழ் உயிரினங்கள் குறித்த அறிவியல் சிந்தனைகளை அறிந்துக் கொள்ள முடிகின்றது.
- கடல்நீர் நீல நிறமாக இருப்பதற்கு காரணம் ஒளிச்சிதறல் விளைவே என்பதையும், அறிவியல் தினம் கொண்டாடப்படுவதன் அவசியம் உணர்த்தப்படுகின்றது.
- ஆமைகளுக்கு ஆயட்காலம் அதிகமாக இருப்பதற்குக் காரணம் அவற்றின் இதயம் நிதானமாகத் துடிப்பதே ஆகும்.
- சாலமன் மீன்கள் நீண்ட தூரம் நீந்திச் செல்லும் திறன் கொணடவை. திருக்கை மீன்கள் தங்களது வால் பகுதியை எதிரிகளிடமிருந்து தங்களை காப்பாற்றிக் கொள்ள ஆயுதமாக பயன்படுத்துகின்றது என்பதையும் அறிகின்றோம்.
- ஜெல்லி மீன்கள் பார்ப்பதற்கு அழகாகத் தோன்றினாலும் ஆபத்து நிறைந்த, ஒளி ஊடுருவும் தன்மை உடையது என்ற செய்தியை பெறுகின்றோம்.
- திமிங்கலம், ஆக்டோபஸ் மற்றும் டால்ஃபின் போன்ற உயிரினங்களின் சிறப்பு பண்புகள் குறித்த அறிவியல் சிந்தனைகளை அறிய முடிகின்றது.
- காந்தத்தினை நூலில் கட்டித் தொங்கவிட்டால் அது எந்தப் பக்கம் பாரத்து நிற்கும் என்கிற கேள்விக்கு இரண்டு பக்கங்களில் தெற்கிலிருந்து வடக்கு நோக்கிதான் நிற்கும் என்பதனை அறிய முடிகின்றது.
- இரகசியச் செய்திகளை எழுதுவதற்கு எலுமிச்சை மற்றும் சோப்பு பயன்படுத்தப்பட்டதும், அதனைப் படிப்பதற்கு தண்ணீர், நெருப்பு போன்றவை பயன்படுத்தப்பட்டன என்பதனையும் தெளிய முடிகின்றது.

**முடிவுரை:**

உலகிலுள்ள எல்லா உயிரினங்கள் மற்றும் பொருட்களின் அடிப்படை செயல்களுக்கு மிக முக்கிய காரணமாக அமைவது அறிவியல் ஆகும். இன்றைய காலகட்டத்தில் அறிவியலின் வளர்ச்சிநிலை பன்மடங்கு வளர்ச்சியை எட்டியுள்ளது. அவ்வகையில் ஆசிரியர் தமது படைப்புகளின் வழி கடல்சார் உயிரினங்களின் வாழ்வியல் சார்ந்த பண்புகள் குறித்த அறிவியல் சிந்தனைகளையும். இவ்வுலகில் கல்வியே அழியாச் செல்வம், காந்தத்தின் பண்பு மற்றும் இரகசியச் செய்திகளை அனுப்புவதற்கும், அதனைப் படிப்பதற்கும் பயன்படுத்தப்பட்ட உத்திகள் குறித்த சிந்தனைகளையும் வெளிப்படுத்தி உள்ளதை இக்கட்டுரையின் வாயிலாகக் காண முடிகின்றது

**பார்வை நூல்கள்**


1. பத்துப்பாட்டு, அறிஞர். வே. சுப்பிரமணியன், ப.எ.446. மு.ப. ஜீன் 2010, மணிவாசகர் பதிப்பகம், 31 சிங்கர்தெரு, பாரிமுனை, சென்னை 600 018.
2. ஆமை காட்டிய அற்புத உலகம், யெஸ்.பாலபாரதி, மு.ப.ஜீன்.2016, பாரதி புத்தகலாயம், சென்னை - 600 018
3. புதையல் டைரி, யெஸ்.பாலபாரதி, மு.ப.ஜீன்.2018, ப, புக்ஸ் பார் சில்ட்ரன்


**REFERENCES:**


1. Pathuppattu, Arignar. V. Subramanian, P.E.446. M.P. June 2010, Manivasagar Publishing House, 31 Singer Street, Parimunai, Chennai 600 018.
2. The Amazing World Showed by the Turtle, Y.Balabharathi, M.P. June 2016, Bharathi Bookstore, Chennai – 600 018
3. Treasure Diary, Y.Balabharathi, M.P. June 2018, P, Books for Children

தமிழ்மணம் சர்வதேசத் தமிழ் ஆய்விதழ்
**Tamilmanam International Research Journal of Tamil Studies | ISSN(o): 3049-0723**
[Impact Factor: 8.47] Monthly, Peer-Reviewed, Refereed, Indexed Journal with IC Value : 86.87
**Volume - 1, Issue - 09, June - 2025 Article ID:** TM0109202502




DOIs: https://doi.org/10.63300/tm0109202502 --:-- Research Paper

# Everyday Objects Used in Relation to Food

**M. Shanmuganandam M.A.**
*Classical Tamil, First Year Central University of Tamil Nadu Thiruvarur – 610005*
*Orcid: https://orcid.org/0009-0007-3386-9254*

**Abstract:**

*As humans, we are utilizing many inventions to simplify our burdens in the growth of the cyclical passage of time and the speed of technological development. Like the saying "discard the old", the old culture is also being forgotten and left behind. The Tamil community can be said to be a pioneer of the world of knowledge. The objects used by such a distinguished ethnic group in the early days are now forgotten and neglected by everyone in the course of time. Many scientific creations and cultural elements are hidden in all such used objects. By discovering such used objects, it is possible to see our lost cultural elements. Based on that, this study focuses primarily on commonly used objects related to food such as the arivaalmanai (sickle-shaped vegetable cutter), pot, and grinding stone with pestle (ammikkuzhavi), to understand their usage and, through them, the culture.*

**Keywords:** Everyday object, arivaalmanai, pot, ammikkuzhavi, usage, cultural use, literary uses.

# உணவு சார்ந்து பயன்படுத்திய புழங்குபொருள்கள்

**மு. சண்முகானந்தம்**
*முதுகலைச் செவ்வியல் தமிழ் முதுலாமாண்டு, தமிழ்நாடு மத்தியப் பல்கலைக்கழகம், திருவாரூர் – 610005*

**ஆய்வுச்சுருக்கம்**

*மனிதர்களாகிய நாம் காலச்சுழலின் வளர்ச்சியிலும் தொழில் நுட்ப வளர்ச்சியின் வேகத்திலும் நமது சுமைகளை எளிமையாக்க பல கண்டுபிடிப்புகளை கையாண்டு வருகின்றோம். பழையன கழிதல் என்பதனை போல பழைய பண்பாட்டினையும் மறந்து சென்றுக்கொண்டிருக்கிறது. அறிவு உலகிற்கு முன்னோடி விளங்கக்கூடியது தமிழ்ச்சமூகம் எனலாம். அத்தகு சிறப்புமிக்க இனக்குழு ஆரம்ப காலங்களில் பயன்படுத்திய பொருள்கள் கால ஓட்டத்தில் அனைவராலும் மறக்கப்பட்டும் ஒதுக்கபட்டும் உள்ள நிலை நிலவுகிறது. அவ்வாறு பயன்படுத்திய பொருள்கள் அனைத்திலும் பல அறிவியல் ஆக்கங்களும், பண்பாட்டு கூறுகளும் மறைந்துகிடக்கின்றன அவ்வாறு பயன்படுத்திய பொருள்களை கண்டெடுப்பதன் வாயிலாக மறைந்த நமது பண்பாட்டு கூறுகளை காண இயலும். அதனடிப்படையில் இந்த ஆய்வானது உணவு சார்ந்து பயன்படுத்திய புழங்கு பொருள்களான அரிவாள்மணை, பானை, அம்மிக்குழவி ஆகியவற்றை முதன்மையாகக் கொண்டு அதன் பயன்பாட்டினையும், அதன் வாயிலாக பண்பாட்டினையும் அறிய உதவும் வகையில் அமைகிறது.*

**குறிப்புச்சொற்கள்** : ***புழங்குபொருள், அரிவாள்மணை, பானை, அம்மிக்குழவி, பயன்பாடு, பண்பாட்டு பயன், இலக்கியப் பயன்பாடுகள்..***

**முன்னுரை**

சமகால நவீனமயமாக்கல் உலகில், அன்றாடத் தேவைகளுக்காகப் பல்வேறு கருவிகளை நாம் பயன்படுத்துகிறோம். இருப்பினும், நமது பண்பாட்டை வெளிப்படுத்தும் மரபு சார்ந்த புழங்கு பொருட்களை நாம் மெல்ல மறந்துவிட்டோம். அந்த வகையில், இல்லங்களில் பயன்படுத்தப்பட்ட சில பொருட்களின் பயன்பாடு, பண்பாடு, இலக்கிய பயன்பாடுகள், மற்றும் அப்பொருட்களை எவ்வாறு பயன்படுத்தினார்கள் என்பதைப் பண்பாட்டு நோக்கில் விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கம்.

**பண்பாடு**

பண்பாடு என்பது ஒரு படிநிலை வளர்ச்சி. இது மாற்றங்களை உள்வாங்கி தொடர்ந்து வளர்ந்து கொண்டே இருக்கும் ஒரு இயங்குமுறை. தொன்றுதொட்டு இன்று வரை மனிதனின் அகம் மற்றும் புறத்தில் எண்ணற்ற மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. இந்த மாற்றங்கள் பண்பாட்டிலும் பிரதிபலித்துள்ளன. மனிதன் ஒரு சமூகப் பண்பாட்டு உறுப்பினர். எனவே, அவன் பயன்படுத்தும் பொருட்கள் மற்றும் அவை பற்றிய கருத்துக்கள் ஆகியவற்றின் கூட்டுச்சேர்க்கையே பண்பாடு ஆகும். "பண்பாடு" என்ற சொல் "பண்படுத்துதல்" என்ற சொல்லிலிருந்து உருவானது எனலாம். ஏனெனில், பண்பாடு என்ற சொல் மனிதனோடு மட்டும் தொடர்புடையது. இது பிற உயிரினங்களிடமிருந்து மனிதனை வேறுபடுத்திக் காட்டுகிறது. பண்பாடு என்னும் கருத்தாக்கம் மக்களின் அறிவு சார்ந்த நிலையில் ஏற்படும் எண்ணற்ற கருத்து வடிவங்களின் முழுமை என்று பக்தவத்சல பாரதி (2019; 160) குறிப்பிடுகிறார்.

மானுடவியல் நோக்கில் பண்பாட்டை அணுகும்போது, மானுடவியலாளர்கள் அதை இரண்டு வகையாகப் பிரிக்கிறார்கள்: 1. பொருள்சார் பண்பாடு, 2. பொருள்சாரா பண்பாடு. புழங்கு பொருட்கள் மற்றும் பண்பாடு அனைத்தும் பொருள்சார் பண்பாட்டில் அடங்கும். அதனடிப்படையில், உணவு சார்ந்து பயன்படுத்தப்பட்ட பொருள்சார் பண்பாட்டினை பின்வருமாறு காணலாம்.

**உணவு சார்ந்த புழங்கு பொருட்கள்**

உணவு என்பது மனித வாழ்வின் அடிப்படைத் தேவை. உணவு சமைப்பதற்கும், பரிமாறுவதற்கும், பாதுகாப்பதற்கும் நம் முன்னோர்கள் பல்வேறு வகையான பொருட்களைப் பயன்படுத்தினர். ஒவ்வொரு பொருளுக்கும் ஒவ்வொரு தனித்துவமான பண்பாடு மற்றும் பயன்பாடு இருந்தது. அக்காலத்தில் பயன்படுத்தப்பட்ட சில உணவு சார்ந்த புழங்கு பொருட்கள் மற்றும் அவற்றின் பண்பாட்டுப் பயன்பாடுகள் பின்வருமாறு:

- **மண்பாண்டங்கள்:** மண்பாண்டங்கள் பண்டைய காலங்களில் சமையலுக்குப் பயன்படுத்தப்பட்ட முக்கியமான பொருட்களில் ஒன்றாகும். களிமண்ணால்

செய்யப்பட்ட பானைகள், சட்டிகள், மற்றும் பிற பாத்திரங்கள் உணவு சமைப்பதற்கும், சேமிப்பதற்கும் பயன்படுத்தப்பட்டன. மண்பாண்டங்களில் சமைக்கும்போது உணவுக்கு ஒரு தனித்துவமான சுவை கிடைத்தது. மேலும், மண்பாண்டங்கள் சுற்றுச்சூழலுக்கு உகந்தவை.

- **மரத்தாலான பொருட்கள்:** மரத்தாலான உரல், உலக்கை, ஆட்டுக்கல் ஆகியவை அக்காலத்தில் உணவு தயாரிப்பில் முக்கியப் பங்கு வகித்தன. தானியங்களை இடிப்பதற்கும், மாவு அரைப்பதற்கும் இவை பயன்படுத்தப்பட்டன. மரத்தாலான பொருட்கள் உறுதியானவை மற்றும் நீண்ட காலம் உழைக்கக்கூடியவை.
- **கல் உரல் மற்றும் அம்மி:** இவை சட்னி, மசாலா போன்றவற்றை அரைக்கப் பயன்படுத்தப்பட்டன. அம்மிக்கல்லில் அரைக்கும்போது உணவுக்கு ஒரு தனித்துவமான சுவை கிடைத்தது. மேலும், இது உடற்பயிற்சிக்கும் உதவியது.
- **வெண்கலப் பாத்திரங்கள்:** வெண்கலப் பாத்திரங்கள் உணவு சமைப்பதற்கும், பரிமாறுவதற்கும் பயன்படுத்தப்பட்டன. வெண்கலம் ஒரு நல்ல வெப்ப கடத்தி என்பதால், உணவைச் சீக்கிரமாக சமைக்க முடிந்தது. மேலும், வெண்கலப் பாத்திரங்கள் ஆரோக்கியமானவை.
- **பனையோலைப் பெட்டிகள்:** உணவுப் பொருட்களைப் பாதுகாப்பாக சேமித்து வைக்கப் பனையோலைப் பெட்டிகள் பயன்படுத்தப்பட்டன.

**இலக்கியத்தில் புழங்கு பொருட்கள்**

சங்க இலக்கியம் மற்றும் பக்தி இலக்கியம் போன்ற பல்வேறு இலக்கியங்களில் புழங்கு பொருட்கள் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. உதாரணமாக, சிலப்பதிகாரத்தில் மாதவி பயன்படுத்திய பாத்திரங்கள் மற்றும் உணவுப் பொருட்கள் பற்றிய விவரங்கள் உள்ளன. திருக்குறளில் கூட உணவு மற்றும் விவசாயம் தொடர்பான பல கருத்துக்கள் கூறப்பட்டுள்ளன.

**நவீன காலத்தில் மரபு சார்ந்த புழங்கு பொருட்கள்**

நவீன காலத்தில் மரபு சார்ந்த புழங்கு பொருட்களின் பயன்பாடு குறைந்துவிட்டாலும், அவற்றின் முக்கியத்துவம் இன்னும் குறையவில்லை. பலர் தங்கள் வீடுகளில் மரபு சார்ந்த பொருட்களைப் பயன்படுத்தி வருகின்றனர். மேலும், மரபு சார்ந்த உணவு வகைகளைச் சமைப்பதற்கும், பரிமாறுவதற்கும் பலர் ஆர்வம் காட்டுகின்றனர். நவீன காலத்தில், மண்பாண்டங்கள் மற்றும் மரத்தாலான பொருட்கள் அலங்காரப் பொருட்களாகவும்

பயன்படுத்தப்படுகின்றன. மேலும், மரபு சார்ந்த பொருட்களைப் பயன்படுத்திச் செய்யப்படும் கைவினைப் பொருட்கள் அதிக வரவேற்பைப் பெற்றுள்ளன.

மரபு சார்ந்த புழங்கு பொருட்கள் நமது பண்பாட்டின் ஒரு முக்கிய அங்கமாகும். அவற்றின் பயன்பாடு, பண்பாடு, மற்றும் இலக்கியப் பயன்பாடுகளை நாம் மறந்துவிடக் கூடாது. மரபு சார்ந்த பொருட்களைப் பயன்படுத்துவதன் மூலம் நமது பண்பாட்டைப் பாதுகாக்க முடியும். தொடர்ந்து நவீனமயமாக்கல் நோக்கி சென்றாலும் அவ்வப்போது மரபு சார்ந்த விஷயங்களையும் கையாண்டு நம் முன்னோர்களின் வாழ்க்கை முறையை பின்பற்றுவது நன்று.

பண்பாட்டினை மானிடவியல் முறையில் காணும்பொழுது மானிடவியலாளர்கள் இரண்டு வகையாக பகுப்பார்கள் 1. பொருள்சார் பண்பாடு, 2. பொருள்சாரா பண்பாடு அவற்றில் புழங்கு பொருள்கள் பண்பாடு அனைத்தும் பொருள்சார் பண்பாட்டில் வரக்கூடியது. அதனடிப்படையில் உணவு சார்ந்து பயன்படுத்திய பொருள் பண்பாட்டினை பின்வருமாறு காண்போம்.

**புழங்கு பொருள்**

புழங்கு பொருள் என்ற சொல் வினைத்தொகையாகும். அதாவது புழங்கு என்ற சொல் முக்காலத்தையும் பொருத்தி வரும். பழக்கவழக்கத்தில் உள்ள பொருட்களைக் குறிக்கும் கூட்டுச் சொல்லாக இந்த புழங்கு பொருள் பயன்படுத்தப்படுகின்றது. அந்த அந்த காலங்களில் பயன்பாட்டில் இருந்த பொருள்களையும், புழக்கத்தில் இருந்த பொருள்களை புழங்கு பொருள்கள் என்று கூறலாம். இவ்வாறு, ஒரு சமூகத்தின் கலாச்சாரம், தொழில்நுட்பம் மற்றும் அன்றாட வாழ்க்கை முறையை பிரதிபலிக்கும் சான்றுகளாக புழங்கு பொருட்கள் விளங்குகின்றன. புழங்கு பொருள் குறித்து ஆய்வு செய்த ரெஜித்குமார் (2009;2) இதனை மூன்று வகையாக பாகுபடுத்தி கூறியுள்ளார். அவை: 1. உணவு சார்ந்த புழங்கு பொருள், 2. வீட்டு உபயோக புழங்கு பொருள்கள், 3. தொழிற்கள புழங்குபொருட்கள் என்பனவாகும். இந்த மூன்று வகைப்பாடுகளும், மனிதனின் அடிப்படை தேவைகளை பூர்த்தி செய்வதிலும், வாழ்க்கையை எளிதாக்குவதிலும் புழங்கு பொருட்களின் முக்கியத்துவத்தை உணர்த்துகின்றன. மேலும், புழங்கு பொருட்கள் வெறும் பயன்பாட்டுப் பொருட்கள் மட்டுமல்ல, அவை ஒரு சமூகத்தின் கலை, கைவினை மற்றும் தொழில்நுட்ப திறன்களை வெளிப்படுத்தும் சின்னங்களாகவும் கருதப்படுகின்றன.

புழங்கு பொருட்களின் பயன்பாடு மற்றும் வடிவமைப்பு காலப்போக்கில் பல்வேறு மாற்றங்களை சந்தித்து வந்துள்ளன. ஒரு காலத்தில் மரத்தாலும், கல்லாலும் செய்யப்பட்ட பொருட்கள், பின்னர் உலோகங்களாலும், நவீன தொழில்நுட்பத்தாலும்

உருவாக்கப்படுகின்றன. இந்த மாற்றங்கள், சமூகத்தின் வளர்ச்சி மற்றும் தேவைகளுக்கு ஏற்ப புழங்கு பொருட்கள் தங்களை தகவமைத்துக் கொள்வதை காட்டுகின்றன. உதாரணமாக, மண்பாண்டங்கள் ஒரு காலத்தில் உணவு சமைக்கவும், சேமிக்கவும் பயன்படுத்தப்பட்டன. ஆனால், இன்று அவை அலங்காரப் பொருட்களாகவும், கலைப் படைப்புகளாகவும் மாறிவிட்டன.

புழங்கு பொருட்களின் ஆய்வானது, ஒரு சமூகத்தின் வரலாறு, கலாச்சாரம் மற்றும் வாழ்க்கை முறையை புரிந்து கொள்ள உதவுகிறது. தொல்லியல் ஆய்வுகள் மூலம் கண்டெடுக்கப்படும் புழங்கு பொருட்கள், பண்டைய நாகரிகங்களின் தொழில்நுட்ப அறிவு, கலைத்திறன் மற்றும் வணிக தொடர்புகள் பற்றிய தகவல்களை வழங்குகின்றன. மேலும், புழங்கு பொருட்கள், ஒரு சமூகத்தின் சமூக அமைப்பு, பொருளாதார நிலை மற்றும் மத நம்பிக்கைகள் பற்றிய நுண்ணறிவுகளையும் நமக்கு வழங்குகின்றன. உதாரணமாக, ஒரு குறிப்பிட்ட சமூகத்தில் பயன்படுத்தப்பட்ட ஆயுதங்கள், அவர்களின் போர் திறன் மற்றும் பாதுகாப்பு முறைகளை வெளிப்படுத்துகின்றன. அதேபோல, அவர்கள் பயன்படுத்திய ஆபரணங்கள், அவர்களின் சமூக நிலை மற்றும் அழகியல் ரசனைகளை பிரதிபலிக்கின்றன.

**அரிவாள்மணை**

அரிவாள்மணை பழங்காலத் தமிழர்கள் தொட்டு இன்று வரை உணவு பயன்பாட்டில் பயன்பட்டுக்கொண்டிருக்கிறது எனலாம். வீட்டில் சமையலுக்கு தேவையான பொருள்களை நறுக்குவதற்கு அரிவாள்மணை இன்றியமையாத கருவி. "காய்கனிகளை அரியும் தன்மையுடையதாலும் அதன் கீழ்பகுதி நீட்டித்து வாள்போல் அமைந்து பலகை மணை என்பதற்கு அடிப்பலகை என்ற பொருள் அதன் தோற்றம் தன்மை இவைகளில் கூட்டால் பெற்ற காரணப்பெயர் அரிவாள்மணை எனலாம். இதன் அமைப்பு நுனியில் இரும்பு கூர்மையாக்கப்பட்டு இருக்கும் அதன் தொடர்ச்சியாக மரக்கட்டை நீண்டு இருக்கும். நாம் அதில் அரியும் பொழுது பலகை மீது அமர்ந்து மரக்கட்டையை காலால் பிடித்து அரியச் செய்யலாம். இது ஒரு எளிய கருவியாக இருந்தாலும், அதன் வடிவமைப்பு மற்றும் பயன்பாடு பல நூற்றாண்டுகளாக மாறாமல் இருப்பது குறிப்பிடத்தக்கது.

அரிவாள்மணை, சமையலறையில் ஒரு நிலையான இடத்தை பிடித்துள்ளது. நின்றுகொண்டே சமைக்கும் பெண்களுக்கு, தரையில் அமர்ந்து காய்கறிகளை நறுக்குவது சற்று சிரமமானதாக இருந்தாலும், அரிவாள்மணையின் பயன்பாடு ஒருவித ஓய்வை அளிக்கிறது. மேலும், இது சமையலறையில் ஒரு ஒழுங்கை நிலைநாட்ட உதவுகிறது. அரிவாள்மணையில் காய்கறிகளை நறுக்கும்போது, காய்கறிகள் சிதறாமல் ஒரே இடத்தில் விழுகின்றன.

வீடுகளில் அரிவாள்மணை கீழே வைக்கும் வழக்கம் பெருமளவில் காணப்படுவதில்லை காரணம் அவை கூர்மையானது காயம் ஏற்பட்டு விடும் என்ற தன்மையானாலும் அதனை வீட்டில் இலட்சுமி என்று வணங்குதல் உண்டு. அதனால் அவை கூரையின் மேலே வைக்கபடுகிறதை காணலாம். அரிவாள்மணை கூர்மையான ஆயுதமாக இருப்பதால், குழந்தைகளுக்கு எட்டாத உயரத்தில் வைக்கப்படுகிறது. மேலும், இது லட்சுமியின் அம்சமாக கருதப்படுவதால், அதை உயர்வாக கருதி கூரையின் மீது வைக்கும் பழக்கம் சில வீடுகளில் உள்ளது.

ஒவ்வொரு வட்டாரங்களுக்கும் இக்கருவி பெயர் மாற்றம் பெருவதை காணலாம் அரிவாள்மணை மருவி அருவாமணை என்ற கூறப்படுகிறது. மணக்காத்தி என்று அருப்புக்கோட்டை பகுதியில் அழைக்கப்படுகிறது. அதிகளவில் அரிவாள்மணை என்ற பெயரில் அமைகின்றது. வட்டார வேறுபாடுகளுக்கு ஏற்ப, அரிவாள்மணையின் வடிவத்திலும், பெயரிலும் சில மாற்றங்கள் காணப்படுகின்றன. ஆனால், அதன் அடிப்படை பயன்பாடு மாறாமல் உள்ளது.

தற்காலங்களில் இரும்பு போன்ற உலோகங்களால் தயாரித்து பயன்பாட்டில் இருக்கின்றது என்பதை அறியமுடிகிறது. நவீன அரிவாள்மணைகள், துருப்பிடிக்காத எஃகு போன்ற உலோகங்களால் தயாரிக்கப்படுகின்றன. இவை, மரத்தினால் செய்யப்பட்ட அரிவாள்மணைகளை விட அதிக நீடித்து உழைக்கின்றன. மேலும், உலோக அரிவாள்மணைகளை சுத்தம் செய்வதும் எளிது.

ஆயுதங்களை வழிபடும் விதமாக கொண்டாடப்படும் ஆயுதபூசையில் இக்கருவியை வைத்து வழிபடுதலுண்டு. இதன் பயன் பொதுவாக காய்கனிகளை அரியும் தன்மையுடையதாக உள்ளது. ஆயுதபூஜையின் போது, அரிவாள்மணை உள்ளிட்ட அனைத்து ஆயுதங்களையும் சுத்தம் செய்து, சந்தனம், குங்குமம் இட்டு வழிபடுவது வழக்கம். இது, ஆயுதங்களுக்கு நன்றி செலுத்தும் விதமாகவும், அவற்றை பாதுகாக்கும் நோக்கத்துடனும் செய்யப்படுகிறது. இதன் மூலம், புழங்கு பொருள்கள் வெறும் பயன்பாட்டுப் பொருட்கள் மட்டுமல்ல, அவை கலாச்சார மற்றும் மத நம்பிக்கைகளுடன் பின்னிப்பிணைந்துள்ளன என்பதை அறியலாம்.

அரிவாள்மணை ஒரு எளிய கருவியாக இருந்தாலும், அது தமிழர்களின் சமையல் கலாச்சாரத்தில் ஒரு முக்கிய இடத்தை பிடித்துள்ளது. அது, உணவு தயாரிக்கும் முறையை எளிதாக்குவதோடு மட்டுமல்லாமல், தலைமுறை தலைமுறையாக நம் கலாச்சாரத்தை பிரதிபலிக்கும் ஒரு சின்னமாகவும் விளங்குகிறது. மேலும், அரிவாள்மணையின் பயன்பாடு, நம் முன்னோர்களின் அறிவையும், தொழில்நுட்ப திறனையும் எடுத்துக்காட்டுகிறது.

**பானை**

உணவு தயாரிக்கும் சமையற்கலைக்கு கருவிகள் எவ்வளவு முக்கியமோ, அந்த வகையில், தொடக்கக் காலங்களில் பயன்பாட்டில் இருந்து வந்த மிக முக்கியமான சமையல் கலன் பானை என்றால் அது மிகையாகாது. களிமண்ணோடு நீரைச் சேர்த்து, அதனைச் சக்கரத்தில் இட்டுச் சுற்றிவிடுவதன் வாயிலாக களிமண் குழையும் தன்மைக்கு ஏற்ப, நமக்கு வேண்டிய வடிவத்தை அதில் செலுத்திப் பெற முடியும். பின்பு, அதனைச் சூளையில் இட்டுச் சுடேற்றுவதன் வாயிலாக இறுகும் தன்மை பெற்று அது பயன்பாட்டிற்கு வருகிறது. பொதுவாக, பானைகள் கீழே வட்டமாகவும், மேல் பகுதி வளையமாகவும், பிடிப்பதற்கு ஏதுவாகவும் அமைக்கப்பட்டிருக்கும். ஒரு பானை செய்வதற்கான களிமண் இடத்திற்கு இடம் வேறுபடுவதால், பானைகளும் அவற்றின் தன்மையிலும் இடத்திற்கு ஏற்றார்போல் மாற்றம் பெறுகின்றன. சில நேரங்களில், களிமண்ணோடு பிற தேவையான கனிமங்களையும் சேர்ப்பதுண்டு. மனிதன் வரலாற்றில், புதிய கற்காலத்தில் பானைகளைப் பயன்பாட்டில் வைத்திருந்தான் என்ற செய்தி, பல அகழ்வாராய்ச்சிகளின் வாயிலாக நமக்கு தெரிய வருகிறது.

இல்லங்களில் சமைப்பதற்கும், நீரை சேமிப்பதற்கும், தானியங்களை சேகரித்து வைப்பதற்கும், ஏன் பண்டிகைகளின் போது கூட பானையின் பயன்பாடு இன்றியமையாததாக இருந்தது. உலோகங்களால் செய்யப்பட்ட பாத்திரங்களுக்கும், பானைக்கும் உள்ள வேறுபாடுகள் என்னவெனில், பானையில் செய்யப்பட்ட உணவு பல நன்மைகளைக் கொண்டுள்ளது. அதிலும் குறிப்பாக பானையில் சமைக்கும்போது, உணவில் உள்ள ஊட்டச்சத்துக்கள் முழுமையாக நமக்கு கிடைக்கிறது. ஏனெனில், மண்பானை உணவை மெதுவாகவும், ஒரே சீராகவும் சமைக்கிறது. மேலும், மண்பானையில் சமைக்கும்போது அதிக எண்ணெய் தேவைப்படாது. இதனால் உடல் ஆரோக்கியம் மேம்படும்.

'கலஞ்செய்கோவே கலஞ்செய்கோவே' – புறம் 228 என்ற சங்ககால அடிகளின் வாயிலாக, அக்காலங்களில் பானை பயன்பாட்டில் இருந்தது என்பதை நம்மால் அறிய முடிகிறது. பானை தமிழ்நாட்டில் மட்டுமல்லாது, உலகின் பல நாடுகளிலும் வெவ்வேறு வடிவங்களில் பயன்படுத்தப்பட்டு வந்துள்ளது.

பானைக்கு வழங்கப்படும் வேறு பெயர்கள்:

- கலன்
- தாழி
- சட்டி

- சாடி
- கொள்கலன்
- கடம்
- மட்பாண்டம்

எனப் பல்வேறு பெயர்களில், அவை பயன்படுத்தப்படும் இடத்தைப் பொறுத்து பானைகள் அழைக்கப்படுகின்றன. இதன் வாயிலாக, பானையின் பயன்பாடு தமிழ் மரபில் உணவு சார்ந்த பயன்பாட்டிற்கு பயன்படுத்தப்பட்ட ஒரு முக்கியமான பொருள் என்பதை நாம் தெரிந்து கொள்ளலாம்.

உணவிற்கு மட்டுமன்றி, அனைத்து சடங்குகளிலும் பானையானது முக்கிய இடம் வகிக்கும் ஒரு கருவியாக இருந்து வந்துள்ளது. ஆகவே, பானையை ஒரு பண்பாட்டு கருவி என்று அழைப்பதும் தவறில்லை. காரணம், திருமணங்களில் வண்ணம் தீட்டப்பட்ட அரசாணி பானையின் பயன்பாடும், ஈமச்சடங்குகளில் பயன்படுத்தப்படும் முக்கியப் பொருளாகவும் பானைகள் உள்ளன. எனவே, பானை என்பது நமது பண்பாட்டில் பயன்படுத்தப்பட்ட ஒரு புழங்கு பொருள். மேலும், கிராமங்களில் இன்றளவும் பொங்கல் பண்டிகையின் போது புதுப்பானையில் பொங்கல் வைக்கும் பழக்கம் இருந்து வருகிறது.

காலப்போக்கில் பானைகளின் பயன்பாடு சமையலில் குறைந்து விட்டாலும், மரபினை காத்தல் என்ற நோக்கில் பழமையை நோக்கிச் செல்லும் வகையில், சிலர் மண்பாண்டப் பொருள்களை இன்றும் பயன்படுத்தும் ஒரு நல்ல பழக்கம் இருந்து கொண்டுதான் இருக்கிறது. அதுமட்டுமின்றி, தற்போது மண்பானை சமையல் என்பது ஒரு டிரெண்டாக மாறி வருகிறது. நகரங்களில் கூட மண்பானை சமையல் குறித்த விழிப்புணர்வு அதிகரித்து வருகிறது. நவீன சமையல் உபகரணங்கள் வந்தாலும், மண்பானை சமையலின் தனித்துவமும், அதன் ஆரோக்கிய நன்மைகளும் யாராலும் மறுக்க முடியாது.

எனவே, பானைகளை வெறும் சமையல் பாத்திரமாக மட்டும் பார்க்காமல், நமது பண்பாட்டின் ஒரு அங்கமாக நாம் கருதி மதிக்க வேண்டும்.

**அம்மிக்குழவி: தமிழர் மரபின் அடையாளச் சின்னம்**

தமிழர் மரபில் பொருள்சார் பண்பாட்டில், உணவு சமைப்பதற்கும், மருந்து தயாரிப்பதற்கும் பயன்படுத்தப்பட்ட முக்கியமான புழங்கு பொருளாக அம்மிக்கல் விளங்குகிறது. கருங்கல்லினால் செய்யப்பட்ட இந்த அம்மிக்கல், சமையலுக்குத் தேவையான பொருட்களை அரைப்பதற்குப் பெரிதும் உதவியது. அந்தக் காலத்தில் அனைத்து வீடுகளிலும் அம்மிக்கல் தவறாமல் இடம் பெற்றிருந்தது. இன்றளவும் பல

கிராமங்களில், பழைய வீடுகளின் முன்புறமோ அல்லது பின்புறமோ அம்மிக்கல்லைப் பார்க்கலாம். தேவைப்படும்போது அதனைப் பயன்படுத்துகின்றனர். அம்மிக்கல்லுக்கும், அதில் அரைப்பதற்கு உதவும் குழவிக்கல்லுக்கும் இடையேயான உராய்வு மிக முக்கியமானது. அம்மிக்கல் மழுமழுப்பாக இருந்தால் பொருட்கள் சரியாக அரைபடாது. இதற்காக அவ்வப்போது அம்மியையும், குழவிக்கல்லையும் பொளிவார்கள்.

மருந்து மற்றும் சமையலுக்குத் தேவையான பொருட்களை அரைப்பதற்கு, ஒரு தட்டையான கல்லை கீழே வைத்து, அதன் மீது அரைக்க வேண்டிய பொருளை வைத்து, கருங்கல்லால் செய்யப்பட்ட சிறிய உருளை வடிவக் கல்லைக்கொண்டு உருட்டுவதன் மூலம் பொருட்கள் அரைக்கப்படுகின்றன. இது தொல்பழங்காலத்திலிருந்து பயன்பாட்டில் இருந்து வரக்கூடிய ஒரு கற்கருவியாகும். அம்மிக்கல்லைப் பயன்படுத்துவதன் மூலம் கைகளுக்கு நல்ல பலம் கிடைக்கிறது. முற்காலங்களில் பெண்கள் அதிக வேலைகளைச் செய்ததால், உடல் நலனை கவனிக்க அவர்களுக்கு நேரம் கிடைப்பதில்லை. ஆதலால் அம்மி போன்ற கருவிகளை சமையல் செய்யும் போது பயன்படுத்தினால், அது அவர்களுக்கு நன்மை பயக்கும் உடற்பயிற்சியாக அமையும்.

அம்மிக்குழவி ஒரு பண்பாட்டுக் கருவி என்பதில் எவ்வித ஐயமும் இல்லை. ஏனெனில், பிறப்பு சடங்குகளில் குழந்தையை முதன்முதலில் தொட்டிலில் இடுவதற்கு முன்பு, அம்மிக்குழவியை தொட்டிலில் இட்டு மூன்று முறை ஆட்டிவிட்ட பின்னரே குழந்தையை தொட்டிலில் இடுவார்கள். திருமணத்தில் அம்மிக்குழவி முக்கிய பங்கு வகிக்கும் கருவியாக கருதப்படுகிறது. திருமண வீடுகளில் அம்மி மிதித்தல் என்ற சடங்கே இதற்கு சான்று. எனவே, அம்மிக்குழவி பண்பாடு சார்ந்த ஒரு புழங்கு பொருள் என்பதையும், உணவிற்கும் இது பயன்படுத்தப்படுகிறது என்பதையும் நாம் அறியலாம்.

"இம்மைக்கு மேழேழ் பிறவிக்கும் பற்றாவாள் நம்மையு டையவன் நாராய ணன்நம்பி செம்மை யுடைய திருக்கையால் தாள்பற்றி அம்மி மிதிக்கக் கனாக்கண்டேன் தோழீநான்"

- நாச்சியார் திருமொழி, நாலாயிர திவ்வியப் பிரபந்தம்.

இந்த பாடல் வரிகள், திருமணச் சடங்கில் அம்மி மிதித்தலின் முக்கியத்துவத்தை உணர்த்துகின்றன. திருமணமாகும் பெண், தனது கணவனுடன் சேர்ந்து அம்மிக்கல்லை மிதித்து, தனது பந்தம் ஏழு ஜென்மங்களுக்கும் தொடரும் என்பதை உறுதி செய்கிறாள்.

அம்மிக்குழவியின் பயன்பாடுகள்:

சமையலில்:

- அம்மிக்கல்லில் அரைத்த மசாலாக்கள் உணவிற்கு தனி சுவையையும், மணத்தையும் தருகின்றன.
- துவையல் வகைகள், சட்னி போன்றவற்றை அம்மிக்கல்லில் அரைத்து சாப்பிடுவது மிகவும் சுவையாக இருக்கும்.
- இட்லி, தோசை மாவு தயாரிக்க உளுந்தை அம்மிக்கல்லில் அரைத்தால் மாவு மிருதுவாகவும், சுவையாகவும் இருக்கும்.

**மருத்துவத்தில்:**

- சித்த மற்றும் ஆயுர்வேத மருத்துவத்தில் தேவையான மூலிகைகளை அரைத்து மருந்துகள் தயாரிக்க அம்மிக்கல் பயன்படுத்தப்படுகிறது.
- சளி, இருமல் போன்ற நோய்களுக்கு மருந்து தயாரிக்க தேவையான பொருட்களை அம்மிக்கல்லில் அரைத்து பயன்படுத்துகின்றனர்.
- சரும பிரச்சனைகளுக்கு தேவையான மருந்துகளை தயாரிக்கவும் அம்மிக்கல் பயன்படுகிறது.

கிராமப்புறங்களில் அம்மிக்குழவியின் பயன்பாடு: கிராமப்புறங்களில் இன்றளவும் அம்மிக்குழவியின் பயன்பாடு இருந்து வருகிறது. நவீன இயந்திரங்கள் வந்த பிறகும், அம்மிக்கல்லில் அரைத்து சமைத்த உணவின் சுவைக்கு ஈடாகாது என்று பலர் நம்புகிறார்கள். மேலும், வயதானவர்கள் மற்றும் உடல் நல குறைபாடு உள்ளவர்கள் அம்மிக்கல்லை பயன்படுத்துவதால் உடற்பயிற்சி செய்த பலன் கிடைக்கும் என்று கருதுகின்றனர்.

**அம்மிக்குழவியை பாதுகாப்பதன் அவசியம்:**

அம்மிக்குழவி நமது பாரம்பரியத்தின் ஒரு அங்கமாகும். எனவே, அதனைப் பாதுகாப்பது நமது கடமையாகும். அம்மிக்குழவியின் பயன்பாட்டை பற்றியும், அதன் நன்மைகளை பற்றியும் இன்றைய தலைமுறையினருக்கு எடுத்துரைக்க வேண்டும். நவீன சமையலறைகளில் அம்மிக்கல்லுக்கு ஒரு இடத்தை ஒதுக்கி, அதன் பயன்பாட்டை ஊக்குவிக்க வேண்டும்.

**முடிவுரை:**

ஒரு மரபினை அறிவதற்கு ஏடுகள் மட்டும் வாயிலாக பெருமிதம் அடைவதில்லை. ஒரு பண்பாட்டினை அறிவதற்கு அவற்றின் பயன்பாட்டினை அறிவதன் வழியாகவே அந்தப் பண்பாட்டினை முழுமையாக அறிய முடியும். பயன்பாட்டில் இருந்த பொருட்களை

ஆராய்வதே நோக்கமாக கொண்டு, பண்பாடு மற்றும் மரபை அறியும் வகையில் பண்பாட்டுப் பொருள்களாக இருந்தவற்றை கண்டெடுத்து நம் முன்னோர் மரபினை காத்து, அறிந்துகொள்ளும் வகையில் இந்த ஆய்வு அமைந்துள்ளது. அம்மிக்குழவியானது வெறும் கல் மட்டுமல்ல, அது நம் பண்பாட்டின் அடையாளம். நம் முன்னோர்களின் உழைப்பையும், அவர்களின் அறிவையும் நமக்கு உணர்த்தும் ஒரு சின்னம். அதனைப் பாதுகாத்து அடுத்த தலைமுறைக்கு எடுத்துச் செல்வது நமது கடமை.

### பார்வை நூல்கள்


1. Vol.3Iss. 4 Year 2021 R.Nallamuthu/ 2021 DOI: 10.34256/irjt2142
2. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், அடையாளம் பதிப்பகம், 2019.
3. முனைவர் த.ரெஜித்குமார், ஆய்வு, புழங்குபொரு பண்பாட்டில் கலன்கள் (சங்க பாடல்களை முன் வைத்து).
4. ஆய்வு – முனைவர் ரெ. நல்லமுத்து – சங்க அக இலக்கியத்தில் இல்லம் சார்ந்த புழங்கு பொருள்கள்.


**References**


1. R, N. (2021). A Research on Frequently used Products from Sangam Literature. *International Research Journal of Tamil*, *3*(4), 6-15. https://doi.org/10.34256/irjt2142
2. Bakthavatsala Bharathi, Panbaatu Manidaviyal (Cultural Anthropology), Adaiyaalam Pathippagam, 2019.
3. Dr. T. Rejithkumar, Aayvup Pulanguporu Panbaattil Kalangal (Sanga Paadalgalai Mun Vaithu) (Research - Vessels in Material Culture (Based on Sangam Poems)).
4. Research – Dr. Re. Nallamuthu – Illam Saarntha Puzhangu Porulgal in Sangam Aha Ilakkiyam (Household Related Material Objects in Sangam Akam Literature).

தமிழ்மணம் சர்வதேசத் தமிழ் ஆய்விதழ்
**Tamilmanam International Research Journal of Tamil Studies | ISSN(o): 3049-0723**
[Impact Factor: 9.47] Monthly, Peer-Reviewed, Refereed, Indexed Journal with IC Value : 86.87
**Volume - 1, Issue - 09, June - 2025**



DOIs: https://doi.org/10.63300/tmxxxxxxxxxx --:-- Research Paper

# Lullabies found among Muslim people A content-based study

**M.A. Zimra[1], Mrs. MIF.Safna[2],**
[1 & 2] Lecturer in Tamil, Department of Languages, Faculty of Atrs and Culture, SEUSL,
South Eastern University of Sri Lanka.

**Abstract:** *Tamil folk songs are a significant aspect of a nation's character, faith, and lifestyle. Tamil folk songs have a unique identity. These songs express various aspects such as the love for mother, beauty of a child, future dreams, social issues, and so on. Folk songs are also prevalent among the Tamil-speaking Muslim community. However, there is a lack of studies on their unique attributes. This research aims to analyze the attributes of folk songs among Tamil-speaking Muslims. From the selected collection of songs, an analysis of their common elements, Islamic religious and cultural references, social beliefs, language, and so on will be conducted. This study will highlight how Islamic religious beliefs and unique cultural practices of mothers are intertwined with the universal characteristics of Tamil folk songs. Thus, it provides an in-depth understanding of the cultural and behavioral aspects of Tamil Muslims.*

**Key Words:** *Customs, beliefs, family, civilization, society*

# முஸ்லிம் மக்கள் மத்தியில் காணப்படும் தாலாட்டுப் பாடல்கள் - உள்ளடக்க ரீதியான ஓர் ஆய்வு

**M.A. சிம்ரா[1], திருமதி. MIF. சஃப்னா[2],**
[1&2] விரிவுரையாளர், தமிழ் மொழித்துறை, கலை மற்றும் கலாச்சார பீடம், தென்கிழக்கு பல்கலைக்கழகம், இலங்கை.

**Abstract:** *இலக்கியங்கள் ஒரு சக்திவாய்ந்த கண்ணாடியாகச் செயல்படுகின்றன, அவை உருவாக்கப்பட்ட காலங்களின் சிக்கலான சமூக மற்றும் பண்பாட்டு இயல்புகளைப் பிரதிபலிக்கின்றன. இலக்கியத்தின் ஒரு அடிப்படைப் பண்பு என்னவென்றால், அதன் இயங்கும் தன்மைதான்; இது அதன் சூழலுக்கும் காலத்தின் ஓட்டத்திற்கும் ஏற்ப இயற்கையாகவே வளர்ந்து வருகிறது. இது ஒரு கலனாகச் செயல்பட்டு, ஒரு சமூகத்தின் பண்பாட்டு மரபைச் சுமந்து, வெளிப்படுத்தி, அதன் விழுமியங்கள், கவலைகள் மற்றும் அபிலாஷைகள் குறித்த நுண்ணறிவுகளை வழங்குகிறது. ஒரு சமூகத்தின் பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள் மற்றும் நடைமுறைகள் ஆழமாக வேரூன்றியவை, இவை பெரும்பாலும் மனிதகுலத்தின் விடியலுக்கே பின்னோக்கிச் செல்கின்றன. மனிதர்கள் நாடோடி வாழ்க்கையிலிருந்து நிலையான சமூகங்களாக மாறியபோது, குடும்ப அமைப்பு ஒரு நிலையான மனித சமூகத்தின் அடித்தளமாக அமைந்தது. இந்த ஆரம்ப சமூகங்களுக்குள், தனிப்பட்ட பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும் படிப்படியாக கூட்டு மனசாட்சியில் ஊடுருவி, பண்பாட்டு அமைப்பை வடிவமைத்தன. பண்டைய தமிழ் நாகரிகம் இந்தச் செயல்முறைக்கு ஒரு சான்றாக நிற்கிறது, இது மனித வரலாற்றில் அறியப்பட்ட பழமையான நாகரிகங்களில் ஒன்றாகும். தமிழ்நாட்டிற்குள், வளமான வேளாண் நிலங்களில் வசிப்பவர்களான மருத நில மக்கள், தங்கள் சூழலுடனும் வாழ்வியல் முறையுடனும் பிரிக்கமுடியாமல் இணைக்கப்பட்டிருந்த தனித்துவமான பழக்கவழக்கங்களையும் நம்பிக்கைகளையும் வளர்த்தெடுத்தனர். இந்தக் கட்டுரை எட்டு விரிவான தொகுதிகளில் மருதப் பண்பாட்டின் வளமான அமைப்பை ஆழமாக ஆராய்கிறது, அதன் பல்வகைப்பட்ட அம்சங்களை ஆய்ந்து வெளிப்படுத்துகிறது. இது மருத மக்களைத் தனித்துவப்படுத்திய மரபுகள், சடங்குகள், சமூகக்*

*கட்டமைப்புகள் மற்றும் உலகக் கண்ணோட்டம் ஆகியவற்றின் விரிவான ஆய்வை வழங்குவதை நோக்கமாகக் கொண்டுள்ளது, இவை தமிழ் நாகரிகத்தின் செழுமையான பன்முகத்தன்மைக்கு பங்களித்தவை. மருதப் பண்பாட்டைப் புரிந்துகொள்வதன் மூலம், பண்டைய தமிழ் சமூகத்தின் நுணுக்கங்களையும் நீடித்த பாரம்பரியத்தையும் இன்னும் ஆழமாகப் புரிந்துகொள்கிறோம். மனிதன் குடியேறி குடும்ப அலகுகளாக ஒன்றிணைந்து, சமூகக் கட்டமைப்புகளை உறுதியாக்கியது போலவே, அவர்களின் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும் உறுதியடைந்து, அவர்களின் வாழ்வின் ஒவ்வொரு அம்சத்திலும் ஊடுருவின. மருத மக்களின் தாக்கமும் அவர்களின் பங்களிப்பும் ஒரு முழுமையான மற்றும் மரியாதைக்குரிய ஆய்வுக்குத் தகுதியானது.*

***குறிப்பு சொற்கள்*** *: பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள், குடும்பம், நாகரிகம், சமுதாயம்.*

## 1. அறிமுகம் (Introduction):

1.1 ஆய்வின் பின்புலம் (Background of the Study) தாலாட்டுப் பாடல்கள் உலகெங்கிலும் உள்ள சமூகங்களில் காணப்படும் ஒரு தொன்மையான வாய்மொழி இலக்கிய வடிவமாகும். இவை குழந்தையின் அழுகையை நிறுத்தி உறங்க வைக்கும் கருவியாக மட்டுமன்றி, சமூகத்தின் மரபுகள், நம்பிக்கைகள், கனவுகள், தாய்மையின் உணர்வுகள் ஆகியவற்றை அடுத்த தலைமுறைக்கு கடத்தும் ஊடகமாகவும் செயல்படுகின்றன. தமிழ் நாட்டார் வழக்காற்றில் தாலாட்டுக்குச் சிறப்பான இடம் உண்டு. தாய் அல்லது பாட்டி பாடும் இப்பாடல்கள் குழந்தையின் நலன், வளர்ச்சி, எதிர்காலம் குறித்த ஆசைகளையும், குடும்ப உறவுகள், சமூகப் பழக்கவழக்கங்கள் பற்றிய குறிப்புகளையும் கொண்டிருக்கும்.

### 1.2 சிக்கல் கூற்று (Problem Statement)

பொதுவான தமிழ் தாலாட்டுப் பாடல்கள் குறித்து பல ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. ஆனால், தமிழ் பேசும் சமூகங்களுக்குள் வாழும் பல்வேறு சமய மற்றும் பண்பாட்டுக் குழுமங்களுள், அவர்களின் தனித்துவமான சமய, பண்பாட்டுக் கூறுகளைத் தாங்கி நிற்கும் தாலாட்டுப் பாடல்கள் குறித்த விரிவான ஆய்வுகள் போதுமானதாக இல்லை. குறிப்பாக, தமிழ் பேசும் முஸ்லிம் சமூகத்தினரின் தாலாட்டுப் பாடல்கள் பொதுவான தமிழ் தாலாட்டுப் பண்புகளிலிருந்து எவ்வாறு வேறுபடுகின்றன அல்லது தனித்துவமான இஸ்லாமிய மற்றும் பண்பாட்டுக் கூறுகளை எவ்வாறு உள்ளடக்கியுள்ளன என்பது குறித்த உள்ளடக்க ரீதியான ஆய்வு அவசியமாகிறது.

### 1.3 ஆய்வின் நோக்கம் (Objectives of the Study)

இந்த ஆய்வு ஆனது பின்வரும் முக்கிய நோக்கங்களைக் கொண்டுள்ளது:

- தமிழ் பேசும் முஸ்லிம் சமூகத்தினரிடையே வழக்கில் உள்ள தாலாட்டுப் பாடல்களைச் சேகரித்தல்.
- சேகரிக்கப்பட்ட பாடல்களிலுள்ள பொதுவான கருப்பொருட்களை இனங்காணல்.
- இப்பாடல்களிலுள்ள இஸ்லாமிய சமயக் கூறுகள் (அல்லாஹ், நபிகள், துஆக்கள் போன்றவை) மற்றும் குர்ஆன், ஹதீஸ் சார்ந்த குறிப்புகளை ஆராய்தல்.
- இப்பாடல்களில் காணப்படும் தமிழ் முஸ்லிம்களின் தனித்துவமான பண்பாட்டுக் கூறுகளை (உடை, உணவு, சடங்குகள், உறவுகள் போன்றவை) கண்டறிதல்.
- தாலாட்டுப் பாடல்கள் வழியாக பண்பாட்டு மற்றும் சமய விழுமியங்கள் எவ்வாறு கடத்தப்படுகின்றன என்பதைப் பகுப்பாய்வு செய்தல்.

**முன்னுரை**

தாயானவள் தனது பிள்ளையை ஆரோக்கியமுள்ள குழந்தையாக மட்டுமன்றி சமூகத்திற்கு நற்பிரஜையாகவும் வளர்க்க விரும்புகிறாள். தாய் என்பவள் தன் பிள்ளைகளுக்கு முதல் ஆசானாவாள். எல்லா விடயங்களையும் தனது பிள்ளைக்குக் கற்றுக் கொடுப்பாள். அந்தவகையில் குழந்தையை உறங்க வைப்பதற்காக தாயால், தந்தையால், பாட்டியால் அல்லது வேறு ஒருவரால் பாடப்படும் பாடலே 'தாலாட்டு' ஆகும். தாலாட்டு தொடர்பாக பல அறிஞர்கள் பலவேறு கருத்துக்களைக் கூறியுள்ளனர். அந்தவகையில்,

***"தாய்மை உலகிற்கு வழங்கிய முதல் இலக்கியப் பரிசுதான் தாலாட்டு"***

எனக் தமிழண்ணல் கூறியுள்ளார்.

உலகிலுள்ள அனைத்தையும் விட பிள்ளைப் பாசமே ஆழமானது; வலிமைமிக்கது; அழகானது; உணரச்சிகரமானது. இத்தகைய பாசத்தின் விளைவாகத் தான் தாலாட்டுப் பாடல் தோற்றம் பெற்றிருக்கலாம். மேலும் தாலாட்டில் பல்வேறு விடயங்கள் உள்ளடக்கப்பட்டுள்ளதை அவதானிக்கலாம். அந்தவகையில், தாய்மையின் தவிப்பு, குழந்தை பற்றிய எதிர்பார்ப்புக்கள், இறைவனின் இனிய நாமங்கள், வரலாற்றுச் சம்பவங்கள் மற்றும் பிள்ளைகளுக்கான அறிவுரைகள் போன்ற இன்னோரன்ன விடயங்களைக் கொண்டமையப் பெற்றுள்ளன.

தாலாட்டு என்ற சொல்லை தால்+ஆட்டு எனப் பிரிக்கலாம். தால் என்றால் நாக்கு எனப்படும். நாவை ஆட்டிப் பாடுவதாலேயே தாலாட்டு எனப் பெயர் பெற்றிருக்க வேண்டும். குழந்தை பசியினால் அல்லது பயத்தினால் அழும்போது தாய்மை விழிப்படைந்து கொள்கிறது. அப்போது தாய் மனதில் ஏற்படும் பாசவுணர்வு குழந்தையை சமாதானப்படுத்தும் நோக்கில் தாலாட்டாக பிரதிபலிக்கின்றது. தாலாட்டுப் பாடலுக்கென்று எவ்வித இலக்கண மரபும் கிடையாது.

பொதுவாக தாலாட்டுக்கள் குழந்தையைப் பற்றியதாகவே இருக்கின்றன. அத்தோடு குழந்தையைச் சார்ந்தவர்கள் பற்றியும் ஒரு சில தாலாட்டுப்பாடல்கள் அமையப்பெற்றுள்ளன. அதாவது, "குழந்தைக்காக தாய் அடைந்த துன்பம், தாய் புரிந்த பிரார்த்தனைகள், குழந்தையின் உறவினர் செய்த உதவிகள், அதன் வருங்கால வாழ்வின் தன்மைகள் என்பன பற்றியெல்லாம் தாலாட்டும் போது தாய் கூறிக்கூறிக் குழந்தையை உறங்க வைப்பது வழக்கமாகும்." மேலும் "தெய்வங்களை வருந்திப் பாடுவதும் (வரவழைத்து), தாய்மாமன் சிறப்பு, பிறந்த வீட்டின் பெருமை, குழந்தையின் எதிர்காலம் ஆகியவை குறித்த செய்திகள் தாலாட்டில் இடம்பெறுகின்றன."

குழந்தைகள் அழும்போது அவர்களை அமைதிப்படுத்தி உறங்கச் செய்வதற்காக தங்கள் தோள்களில் தூக்கிப்போட்டு அணைத்தபடியும், தரையில் உற்கார்ந்து கால்களை நீட்டிப்போட்டு அக்கால்களுக்கிடையில் குழந்தையை மல்லாக்காக வளர்த்தியும், வீடுகளில் போடப்பட்டிருக்கும் பலகை ஊஞ்சலில் இருந்து மடியில் வைத்தும் தாலாட்டுப் பாடுவார்கள்.

தாலாட்டுப் பாடல்கள் ஒரே மாதிரியான இசைவடிவிலேயே ஆரம்பமாகித் தொடர்ந்து செல்வதை அவதானிக்கலாம். அத்தோடு தாலாட்டு பாடும் தாய்க்கு கால வரையறை கிடையாது. தாய், குழந்தை அழுகையை நிறுத்தும் வரை தாலாட்டை தன் விருப்பப்படி இசைத்துக் கொண்டே இருப்பாள். இது தாய்மைக்கு வழங்கப்பட்ட ஒரு கொடை என்றே சொல்ல வேண்டும்.

தாலாட்டுப் பாடலில் முதல் வரிகள் சொற்களைக் கோர்த்ததாக அமையப் பெறுவதில்லை. முதல் இரண்டு வரிகளும் அனேகமாக பொருளற்ற சொற்களைக் கொண்டமைந்த ஓசையாகவே காணப்படுகின்றன. தாலாட்டுப் பாடல்கள் பிரதேசத்திற்கு பிரதேசம் மாறுபடுகிறது. மாவட்டத்திற்கு மாவட்டம் வேறுபடுகிறது. ஒரே மாவட்டத்தைச் சேர்ந்தவர்களும் ஒரே வகை ஒலிக்கூறுகளைக் கையாள்வதில்லை. அந்தவகையில், ஈழத்தில் பாடப்படும் தாலாட்டுப் பாடல்களின் ஆரம்ப வடிவம் வேறுபடுவதை பின்வருமாறு நோக்கலாம்;

***'ஆராரோ...... ஆரிவரோ......'***
***'ஓரோரோ...... ஓகண்டே......'***
***'ஆரா...... பாரா...... ராராரோ...'***
***'ராராரோ...... ராரிரரோ...'***

எனவே இவ்வாறு பாடிவரும் தாலாட்டு, கிராமத்துக்கு கிராமம், சாதிக்குச் சாதி, மதத்துக்கு மதம் வேறுபட்டாலும் பெரும்பாலானவை பொதுவான சொற்களைக் கொண்டே ஆரம்பிக்கப்படுகின்றன. மேலும் தாலாட்டின் பாடற்பொருளை மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரித்து நோக்கலாம் என்று சு. சக்திவேல் குறிப்பிடுகிறார்.

- "குழந்தையைப் பற்றியவை
- குழந்தைக்குரிய கருவிகளைப் பற்றியவை
- குழந்தைகளின் உறவினர்கள் பற்றியவை என்பனவாகும்."

இவரது கருத்துப்படி தாலாட்டுப் பாடல்கள் பெரும்பாலும் பெண்களால் அதாவது தாயால் பாடப்படுகின்றன. பெண்கள் தாய்வீட்டுச் சீதனத்தோடு கணவன் வீட்டிற்குத் தாலாட்டையும் கொண்டு வருகின்றனர் என்றே கூறலாம். குழந்தையை உறங்க வைப்பதற்கு மட்டுமல்லாமல் தாயின் மனச்சுமையை இறக்கி வைக்கவும் இத்தாலாட்டு உதவுகிறது. மக்கள் மனதில் உள்ள எண்ணங்கள், நம்பிக்கைகள், இன்ப-துன்பங்கள் ஆகிய அனைத்தையும் தாலாட்டுப் பாடல்களின் மூலம் அறிந்து கொள்ளலாம்.
தற்காலத்தில் நாட்டார் பாடலாகத் தாலாட்டுப் பாடல்கள் அதிகமாகக் காணப்படாத போதிலும் குழந்தையை அரவணைப்பதற்காக ஒருசில தாலாட்டுப்பாடல்கள் கிராம மக்களிடத்தே காணப்படுகின்றன என்றே கூறவேண்டும். அவை ஒவ்வொரு சமயத்திற்கும் இடையில் வேறுபடுவதைக் காணலாம் அந்தவகையில் ஈழத்து முஸ்லிம்கள் மத்தியில் காணப்படும் ஒருசில தாலாட்டுப்பாடல்களையும் அவை கூறும் விடயங்களையும் நோக்குவோம். எடுத்துக்காட்டாக;

***"ஆராரோ ஆராரோ ஆரென்பது ஆராரோ – நீ***
***அரையிலெழுந்ததென்று பொறுந்திக்***
***கொள்வாய் நித்திரியே***
***நீ ஏன் அழுதாய் மகளே***

*நீ ஏன் அழுதாய் கண்மகளே - இதெல்லாம்*
*உனக்கில்லை என்று பால் வடிய*
*சித்திரை கொண்டாடுவாய் மகளே*
*(ஆராரோ)*
*ஆராற்றும் சீராற்றும்*
*துஆ செய்மா சைத்தான விட்டு*
*பால் ஆட்டி தவுலவதுல*
*பயனைப் பெற்றுக் கொள்வாய் புத்திரியே*
*(ஆராரோ)*
*இவ்வுலகில் சீராய் தீனைத் தன்தோனே*
*சிறப்பாய் அல்லாஹ்வ வேண்டி*
*நித்தம் புகழ்வாய் என்மகளே*
*பஞ்ச வர்ணத் தொட்டில் மீது*
*பாங்காய் அழுவாய் மகளே*
*(ஆராரோ)*
*யாரோ எவரோ இவ்வுலகில்*
*ஊரால வந்த என் மகளோ – நீ*
*அரசாலுங்கோ மகளே*
*பஞ்ச வர்ணத் தொட்டில் மீது – நீ*
*பாங்காய் ஆடுவாய் என் மகளே"*
*(ஆராரோ)*

இப்பாடலானது பெண் குழந்தைக்குப் பாடப்பட்டதாக அமையப்பெற்றுள்ளது. அதாவது இப்பாடலில் கையாண்டுள்ள 'என் மகளே', 'கண் மகளே' எனும் சொற்கள் இதற்கு சான்றாகும்.

மேலும் இத்தாலாட்டுப் பாடல் குழந்தைக்கு இஸ்லாமிய சமயத்தைப் புகட்டும் வகையிலும் அதைத் தொடர்ந்து குழந்தையை தீய சக்திகளின் தீங்கை விட்டும் பாதுகாப்பு வேண்டியும் தாயாள் பாடப்பட்டுள்ளது. அதாவது,

*ஆராற்றும் சீராற்றும்*
*துஆ செய்மா சைத்தான விட்டு*
*பால் ஆட்டி தவுலவதுல*
*பயனைப் பெற்றுக் கொள்வாய் புத்திரியே*
*(ஆராரோ)*
*இவ்வுலகில் சீராய் தீனைத் தன்தோனே*
*சிறப்பாய் அல்லாஹ்வ வேண்டி*
*நித்தம் புகழ்வாய் என்மகளே*
*பஞ்ச வர்ணத் தொட்டில் மீது*
*பாங்காய் அழுவாய் மகளே*
*(ஆராரோ)*

எனும் வரிகள் குழந்தை படிப்படியாக வளர்ந்து வர எத்தகைய தடையும் இருக்கக் கூடாது என்று சைத்தானின் (தீய சக்தி) தீங்கை விட்டும் பாதுகாப்பு தேடுவதாக அமைந்துள்ளது. மேலும் இவ்வுலகில் அனைத்தையும் படைத்து பரிபாலிப்பவனான அல்லாஹ்விடம் தனது பிள்ளைக்கான தீனை (வேதம்) சிறப்பாக வழங்க வேண்டும் என்றும் வேண்டிப் பாடுகிறாள்.

இத்தாலாட்டுப் பாடலின் அடுத்த வரிகள் தனது குழந்தை எதிர்காலத்தில் எவ்வாறு வளர வேண்டும் என்ற தாயின் உயர் எண்ணத்தை எடுத்துக்காட்டியுள்ளது. அதாவது, ஊராள வேண்டும் என்றும், அரசாள வேண்டும் என்றும் கூறுகிறாள். இதனூடாக பிள்ளையை சிறு வயதில் இருந்தே அவளுடைய எதிர்காலத்தை திட்டமிடுவதற்கான மனோநிலையை தாய்மை ஏற்படுத்துவதைக் காணலாம். இன்னுமொரு தாலட்டுப் பாடலில் பின்வருமாறு பாடப்பட்டுள்ளது.

***“ஆராரோ ஆராரோ***
***ஆரிரோ ஆராரோ***
***(ஆராரோ)***
***பாலுக்கு அழுகிறதோ - நீ***
***பாலுக்கு அழுகிறதோ***
***தேனுக்கு அழுகிறதோ – நீ***
***தேனுக்கு அழுகிறதோ***
***நித்திரை செய் மாணிக்கமே***
***(ஆராரோ)***
***உறங்கி முடித்த பின்னே – நீ***
***கேட்டபடி நான் தருவேன்***
***என் மகளே – நீ***
***நித்திரை செய் புத்திரியே”***
***(ஆராரோ)***

இத்தாலாட்டானது தன் குழந்தை அழுவதற்கான காரணத்தை குழந்தையிடமே கேட்டு அறிந்து கொள்வது போல் பாடப்பட்டுள்ளது. நித்திரை விட்டு எழுந்த பின்னர் குழந்தை கேட்டவற்றைத் தருவதாக குழந்தையிடம் கூறி சமாதனப்படுத்துவதாக அமைந்துள்ளது. இத்தாலாட்டுப்பாடலானது சிறிய வடிவில் அமையப்பெற்றுள்ளது.

நாட்டார் பாடல்களில் கதைவடிவில் அமையப்பெறுவது ஒரு வடிவமாகும். இதனைக் கதைப்பாடல் என்று கூறுவர். அந்த அமைப்பில் சில தாலாட்டுப்பாடல்களும் காணப்படுகின்றன. தாலாட்டுப் பாடலில் குழந்தை அழுவதாகவும் யார் அடித்து அழுகிறாள் என்றும் கேள்விகளை எழுப்பிப் பாடப்பட்டுள்ளதை அவதானிக்கலாம். அதாவது,

***“ஆராரோ ஆரிவரோ***
***ஆரடித்து நீ அழுதாய்***
***கண்மனியே கண்ணுறங்காய்***
***அடித்தாரை சொல்லி அழு***
***ஆய்ச்சினைகள் பன்னிவைப்பேன்***

*(ஆராரோ)*
*அத்தை அடித்தாளோ*
*அமுதூட்டும் கையாலே*
*மாமன் அடித்தானோ*
*மகிழ்ந்தெடுக்கும் கையாலே*
*அண்ணன் அடித்தானோ*
*அணைத்தெடுக்கும் கையாலே*
*பாட்டி அடித்தாளோ*
*பாலூட்டும் கையாலே*
*(ஆராரோ)*
*மரகத தொட்டிலிலே*
*கண்மணியே கண்தூங்கு*
*மாணிக்க படுக்கையிலே*
*மகிழ்வாகத் தூங்கிடுவாள்*
*என் செல்லக் கிளியே"*
*(ஆராரோ)*

எனும் இப்பாடல் குழந்தைக்கு யாரோ அடித்ததால்தான் குழந்தை அழுகுறது என்று தாய் பிள்ளையிடம் கேட்கிறாள். உறவினர்கள் அடித்திருப்பார்களா? என்று வினா எழுப்பி, அதற்கு வாய்ப்பில்லை என்பதனைக் கூறி பாடலை தொடர்கிறாள். உறவினர்களின்; மகிமையினை கதைப் பாடல் அமைப்பில் கூறியுள்ளதை அவதானிக்கலாம். உறவினர்கள் ஒருபோதும் குழந்தைக்கு கேடு விளைவிக்க மாட்டார்கள். இருந்தாலும், பிள்ளையின் அழுகையை நிறுத்துவதற்காக இவ்வாறு பாடலை நகர்த்திச் செல்கிறாள். இத்தாலாட்டுப் பாடல் தொட்டிலிலே போட்டு ஆட்டும் போது பாடப்படும் பாடலாகவே அமைந்துள்ளது.

தாலாட்டுப்பாடல்கள் பெண் குழந்தைக்கு தனியாகவும் ஆண் குழந்தைகளுக்கு தனியாகவும் மற்றும் சில பாடல்கள் இருபாலாரினருக்கும் பொருந்தக்கூடிய வகையில் அமைந்து காணப்படுகின்றன. இதற்கு முன்னர் நோக்கப்பட்ட பாடல்கள் பெண் குழந்தைக்கான பாடல்களாகக் காணப்பட்டன. பின்வரும் பாடல் ஆண் குழந்தைக்குப் பாடப்பட்ட பாடலாக அமைந்துள்ளது. அதாவது,

*"ஆராரோ ஆராரோ*
*ஆரிரோ ஆராரோ*
*(ஆராரோ)*
*அவனியல்லால் வேறாரோ*
*சீராயுலகம் படைத்தோனே*
*சிறப்பாம் அல்லாவெனினாமம்*
*நேராய்க் கல்பில் வைத்தோதி*
*நினைவாய் உறங்குமென் மகனே*
*ஆராரிவாராய் புகழ்ந்தாலும்*
*எல்லா அல்லாதனக்காகும்*
*நேரம் தினை தந்தோனை*
*நித்தம் புகழ்வா யென்மகனே*

*(ஆராரோ)*
*செவ்வாய் நபி மீது ஸலவாத்தை*
*செல்வம் பெருகி மிடைதீரும்*
*எல்லாம் அவர்கள் ஒளிர்வாலே*
*அல்லா படைத்தான் என் மகனே*
*தூங்கும் தொட்டிலில் ரஹ்மான்*
*தன்னை ரித்தம் மறவாமல்*
*பாங்காய் கவியை கேட்டறிந்து*
*புலன் நீ பெறுவா யென்மகனே*
*(ஆராரோ)*
*அவ்ரில் பொருளும் பட்டனமும்*
*எல்லாம் உனக்கே கிடைத்தாலும்*
*நீரின் குமுழி போல் ஒழ்யும்*
*நிலைக்கும் நல்ல அமல்களே*
*துன்யா வாழ்க்கை கனவைப் போல்*
*துன்பமுடனே தூதரும்*
*மனவாய் வெறுத்தால் அழியாது*
*வாழ்வாய் பெறுவாய் என் மகனே (ஆராரோ)*

இவ்வாறு ஆண் குழந்தைகளுக்கும் அழகான கருத்து வளம் மிக்க பாடல்கள் தாலாட்டாகப் பாடப்பட்டுள்ளதை அவதானிக்கலாம். ஒவ்வொரு பந்தியிலும் என் மகனே என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளதை ஆண் குழந்தைக்கான பாடலாக அமையாளப்படுத்தலாம். மேலும் இத்தாலாட்டுப் பாடலில் இஸ்லாமியத் தத்துவங்கள் அழகாகச் சொல்லப்படுகின்றன. குழந்தைகளுக்கு அவர்களின் சின்ன வயதிலேயே சமயக் கருத்துக்களையும், ஒழுக்கத்தினையும், ஊட்டுவதற்கு தாயானவள் தாலாட்டுப் பாடலை ஒரு சிறந்த ஊடகமாகப் பயன்படுத்துகிறாள். இஸ்லாமியர்களின் வாழ்வோடு பின்னிப் பிணைந்துள்ள அடிப்படைச் சமயக் கோட்பாடுகள், இறையச்சம், ஒழுக்கக் கட்டுப்பாடு என்பன சூட்ஷமான முறையில் இத்தாலாட்டில் இடம் பெற்றுள்ளதை அவதானிக்கலாம். மேலும் நாம் வாழ்வில் உயர்வு பெற்றாலும் அல்லாஹ்வை அஞ்சி, நல்ல அமல்களை கடைபிடித்து வாழ வேண்டும். அதுவே எமக்கு உயர்வைத் தரும் என்று குழந்தைக்கு மார்க்க அறிவை மிகவும் எளிமையாகக் கூறுகின்றாள்.

மேலும் பொய்யும், புறமும் இன்றி பொறுமையுடன் வாழவேண்டும் என்றும், உலகத்தில் பொருளும், பட்டனமும் கிடைத்தாலும் நல்ல அமல்களுடன் வாழ வேண்டும். துன்யா வாழ்க்கை (உலக வாழ்க்கை) கனவைப் போன்றது என்று கூறி முஹம்மது நபி போல் வாழ வேண்டும் என்று இறுதியில் கூறி குழந்தையை தூங்கச் செய்கின்றாள்.

இதுபோன்று முஸ்லிம்கள் மத்தியில் காணப்படும் மேலும் சில தாலாட்டுப் பாடல்கள், இஸ்லாமிய சமயக் கருத்துக்களைத் தழுவியதாகவும் சமயத்தைப் போதிப்பதாகவும் அமைந்துள்ளன. பின்வரும் பாடலும் அவ்வாறு அமையப்பெற்ற ஒரு தாலாட்டுப் பாடலாகும்.

*“ஆராரா ராராரோ*
*ஆரிவ ரா ராரோ*
*வாழ்வில் வல்ல யா ரஹீமான்*
*தந்த செல்வம் - நீ யாரோ*
*(ஆராரா ராராரோ)*
*தேனாகும் திருக்குர்ஆன்*
*தெவிட்டாத அமுதாகும்*
*கோமானான் நபி பெருமான்*
*கொடையான வழிகோலும்*
*ஈமானின் சுடரொழியாம்*
*இகமீது வாழ்வாயே*
*வாழ்வில் வல்ல ரஹ்மான்*
*தந்த செல்வம் நீ யாரோ*
*(ஆராரா ராராரோ)*
*கண்ணனா கண்மணியே*
*கற்றோரும் போற்றிடவே*
*பொன்னோடு புருயாவும்*
*பொங்கும் நற் பெருமையுடன்*
*வாழ்வாயே ஊழிநவன்*
*வழமோடு வைய மதில்*
*வாழ்வில் வல்ல யா ரஹ்மான்*
*தந்த செல்வம் நீ யாரோ*
*(ஆராரா ராராரோ)*

தன்னுடைய குழந்தையை ‘வாழ்வில் வல்ல ரஹ்மான் தந்த செல்வம் நீ யாரோ’ என்று வினாவோடு இத்தாலாட்டு ஆரம்பமாகிறது. புனித வேதமாகிய திருக்குர்ஆனை அமுதமாக ஓதுமாறும் நபிவழியில் வாழ்வினை அமைத்துக் கொள்ளுமாறும் தன் குழந்தைக்கு கூறி மார்க்கத்தின் கண் வாழுமாறு போதிக்கின்றாள். மேலும் இத்தாலாட்டின் இறுதி அடிகள் பின்வருமாறு அமையப்பெற்றுள்ளதை அவதானிக்கலாம்.

*“கலைஜோதி உருவாவாய்*
*கலையாத மாண்புறுவாய்*
*நிலையான நீதிமகான்*
*நிறைவான் ஹஸன் ஹீஸைனாய்*
*புவிமீது வாழ்ந்தது போல்*
*புகழோடு வாழ்ந்திடுவாய்*
*வாழ்வில் வல்ல ரஹ்மான்*
*தந்த செல்வம் நீ யாரோ”*
*(ஆராரா ராராரோ)*

அதாவது, முஸ்லிம்களின் வரலாற்றில் இறுதி நபியின் பேரக் குழந்தைகளான ஹஸன், ஹஸைனார் அவர்கள் வாழ்க்கை முறையைப் பின்பற்றி அனைவரும் போற்றும்

வண்ணம் நற்குணத்துடன் வையகத்தில் வாழ வேண்டும் என்றும் தாய் பிரார்த்தனை செய்கிறாள்.

மேலும் ஒரு தாலாட்டுப்பாடல்கள் நான்கு அல்லது ஐந்து அடிகளை மட்டும் கொண்டு பாடப்பட்டுள்ளன. அதில் அதிகமான சொற்கள் குழந்தையை கொஞ்சுவதாகவே அமைந்திருக்கின்றன. மேலும் ஒரேவரி மீண்டும் மீண்டும் பாடலில் வந்துள்ளதைக் காணலாம். இப்பாடல் குழந்தையை தூங்க வைக்கும் நோக்கத்திற்காக மட்டும் ராகத்தோடு பாடப்பட்டுள்ளது எனலாம். ஏனெனில் ஏனைய பாடல்களைப் போன்று இதில் குழந்தைக்கு எடுத்துக் கூறும் விடயங்கள் அமையப்பெறவில்லை.

***"ஆரிராரிராரோ***
***அமுத அன்பு மலரே***
***ஆரிராரோ ஆரிரரே***
***உறங்கு கண்மணி - என்***
***உறங்கு கண்மணி"***
***(ஆரிராரி ராரோ)***

ஆண், பெண் குழந்தைகளுக்கு தனித்தனித் தாலாட்டுப் பாடல்கள் காணப்படுவது போல் இருபாலருக்கும் பொதுவான சில தாலாட்டுப் பாடல்களையும் காணக்கூடியதாகவுள்ளன. அந்தவகையில் எடுத்துக்காட்டாக பின்வரும் பாடலை நோக்கலாம்;

***"ஆராரோ ஆராரோ***
***ஆரென்பது ஆராரோ***
***ஆராய்ந்து அரும்பொருள்***
***அறிந்துன்டு நித்திரைசெய்***
***(ஆராரோ ஆராரோ)***
***நித்திரை ஆகையில் - நிறைவில்***
***நினைப்பெதெல்லாம்***
***சீரப் பாதம் என்டு சிதரிவிட்டாய் - புத்திரியே***
***பல்லாங்கு ஆனதிலே நித்திரை மாயத்திலே***
***(ஆராரோ ஆராரோ)***
***எழுந்து சோது எடு புத்திரியே***
***ஆராட்டும் சீராட்டும்***
***துஆ செய்து அசைந்து ஆடும் - ஊஞ்சலிலே***
***நீ பாராட்டி தாவட்டத்தில் நித்திரை செய்"***
***(ஆராரோ ஆராரோ)***

குழந்தையை தொட்டிலில் இட்டு ஆட்டி நித்திரை செய்யும் போதே இப்பாடல் அதிகம் பாடப்படுகிறது. இது இருபாலார்களுக்கும் பொதுவான ஒரு தாலாட்டாக அமைகிறது. ஏனைய தாலாட்டுப் பாடல்களை விட இப்பாடல் சற்று வித்தியாசமாகக் காணப்படுகிறது. அதாவது, குழந்தையானது தூங்குவதற்கு முன் பல குழப்படிகளைச் செய்கிறது. ஆனால் தூங்கி எழுந்தால் செய்த குழப்படிகளை மறந்து குழந்தை சந்தோசமாக

விளையாடுவதைக் காணலாம். அதனைக் குறிப்பிட்டுக் காட்டியே தாயானவள் இத்தாலாட்டை பாடுகின்றாள்.

மேலும் பிள்ளைக்கு கண்ணூறு வராமல் பாதுகாக்கவும், ஜின் சைத்தான் (தீய சக்திகள்) விட்டுப் பாதுகாக்கவும் திருக்குர்ஆன் வசனங்களை ஓதிவிட்ட தாகவும் குறிப்பிட்டுள்ளது. இத்தாலாட்டுப்பாடலான பல விடயங்களை எடுத்துச் சொல்வதைக் காணலாம். அதாவது சிறுவயதிலேயே குழந்தை களுக்கு மார்க்கக் கல்வி தாலாட்டிலேயே தாயாள் புகட்டப்படுவதைக் காணலாம்.

மற்றுமொரு தாலாட்டுப் பாடல் பின்வருமாறு அமையப் பெற்றுள்ளதைக் காணலாம். இப்பாடலிலும் பல சிறந்த கருத்துக்கள் குழந்தைக்குச் சொல்லப்படுவதை அவதானிக்கலாம். இத்தாலாட்டு சிறு சிறு சொற்களைக் கொண்ட அழகிய இசையுடன் பாடப்படுகின்றது. மேலும் அதிகமான தாலாட்டுப் பாடல்களின் ஆரம்பம் ஒரே விதமாகக் காணப்படுவதை அவதானிக்கலாம். ஆயினும் இத்தாலாட்டுப் பாடலின் ஆரம்பம் ஏனைய பாடல்களிலிருந்து வித்தியாசமானதாக அமைந்துள்ளது.

***"சந்தனப் பாப்பா சாய்ந்தாடு***
***சாய மயிலே சாய்ந்தாடு***
***சவளமூக்கன் நீ சாய்ந்தாடு***
***சாய்ந்தாடு கண்ணே சாய்ந்தாடு***

***பஞ்ச வர்ண மெத்தையிலே படுத்துறங்கு***
***பவளக்கட்டில் தொட்டினிலே படுத்துறங்கு***
***மான்குட்டி ராஜா நீ சாய்ந்தாடு***
***சாய மயிலே சாய்ந்தாடு***
***(சந்தனப்பாப்பா)***
***சட்டலங்கா புட்டலங்கா வாங்கித்தரட்டுமா***
***சாதிக்கூடு மாதளங்கா வேண்டித் தரட்டுமா***
***பச்சரிசி குத்தி குத்தி தரணி மேல வெச்சி வெச்சி***
***பச்சரிசி குத்தி குத்தி தரணி மேல வெச்சி வெச்சி"***
***(சந்தனப்பாப்பா)***

மேற்குறிப்பிட்டுள்ள தாலாட்டுப்பாடலில் சந்தனப் பாப்பா, சாய மயிலே, சவளமூக்கன், மான் குட்டி, கண்ணே எனப் பல பெயர்களைக் கொண்டு பிள்ளையை வர்ணிக்கப்பட்டுள்ளது. குழந்தையை உறங்க வைப்பதற்காக பல பொருட்களை வாங்கித் தருவதாகக் கூறி குழந்தையை உறங்க வைக்கின்றாள்.

இன்னொரு தாலாட்டுப் பாடல்; பின்வறுமாறு அமைந்துள்ளது. அதாவது குழந்தைகளுக்கு விளையாடுவது என்றால் அளாதியான ஒரு பிரியம். எனவே இங்கு விளையாட அழைத்து குழந்தையை தூங்க வைக்கும் தாயின் மதிநுட்பம் தெளிவாக விளங்குகின்றது. அதாவது,

***"வாங்களே பாத்திமா விளையாடோம்***
***ஆத்தடி மண்ணால் சோறாக்கி***

*அவரங்கப் பூவால் கறியாக்கி*
*மினு மினு பூச்சாய் விளக்கேற்றி...*
*வாங்களே செல்ல மகள் விளையாடோம்"*
*(வாங்களே பாத்திமா)*

இவ்வாறு பாடி தூங்கி எழுந்த பின் நாம விளையாடுவோம் என்று கூறுவதால் பிள்ளை அவசரமாக தூங்கி விடுவாள் என்று தாயின் எண்ணத்தையும், நம்பிக்கையையும் இப்பாடலில் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. இதில் குறிப்பிடப்படும் ஆத்தடி மண், அவரங்கப் பூ என்பவை பிள்ளைகள் விளையாடும் போது பயன்படுத்தும் பொருட்களாகும். மேலும் ஒரு பாடலை நோக்குமிடத்து பின்வருமாறு அமைகிறது.

*"ஆராரோ கண்ணே ஆராரோ....*
*பொன்னொழி எந்தன் ஆராரோ...*
*வல்லோன் அல்லாஹ் அருளாலே...*
*இந்த மண்ணில் நீயே பிறந்தாயே...*
*(ஆராரோ கண்ணே)*
*மாமறைப் போதனையை*
*தங்கச் செல்வம் நீ ஓதி நின்றே*
*மானிலம் உன் புகழை*
*தாங்க வஹ்மானை வேண்டி நின்றேன் கண்ணே;*
*உன்னை சீர்தூக்கித் தாலாட்டினேன்*
*செல்ல மகனே நீ வாழ்க*
*(ஆராரோ கண்ணே)*
*மாநபி வாழ்வினை*
*உங்கள் வாழ்நாளில் எந்நாளுமே*
*அன்புக் களஞ்சியமாய்*
*அன்புச் செல்வமே நீ வாழவே*
*பரிவோடு மேலாம் அறிவோடு*
*உந்தன் பாதைகள் சீராகவே*
*கண்ணே கனியே ஆராரோ*
*இந்த மண்ணே போற்ற நீ வாழ்க*
*(ஆராரோ கண்ணே)*
*பாரோங்க பேரோங்கவே*
*உள்ளம் சீராட்டிப் பாராட்டினேன்*
*நற்பேறு பதினாறுமே*
*வளமாய் எந்நாளும் நீ சூடியே தங்கமே...*
*உள்ளம் பாராட்டி தாலாட்டினேன்*
*வல்லோன் அல்லாஹ் அருளாலே*
*எந்தன் அன்பே அமுதே நீ வாழ்க*
*(ஆராரோ கண்ணே)*

இத்தாலாட்டைப் பொறுத்தவரையில் வித்தியாசமான ஒரு தாலாட்டுப் பாடலாக அமைகிறது. அதாவது, ஆரம்ப காலங்களில் முஸ்லிம்கள் மத்தியில் பாரம்பரிய

சம்ரதாயம் ஒன்று காணப்பட்டது. தற்போதும் இவ்வழக்கு ஒருசில பிரதேசங்களில் பேணப்படுவதைக் காணலாம். அதாவது பிள்ளை பிறந்து நாற்பதாம் நாளில் குழந்தைக்கு நாற்பது என்று இந்நாளை விழாவாகக் கொண்டாடுவார்கள். அந்நாளில் குழந்தையை மிகவும் அழகாக அலங்கரித்து தொட்டிலில் தூங்க வைத்திருப்பார்கள். குழந்தைக்கு தாலாட்டு பாடுவதற்கு ஒருவரை வரவழைப்பர். பின்னர் அவர் குழந்தைக்கு தாலாட்டுப் பாடுவார். இப்பாடல் அவ்வாறு பாடப்பட்ட ஒரு தாலாட்டுப்பாடலாகும். இப்பாடலில் குழந்தையைப் பாராட்டிப் பாடியுள்ளதோடு இறைவனைப் புகழ்ந்தும் குழந்தையின் எதிர்காலத்திற்கு அருள் புரியட்டும் என்றும் வாழ்த்திப் பாடியுள்ளார்.

**முடிவுரை**

அந்தவகையில் பல கருப்பொருட்களை அடிப்படையாகக் கொண்டு தாலாட்டுப் பாடல்கள் அமையப்பெற்றுள்ளன. ஆரம்ப காலத்தில் அதிகமான தாலாட்டுப் பாடல்கள் பாடப்படுவதாக பெரியோர்கள் குறிப்பிடுகின்றனர். ஆரம்பகாலத்தில் கூட்டுக் குடும்பமாக வாழ்ந்தார்கள். அப்போது பிறந்த குழந்தைக்கு உற்றார் உறவினர் என்று பலர் இருந்தார்கள். அதில் தாயோ, சகோதரியோ, தாயின் தாயோ, தாயின் தங்கையோ, தந்தையின் தாயோ, வேறு ஒருவரோ குழந்தையை தூங்க வைக்க அல்லது அழும் குழந்தையை சாந்தப்படுத்த வார்த்தைகளைக் கோர்த்துக் கோர்த்துப் பாடலாகப் பாடினார்கள். அவை ஏட்டில் எழுதப்பட்டவையும் அல்ல இயற்றப்பட்டவையும் இல்லை. ஒருவர் பாடி செவி வழி கேட்டவையாக அல்லது அந்த நொடிப்பொழுது வார்த்தைகளைப் பிணைந்து பாடியவையாக இருக்கும். ஆனால் தற்காலத்தில் மிகக் குறைவான அளவே தாலாட்டுப் பாடல்கள் பாடப்படுகின்றன. அதற்குக் காரணம் காலப்போக்கில் ஏற்பட்ட சமூக மாற்றங்களாகும். இன்று நவீன இயந்திரங்களின் வருகை மனிதர்களை எல்லாவிதத்திலும் எளிமையாக்கி யுள்ளன. மனித வாழ்க்கையின் பாரம்பரியங்களை உள்ளங்கைக்குள் சுருக்கியுள்ளன. நவீனத்துவம் எனும் கோட்பாடு தாய்மையையும் இசையையும் பிணைத்துள்ளது. முன்பு தாலாட்டு நா வழியாகப் பாடப்பட்டன ஆனால் இன்று இலத்திரனியல் ஊடகங்களினூடாக இலகுவாக்கப்பட்டுள்ளன. சமூகத்தில் இது மிகவும் கவலைக்குரிய விடயமாகும்.

இவ்வாறு முஸ்லிம்களிடையே காணப்படும் இத்தாலாட்டுப் பாடல்களில் இஸ்லாமியக் கருத்துக்ககள் பல கூறப்பட்டுள்ளன. அத்தோடு தமிழ் பாடல் போன்று சிங்கள மொழிப் பாடல்களையும் கண்டு கொள்ள முடிந்தது. எனவே தாலாட்டுப் பாடல்களில் குழந்தைகளுக்கு அறிவுரையாகவும், குழந்தைகளின் நலன் கருதி இறைவனைப் போற்றியும் குழந்தைகளின் உறவகளின் சிறப்புக்களைக் கூறி பாடப்பட்டுள்ளதை அவதானிக்கலாம்.

**துணை நூற்பட்டியல்:**


1. (நேர்காணல் முஹம்மது காஸிம் மத்தியச்சம் சித்தி ஆயிஷா, மீயல்லை, வயது – 98)
2. (நேர்காணல் ஹபீபுர் ரஹ்மான்,வெலிகம,வயது – 72)
3. (நேர்காணல்: என்.எம்.ஸித்தி ஸ_பைதா, (ஸ_ம்ரி தாயார்), திக்வெல்லை, வயது – 80)
4. (நேர்காணல் ஸித்தி ஸஹிரா, மீயல்லை, வயது – 82)
5. முத்துமீரான், எஸ்., இலங்கை கிராமத்து முஸ்லிம்களின் தாலாட்டுப் பாடல்கள், தேசிய பதிப்பகம், சென்னை. (2007)
6. முஸ்தபா, ஏ.ஸி.எம்., தேனருவியாம் மீயல்லை, ஒக்ஸ்போர்ட் பிரின்ட், குருணாகல். (2010)
7. லரீப் சுலைமான், இறக்காடத்தூர் பண்பாட்டுப் பாடல்கள், (2011)
8. லூர்த், தே., நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுகள், பாரவேள் பதிப்பகம், திருநெல்வேலி. (1968)
9. றமீஸ் அப்துல்லாஹ், கிழக்கிலங்கை கிராமியம், மல்லிகைப் பந்தல், கொழும்பு. (2001)
10. ஷம்ஸ், எம்.எச்.எம்., வளவையின் மடியில், எஸ். கொடகே சகோதரர்கள் பிரைவேட், கொழும்பு. (2014)


**References:**


1. (Interviewed by Muhammad Qasim Madhyacham Siddi Aisha, Meyallai, Age – 98)
2. (Interview Habibur Rahman, Weligama, age – 72)
3. (Interview: N.M. Siddhi Sa_baitha, (mother of Samri), Thikvellai, age – 80)
4. (Interview Sidi Zahira, Meyallai, Age – 82)
5. Muthumiran, S., Lullabies of Sri Lankan Village Muslims, National Publishing House, Chennai. (2007)
6. Mustafa, A.C.M., Thenaruviyam Meillai, Oxford Print, Kurunegala. (2010)
7. Lareep Sulaiman, Cultural Songs of Dhangadathur, (2011)
8. Lourdes, T., Studies in Natar Jurisprudence, Baravel Publishing House, Tirunelveli. (1968)
9. Rameez Abdullah, East Sri Lanka Village, Mallikai Bandal, Colombo. (2001)
10. Shams, M.H.M., Lap of Valavai, s. Kotake Brothers Pvt., Colombo. (2014)

தமிழ்மணம் சர்வதேசத் தமிழ் ஆய்விதழ்
**Tamilmanam International Research Journal of Tamil Studies | ISSN(o): 3049-0723**
[Impact Factor: 9.47] Monthly, Peer-Reviewed, Refereed, Indexed Journal with IC Value : 86.87
**Volume - 1, Issue - 09, June - 2025**



DOIs: https://doi.org/10.63300/tmxxxxxxxxxx --:-- Research Paper

# Marriages and their Challenges Depicted in Modern Novels

**Dr. T. Kavitha** M.A. (Journalism), M.A. (Tamil), Ph.D.,
Assistant Professor, Hindustan Deemed University 9841636662
Email: kavi6662@gmail.com .

***Abstract:*** *Marriages serve as both a cultural hallmark of human civilization and a socially recognized institution. The Tolkāppiyam, an ancient Tamil treatise, references Sanskrit literature in classifying marriages into eight traditional forms: Brahma, Daiva, Arsha, Prajapatya, Gandharva, Asura, Rakshasa, and Paisacha. However, evolving with time, modern society predominantly witnesses two distinct types of marriages—arranged and love marriages.This article examines their portrayal in contemporary literature, delving into the associated complexities, conflicts, and societal challenges they depict.*

***Key Words:*** *Marriage, Love Marriage, Dowry, Masculine action, Same Caste*

# நவீன புதினங்கள் சித்தரிக்கும் திருமணங்களும் அவற்றின் சவால்களும்

**முனைவர் த.கவிதா,** எம்.ஏ (இதழியல்), எம்.ஏ(தமிழ்) பி.எச்.டி
உதவிப் பேராசிரியர், இந்துஸ்தான் நிகர்நிலைப் பல்கலைக் கழகம்
Email: **kavi6662@gmail.com**.

***Abstract:*** *திருமணம் என்பது மனித சமூக கலாச்சாரத்தின் ஒரு முக்கிய அடையாளம் மற்றும் உலகளவில் அங்கீகரிக்கப்பட்ட சமூக நிறுவனம் ஆகும். பண்டைய தமிழ் நூலான தொல்காப்பியம், சமஸ்கிருத நூல்களை மேற்கோள் காட்டி, திருமணங்களை எட்டு பாரம்பரிய வகைகளாகப் பிரித்துக் கூறியது: பிரம்மம், தெய்வம், ஆர்ஷம், பிரஜாபத்யம், காந்தர்வம், அசுரம், ராக்ஷஸம், பைசாசம். இருப்பினும், காலப்போக்கில் பெரிதும் மாறிவிட்ட நவீன சமூகத்தில், முக்கியமாக இரு திருமண வகைகள் காணப்படுகின்றன: ஏற்பாடு செய்யப்பட்ட திருமணங்கள் மற்றும் காதல் திருமணங்கள். இந்தக் கட்டுரை, நவீன இலக்கியங்களில் இந்த இரு சமகாலத் திருமண வகைகள் எவ்வாறு சித்தரிக்கப்படுகின்றன என்பதை ஆராய்ந்து, அவை காட்டும் சிக்கல்கள், மோதல்கள் மற்றும் சமூக சவால்களைப் பற்றி விவரிக்கிறது.*

***குறிப்பு சொற்கள்*** *: பழக்கவழக்கங்கள், திருமணம், காதல் திருமணம், வரதட்சணை, ஆண்மையச்செயல்பாடு, ஆடம்பரம், சுய சாதி*

## 1. அறிமுகம் (Introduction):

மனிதனின் பண்பாட்டு அடையாளமாகவும் சமூக அறிந்தேற்பாகவும் திருமணங்கள் விளங்குகின்றன.வடமொழி இலக்கியம் பிரமம், ஆரிடம், பிரசாபத்தியம், தெய்வம், கந்தர்வம், ஆசுரம், இராட்சதம், பைசாசம் என 8 வகையான திருமணங்களைக் குறித்து கூறுவதாகத் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது..கால மாற்றத்திற்கேற்றாற் போல் மாறி இன்று இருவகையான திருமணங்கள் நவீனச் சமூகத்தில் நடை பெற்று வருகிறது. அவை நிச்சயிக்கப்பட்ட திருமணங்கள் மற்றும் காதல் திருமணங்கள். இவை நவீன இலக்கியங்களில் எவ்வாறு சித்தரிக்கப்பட்டுள்ளன அவற்றில் இடம் பெறும் சிக்கல்கள் மற்றும் சவால்கள் குறித்து இக்கட்டுரை ஆராய்கிறது.

### திருமணம்

ஆணும் பெண்ணும் ஒருவருக்கொருவர் உறவுகொண்டு சேர்ந்து வாழ்வதற்கான அனுமதியாகத் திருமணம் விளங்குகிறது. “மனித இனம் தன் பாலியல் உந்துதலை நிறுவன அமைப்பிற்குள் நிறைவு செய்துகொள்ள ஏற்படுத்திய முறையே திருமணமாகும். உயர் பாலூட்டிகளிடமும் பிற கீழின விலங்குகளிடமும் பாலுறவு ஓர் உயிரியல் செயலாக மட்டுமே நிகழ்கின்றது. ஆனால் மனிதர்கள் அடிப்படையில் சமுதாய, பண்பாட்டு விலங்காதலால், அவ்வுயிரியல் செயலைத் திருமணம் என்னும்

நிறுவனச் செயலாக்கி அவர்கள் தம் உள-உயிரியல் உந்துதல்களை நிறைவு செய்து கொள்கின்றனர்."(பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.368). திருமணம் மூலமே குடும்பம் என்ற அமைப்பு நிறுவப்படுகிறது. எட்டு வகையான திருமணங்கள் குறித்து, தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. இதில் களவுமுறை என வழங்கப்படும் முறையையே தமிழர் பின்பற்றினர். பொருத்தமான ஆணும் பெண்ணும் மனம் ஒப்பி இணைந்து வாழும் மணமுறையே இம்மணமுறையின் வழக்கம். இத்தகைய திருமணம் தற்காலத்தில் இருவிதமாக நடைபெறுகிறது. நிச்சயிக்கப்பட்ட திருமணம், காதல் திருமணம் என இருவகை மணங்களும் இக்காலத்தில் நடைபெறுகின்றன.

**நிச்சயிக்கப்பட்ட திருமணம்**

பெற்றோர் மற்றும் உறவினர் கூடி நிச்சயித்து நடத்தும் திருமணம் நிச்சயிக்கப்பட்ட திருமணம் எனப்படுகிறது. நட்சத்திரவாசிகள் புதினத்தில் நித்திலன்-மீரா திருமணம் நிச்சயிக்கப்பட்ட திருமணமாக உள்ளது. நித்திலனுக்கும் மீராவுக்கும் பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்ட திருமணம் நடைபெறுகிறது. நிச்சயிக்கப்பட்ட திருமணத்தில் புறவயக் கூறுகள் மட்டுமே கருத்தில் கொள்ளப்படுகின்றன. இத்தகைய திருமணங்கள் சுய சாதிக்குள் மட்டுமே நடைபெறுகின்றன. சாதி பொருளாதாரநிலை, புற அழகு ஆகியவற்றை மட்டுமே அடிப்படையாகக் கொண்டு நடத்தப்படுகிறது.நட்சத்திரவாசிகள் என்ற புதினத்தில், "மீராவின் அப்பா மத்திய அரசு அதிகாரி. அவரின் வேலையின் பொருட்டு இந்தியாவின் பிரதான நகரங்கள் பெரும்பாலானவற்றில் வசித்து வந்தவர்கள் அவளின் குடும்பத்தினர். இவனுடைய குடும்பம் முழுக்க முழுக்க வியாபாரத்தைப் பின்னணியாகக் கொண்டது. அப்பா, சிற்றப்பா, மாமாக்கள் என அத்தனை பேரும் வியாபாரத்தில் இருந்தார்கள்." (கார்த்திக் பாலசுப்ரமணியன்., நட்சத்திரவாசிகள், ப.52)

இரு வேறுபட்ட பழக்க வழக்கங்களும் வாழ்க்கை முறையும் கொண்ட இரு குடும்பத்தார் இணைய முடிவெடுக்க காரணம் அவர்களது சாதியும், பொருளாதார நிலையும், அழகுமே என்பதை உறுதியாகக் கூறமுடியும். மீரா- நித்திலன் திருமணத்தில் மீராவின் புகைப்படத்தைப் பார்த்துச் சம்மதிப்பதும் முதல் சந்திப்பில் "முழுக்கை வைத்த சுத்த வெள்ளைச் சுடிதார். அதன்மேல் ஒரு பக்கமாய்ப் போடப்பட்டிருந்த மஞ்சள் நிற ஷால், அலையலையாய் நெற்றியின் முன்னால் வந்து விழுந்த கேசத்தை அவள் ஒதுக்கிய பாவத்தில் அதுவரை கற்பனை கூட செய்து பார்த்திராத தேவதையின் சாயல் இருந்ததை அவன் கவனிக்கத் தவறவில்லை." (மேலது, ப.54 )ஆனால் முற்காலத்தில் இருந்த அளவு கட்டுப்பாடுகள் நிச்சயிக்கபட்ட ஆணுக்கும் பெண்ணுக்கும் தற்காலத்தில் இல்லை. திருமண ஏற்பாடுகளில் பங்கு பெற்று அழைப்பிதழ், உணவு, அழைக்கவேண்டியவர், உடை எனப் பல்வேறு முடிவுகளை மணமகனும் மணமகளுமே முடிவு செய்கின்றனர். 'திருமணத்துக்குக் கூப்பிட வேண்டிய நபர்களைப் பட்டியலிட்டார்கள். இருவரும் சேர்ந்து நண்பர்களுக்குத் தருவதற்கான பத்திரிக்கை மாதிரியைத் தெரிவு செய்தார்கள்". (மேலது, ப.56) என்ற கூற்று, சான்று பகர்கிறது.

நிச்சயிக்கப்பட்ட திருமணங்களில் பெற் றோரின் கண்காணிப்பு உண்டு. திருமணமாகிச் சில மாதங்கள் கழிந்ததும் நித்திலனின் தாய் குழந்தை பெற்றுக்கொள்ள வலியுறுத்துவதும் விவேக்கிற்குத் திருமணம் நிச்சயிக்க முடிவு செய்யும் போது விவேக்கின் தாய் அத்தேர்வில் முடிவெடுக்கும் நிலையிலிருப்பதும் இவற்றை உறுதி செய்கின்றன. பொருளாதாரப் பின்புலம், சுயசாதிப் பாதுகாப்பு, பெற்றோர் மற்றும் உறவினர் உதவி போன்றவை இருந்தபோதும் இவ்வகைத் திருமணங்களில் சில சிக்கல்கள் உள்ளன. வரதட்சணை, ஆண் மையச் செயல்பாடு, பழக்கவழக்க முரண்கள், ஆடம்பரம் போன்றவற்றைக் குறிப்பிடலாம்.

**வரதட்சணை**

நிச்சயிக்கப்பட்ட திருமணங்கள் வரதட்சணையை அடிப்படையாகக் கொண்டே நிச்சயிக்கப்படுகின்றன எனக் கூற முடியும். தூப்புக்காரிப் புதினத்தில் மனோவின் அண்ணனுடைய திருமணம் மிகவும் ஆடம்பரமாக நடைபெறுகிறது. பெண் வீட்டிலிருந்து கிடைக்கும் பலன்களை முன்னிட்டு மனோவுக்கும் அதே வீட்டிலுள்ள பெண்ணைத் திருமணம் செய்கிறார்கள். அதே நேரத்தில் கனகம் தன் பெண்ணுக்குத் தன்னுடைய சாதியில் திருமணம் செய்ய இயலாமல் சிரமப்படுவதற்கு வரதட்சணையே காரணமாக உள்ளது. இதனால் வறுமையில் உழலும் கனகம் தன் மகள் யாராவது ஒருவனைக் காதலித்து மணமுடிக்க வேண்டும் என நினைப்பதிலிருந்து புரிந்து கொள்ள இயலுகிறது.

"ஒருத்தனுக்க கண்ணுக்கும் எம் பெண்ண தெரியிலேயே. ஒருத்தன் ஸ்னேகிச்சி கெட்ட வரமாட்டானான்னு எத்தனையோ நாளு நெனச்சிருப்பேன்." சாதிப்பிடிப்பும் பழைமையும் ஊறிப்போன ஒரு பெண் தன் மகள் ஒருவனைக் (மலர்வதி, தூப்புக்காரி, ப.24) காதலித்து மணமுடித்துக் கொண்டால் நன்றாக இருக்கும் என எண்ணுகிறாள் என்றால் வரதட்சணையின் கொடுமையை உணர இயலும்.

திருமணமே பெண்ணுக்கான குறிக்கோளாகக் கட்டமைக்கப்பட்டிருந்தாலும் அதை நிறைவேற்றுவதிலும் பல இன்னல்களைப் பெண்கள் சந்திக்கின்றனர். அதில் முக்கியமான பங்கு வகிப்பது வரதட்சணை. உயர்ந்தசாதி, தாழ்த்தப்பட்ட சாதி, பணக்காரன், ஏழை என வேறுபாடின்றி வரதட்சணைக் கொடுமைக்கு உள்ளாகின்றனர். பணக்காரர்கள் தங்கள் பகட்டை வெளிப்படுத்த வரதட்சணையை

வாங்கவோ கொடுக்கவோ செய்கின்றனர். இதை ஏழை மக்களும் கடைப்பிடிக்கின்றனர். தங்க நகைகள் பெண்களின் திருமணத்தில் மிகப்பெரிய பங்கு வகிக்கின்றன. ஆடம்பரமாக நகைகளை அணிந்து கொண்டு வரும் பெண்களைப் பார்த்து "ஒருத்திக்குக் கழுத்துல கிடக்கிறதுல ஒரு மாலை உண்டெண்ணா எனக்க குட்டிக்குக் கல்யாணத்துக்கே தெவையும் (மேலது, ப.40) என்னும் றோஸ்சிலியின் கூற்று இதன் பின்னணியைப் புலப்படுத்துகிறது. பணம் படைத்தவர்கள் பின்பற்றுவதால் ஏழைகளும் செய்தாக வேண்டிய கட்டாயத்தை இது உணர்த்துகிறது.

சுயசாதித் திருமணங்களே வரதட்சணைக்கான ஊற்றுக்கண்ணாக விளங்குகிறது. இப்ப இருக்கிய நெலமையில நம்ம சாதியில அஞ்சி பத்துன்னு லெட்சம் கேக்கிறானுங்க (மேலது, ப.38) என்ற கூற்று இதற்குச் சான்றாகிறது. வரதட்சணை கொடுக்க இயலாத ஏழைப் பெண்களின் திருமணம் வருடக் கணக்கில் தள்ளிப் போவதும் உண்டு. "ஏதாவது ஒரு பாவப்பட்டவன் கூடப் பிடிச்சு கொடுக்கவும் வழியத்து போயிட்டேனே" (மேலது, ப.84) என்ற கனகத்தின் ஆதங்கமும் "பதினேழு பேர் வந்து பெண் பார்த்துட்டு பெயி என்ன பிரயோசனம்? ஒருத்தனாவது கெட்ட வந்தானா...? பாவம் எங்குட்டி அதோட மனசெல்லாம் இப்ப மரத்துப் போச்சி" (மேலது, ப.79) என்ற கூற்றும் இதனை மெய்ப்பிக்கிறது. "அந்தஸ்து இல்லாத பல பெண்ணுங்க கல்யாண சந்தையில் பிறமத்தான்" (மேலது, ப.80 )என்ற றோஸ்சிலியின் கருத்து இங்கே சுட்டத்தக்கது. இதன் காரணமாகவே சமூகத்தில் உள்ளவர்களின் உதாசீனத்திற்கு ஆளாகிறார்கள். "மொவள யாருட்ட வேணும்னாலும் காய்(காசு) பிரிச்சு விடு. ஆனா என் மொவன விட்டுடுங்க" (மேலது, ப.80)என்ற கூற்று இப்பெண்கள் நிலையைப் பதிவு செய்கிறது.

நாகரிக வளர்ச்சி பெரிய அளவில் எட்டாத கிராமங்களில் பொருளாதார நிலையை மட்டுமே கருத்தில் கொள்கிறார்கள். புற அழகு குறித்து அக்கறை கொள்வதில்லை என்பதைக் கால்கள் புதினம் வழியாக அறிந்து கொள்ள இயலும். "ஷீனா தனக்கு மாப்பிள்ளை பார்த்திருப்பதாய் ஆர்வமாய்ச் சொன்னாள். குவைத்தில் ஒரு பள்ளிக் கூடத்தில் கணித ஆசிரியர். அவள் சொன்னாள் 'என்னை விட கொஞ்சம் குள்ளம். போட்டோ பார்த்து நான் கெஸ் பண்ணினது தான்"(ஆர்.அபிலாஷ், கால்கள், ப.378) வரதட்சணைக் கொடுமைகளால் பெண்கள் கொடுமைப்படுத்தப்படுவதும் கொலை செய்யப்படுவதும் தொடர்ந்து நடந்த வண்ணமே உள்ளது. "ஷீனாவின் அக்காவுக்குப் போன வருடம் கல்யாணம் ஆனது. இரண்டே மாதத்தில் கேஸ் வெடித்து இறந்து போனாள். தற்கொலை என்று பத்திரிகையில் செய்தி வந்தது. ஆனால் அது வரதட்சணைக் கொடுமையின் விளைவான கொலை என்று ஷீனாவின் அப்பா வழக்குத் தொடுத்தார்." (மேலது, ப.378) வரதட்சணை, படித்த பெண்களையும் பாமரப் பெண்களையும் ஒரே போல பாதிக்கிறது என்பது தெரியவருகிறது. பெண் அடக்குமுறை, சுயசாதித் திருமணம் போன்றவை நெகிழ்வுத் தன்மை அடையும் போது வரதட்சணையால் பெண்கள் பாதிக்கப்படுவது குறையலாம்.

சேவல் கட்டில் சேவுகன் மற்றும் அவன் மனைவி, போத்தைய்யா மற்றும் அவர் மனைவி, கால்கள் புதினத்தில் மதுவின் பெற்றோர், பேராசிரியர் மற்றும் அவர் மனைவி, நட்சத்திரவாசிகள் புதினத்தில் வரும் விவேக்கின் பெற்றோர் எனச் சென்ற தலைமுறையைச் சேர்ந்தோர் வாழ்வில் விட்டுக் கொடுத்தல், சகித்துக் கொள்ளுதல் போன்றவற்றின் வாயிலாகக் குடும்ப அமைப்பு, கேள்விக்குள்ளாகாமல் பார்த்துக் கொள்கின்றனர். எனவே வரதட்சணைப் பிரச்சினையை இவர்கள் அனுபவிப்பதில்லை. அல்லது அதன் தீவிரத்தைக் கடந்து விட்டனர் என்ற முடிவுக்கு வர இயலுகிறது. அதாவது திருமணமான ஆரம்ப காலத்திலேயே இப்பிரச்சினை பெரிய பாதிப்பை ஏற்படுத்துகிறது.

**பழக்க வழக்க முரண்கள்**

ஒவ்வொருவடைய வாழ்விலும் அவரவருக்கான தனித்த பழக்கவழக்கங்கள் இடம் பெற்றிருக்கும். இதுவே அவர்களின் அடையாளமாகவும் வரித்துக் கொள்ளப்படும். இந்த பழக்கவழக்கங்கள் சாதி, சமயப் பழக்க வழக்கங்கள், அன்றாடப் பழக்கவழக்கங்கள் என இருவகைப்படும். இந்தப் பழக்க வழக்கங்களில் ஏற்படும் முரண்களினால் குறிப்பிட்ட ஆணுக்கும் பெண்ணுக்கும் ஏற்படும் சிக்கல்களே இன்றைய திருமண முறிவுக்கு முக்கியக் காரணமாகத் திகழ்கிறது. "பாத்ரூமில் போய் முகத்தைக் கழுவிட்டு நிமிர்ந்ததும் அங்கே உள்ளாடைகள் வரிசையாக அணிவகுத்துத் தொங்கிக் கொண்டிருந்தன. அந்த வாரத்துக்கான மொத்தமும் அங்கே அழுக்காய்த் தொங்கிக் கொண்டிருந்தன. இரண்டு நாட்களாய் அவற்றைக் கவனித்து வந்தவள் நேற்று அவற்றைப்பற்றிப் கூறியும் அப்படி அப்படியே அவை தொங்கிக் கொண்டிருந்தன." (கார்த்திக் பாலசுப்ரமணியன், நட்சத்திரவாசிகள், ப. 76) இது நிச்சயிக்கப்பட்ட திருமணம் முடித்த மீரா-நித்திலன் வீட்டின் ஒரு நடைமுறை. நித்திலன் தன் அன்றாட வேலைகளைக் கூட தானே செய்து கொள்ள மறுக்கிறான். இது கணவன் மனைவி இருவருக்குமான வாக்குவாதத்தை ஏற்படுத்தும் காரணியாக அமைகிறது. மீரா நகரத்துப் பின்புலத்தில் பிறந்து வளர்ந்ததால் நடைமுறைகளில் தெளிவும் ஒழுங்கும் நிறைந்தவளாக இருக்கிறாள். ஆனால் நித்திலன் அதற்கு நேரெதிரானவனாக இருக்கிறான். "அழுக்கு டீ சர்ட் சோபாவில் கழற்றி போடப்பட்டிருந்தது. ஷூ ஸ்டாண்டில் பழைய சாக்ஸ், சோபாவில் ஈரத்துடன், பரப்பிப்போடப்பட்டிருந்த துண்டு, இரண்டு அறைகளிலும் அணைக்கப்படாத மின்விசிறிகள், டியூப் லைட்டுகள், சாப்பாட்டு மேசையின் மேல் வைக்கப்பட்ட சட்னியுடன் காய்ந்துபோன தட்டு, கண்ணாடியின் முன் கீழே கிடந்த சீப்பு என எதிலும் ஒழுங்கைக் கடைப்பிடிக்காதவனாக இருக்கிறான்." (மேலது, ப.76) இதற்குக் காரணம் இவர்கள் வளர்ந்த பின்புலமே. "உத்தியோகஸ்தர்களுக்கே உரித்தான முறையான திட்டமிடல், திருந்திய பேச்சு, குறித்த நேரத்தில் நிகழ்வு என்று ஒருபக்கம் வியாபாரிகளுக்கு உண்டான திடீர்

மாற்றங்கள், அதிரடி யோசனைகள், குழைவுப் பேச்சு என்று மறுபக்கம். வெவ்வேறு பழக்கவழக்கங்கள் வெவ்வேறு மனப்போக்கு" (மேலது, ப.53)என்ற நிலையைக் காணமுடிகிறது.

இந்த முரண்களைத் திருமணம் செய்ய நிச்சயிக்கும் போது யாரும் கருத்தில் கொள்வதில்லை. முதலில் இதெல்லாம் அவளுக்குப் பெரிய குறையாகத் தெரியவில்லை. சின்னச் சின்ன பழக்கவழக்கங்கள் தானே, சொல்லித் திருத்தி விடலாம் என்று நினைத்திருந்தாள்" (மேலது, ப.76) இதிலிருந்து பழக்கவழக்க முரண்களை முக்கியமானதாக யாரும் கருதுவதில்லை என்பது புலனாகிறது.

**ஆண் மையச் செயல்பாடு**

நிச்சயிக்கப்பட்ட திருமணங்களில் ஆண் மையச் செயல்பாடுகளே வழக்கமாக கடைப்பிடிக்கப்படுகிறது. திருமணத்திற்குப் பின் பெண்ணின் குலதெய்வம் வழிபடப்படாமல் ஆணின் குலதெய்வமே பெண்ணுடையதாக மாறுவதையும், ஆணின் குடும்ப நிகழ்வுகளே பெண்ணுடைய குடும்ப நிகழ்வுகளாகக் கருதப்படுவதையும் எடுத்துக்காட்டாகக் கூறலாம். குறிப்பாக பெண்ணின் பெற்றோர் இறப்பினும் கூட துக்கம் கடைப்பிடிக்கத் தேவையில்லை போன்ற நடைமுறைகள் நிச்சயிக்கப்பட்ட திருமணங்களில் ஆண் மையச் செயல்பாட்டை உறுதிசெய்பவை. இச்செயல்பாடுகள் ஒருவருக்குள் பதிந்து போகும் போது அவற்றை மாற்றிக் கொள்ள இயலாமல் சிரமப்படுகின்றனர்.

"அம்மாவுக்கு மட்டுமே தெரியும், எந்தப் பொருள் எங்கே இருக்கிறது என்று. அங்கே ஆண்கள் அடுக்களையில் நுழைவது ஒரு பாவச்செயல் போலவே கருதப்பட்டு வந்தது, வருகிறது. சாப்பிட்ட தட்டைக் கூட எடுத்து வைக்க வேண்டியதில்லை. சாப்பிட்ட தட்டிலேயே கையைக் கழுவிக் கொள்வதே அங்கு எல்லோருக்கும் வழக்கம்." (மேலது, ப.107) இத்தகைய சூழலில் வளரும் ஒருவரால் பெண்களிடம் ஏற்பட்டுள்ள முன்னேற்றங்களை, மாற்றங்களை ஏற்றுக்கொள்ள முடிவதில்லை. அதனைப் பிற்போக்குத்தனம் என உணர விடாமல் தடுப்பது நிச்சயிக்கப்பட்ட திருமணங்களில் நிலவும், கடைப்பிடிக்கப்படும் ஆண்மையச் செயல்பாடே ஆகும்.

**ஆடம்பரம்**

திருமணங்களில் தவிர்க்க இயலாத, அதேநேரத்தில் பிறருக்காக மட்டுமே நிகழ்த்தப்படும் ஒன்று ஆடம்பரத் திருமணங்கள். இருவீட்டாரும் கூடிப் பேசி மிக எளிமையாக ஒரு திருமணத்தை நடத்துவதை நிச்சயிக்கப்பட்ட திருமணங்களில் யாரும் விரும்புவதில்லை. தங்களுடைய செல்வாக்கு, செல்வச்செழிப்பு, அதிகாரம், ஆளுமை, பதவி போன்றவற்றைப் பறைசாற்றும் வாய்ப்பாகவே திருமணங்களை நடத்துகிறார்கள். இதனால் அதிகப் பொருட்செலவு ஏற்படுவதுடன் பெண்ணை எப்போதும் உடைமைப் பொருளாக வரித்துக் கொள்வதும், அதன் நீட்சியாக வரதட்சணை கேட்பதும், ஆண்மையச் செயல்பாட்டுக்கு வழிவகுப்பதும் ஆடம்பரச் செலவுகளுடன் நடத்தப்படும் திருமணங்களே.

"திருமண மண்டபத்தில் ஆரவாரம் நிரம்பி வழிந்தது. உறவினர் வருகை, ஊராரின் நெருக்கம் எனக் கூட்டம் முண்டியடித்தது. வண்ண விளக்குகளின் ஒளி வெள்ளம், மிதமான இசை, வாரி ஊத்திய வாசனை திரவியங்களின் மணம் என அந்தப் பகுதி கொண்டாட்டத்தில் மிதந்தது. பெண்களில் பலர் தங்கள் வியர்வை நனைத்த உடலில் நகைகளாக வலம் வந்து கொண்டிருந்தார்கள். "இல்லாதவர்களை இழிவுபடுத்துவது போன்று பல பெண்கள் நகை விலை ஏற்றம் ஆனாலும் நகைகளைச் சுமந்து கொள்வோம் என்று சுமந்து திரிந்தனர்."(மலர்வதி, தூப்புக்காரி, ப.39-40)இந்த நடைமுறையே சமூக நடைமுறையாகப் பின்பற்றப்படுவதால் ஏழைகள் மிகுந்த சிரமத்திற்குள்ளாகின்றனர். திருமணம், பெண் குழந்தைகள் போன்றவை சுமையாகக் கருதப்படுவதற்கு இதுவே காரணமாகிறது. "இங்க பிச்சை எடுக்கறவனும் மண்டபத்தில் தான் கல்யாணம் வைக்கிறான் கௌரவம் பார்த்துக்கிட்டு. அதலயும் பாட்டுக் கச்சேரி வேற கூடவே" (வீரபாண்டியன், பருக்கை, ப.109) என்பதிலிருந்து ஆடம்பரத் திருமணங்களின் தாக்கத்தை அறிந்து கொள்ள இயலும்.

திருமணங்களில் உணவு வீணடிப்பு முக்கியமாகக் கருத்தில் கொள்ள வேண்டிய தேசிய இழப்பு எனக் கூறலாம். "நம்ம இந்தியாவில் ஒரு வருடத்திற்கு வீணடிக்கப்படும் உணவின் மதிப்பு 58000 கோடின்னு சொல்லுது"(மேலது, ப.191)என்று வீரபாண்டியன் பதிவு செய்கிறார்.
இவ்வுணவுப் பண்டங்கள் ஏழைகளுக்கு ஒருபோதும் உதவுவதில்லை. "எம்புடு மீதியா களஞ்சி எலையளுல இருக்கு. எம்புடு கூட்டு, கறி ,சோறு ,பாயிசம் பழமுன்னு களஞ்சி இலையில இருக்கு. என் அம்ம தின்ன இருந்தவுடனே எழுப்பி விட்டானே... இங்க எம்புடு ஆகாரம் எச்சியா கெடக்கு"(மலர்வதி, தூப்புக்காரி,ப.45) இவ்வளவையும் வீணாக்குகிறார்கள் என்பதைத் தூப்புக்காரிப் புதினமும் பருக்கைப் புதினமும் பதிவுசெய்கின்றன. "தூரப் போடுற ஆகாரம் கெடச்சா கூட எத்தனையோ பேர் வாழ்ந்துருவாங்க. தூர எறிஞ்சி கழிவாப் போனாலும் கூட பசிக்குற மனுசனுக்குக் கொடுக்காத துஷ்டனுவ வாழுற ஒலகம் இது." (மேலது, ப.45 )

நிச்சயிக்கப்பட்ட திருமணங்கள் புறவயமான காரணிகளை முன்னிட்டு நடைபெறுவதால் கணவன் மனைவி உறவு என்பது பொருளாதார அடிப்படையில் அமையும் உறவாக ஆகிவிடுகிறது என்பது தரவுகளின் அடிப்படையில் புலப்படுகிறது.

.

**காதல் திருமணம்**

இன்று தமிழர்களிடையே இருக்கும் மற்றொரு மணமுறை காதல் திருமணம். ஆண், பெண் சுய விருப்பத்தின் பெயரில் செய்து கொள்ளும் திருமணம் சாதி, மத, பொருளாதார அளவீடுகளைத் துறந்ததாக இருக்கும். ஆனால் இன்றைய காலகட்டத்தில் காதல் திருமணங்களையும் மேற்சொன்ன காரணிகள் பாதிக்கின்றன.

**நம்பிக்கைத் துரோகம்**

காதல் திருமணங்களில் மிகப்பெரிய சிக்கலாக நம்பிக்கைத் துரோகம் திகழ்கிறது. குடும்பங்களின் பங்களிப்பின்றி, தனிப்பட்ட ஆணும் பெண்ணும் மட்டுமே முடிவு செய்வதால் எளிதாக இப்பிரச்சினைக்கு ஆளாகிறார்கள். நட்சத்திரவாசிகள் புதினத்தில் இடம்பெறும் அர்ச்சனா, அருணைக் காதல் திருமணம் செய்கிறாள். வீட்டினர் எதிர்ப்போ பிற காரணிகளோ இவர்களுக்குத் தடையாக இல்லை. அருண் வேறொரு பெண்ணுடன் தொடர்பு வைத்துக் கொண்டதால் அர்ச்சனா, அருணைப் பிரிகிறாள்.தூப்புக்காரிப் புதினத்தில் மனோவை நம்பி காதலிக்கும் பூவரசியும் ஏமாற்றப்படுகிறாள். காதல் என்ற உணர்வை மட்டுமே அடிப்படையாகக் கொண்டு உறவைத் தொடங்கும்போது திருமணம் என்ற பொறுப்பில் தாக்குப்பிடிக்கத் திணறுகிறார்கள்.

**குடும்பப் பாதுகாப்பின்மை**

காதல் திருமணம் செய்து கொள்பவர்களுக்கு வீடுகளில் போதிய உதவியும் அங்கீகாரமும் கிடைப்பதில்லை. எனவே திருமணத்திற்குப் பிறகான பொறுப்புகளைச் சமாளிப்பது இத்தம்பதியினருக்குச் சவாலாக அமைவதை சாஜு கதாப்பாத்திரம் வழி அறியமுடிகிறது. "ஒரு சில சமயம் பேசாம ஒரேயடியா ஊர்ப் பக்கமே திரும்பிப் போய் விடலாமா என்று கூட யோசிக்கிறேன். காதல் கல்யாணத்தால அங்கயும் போயி நிக்க முடியாது"[24] (கார்த்திக் பாலசுப்ரமணியன், நட்சத்திரவாசிகள், ப.197) பனிமலர் என்ற கணினித்துறையில் வேலை பார்க்கும் பெண்ணும் காதல் திருமணம் செய்ததால் பெற்றோர் ஒத்துழைப்பின்மையால் குழந்தை வளர்ப்பில் கவனம் செலுத்த இயலாத நிலையில் தத்தளிப்பதையும் நட்சத்திரவாசிகள் புதினம் பதிவு செய்துள்ளது.

**பொருளாதாரச் சுதந்திரம்**

பொருளாதாரச் சுதந்திரமும் தன்னம்பிக்கையும் நிறைந்த பெண்கள் திருமணம் தோல்வியுறும்போது மணமுறிவை ஏற்கின்றனர். ஆனால் நிச்சயிக்கப்பட்ட திருமணங்களில் சமூக அழுத்தமும் குடும்ப அழுத்தமும் ஆண் பெண் மீது சுமத்தப்படுவதால் மணமுறிவை நாடுவதில் தயக்கம் காட்டுகின்றனர். கால்கள் புதினத்தில் இடம்பெறும் வீனாவின் சகோதரி வரதட்சணைக் கொடுமையால் கொலை செய்யப்படுகிறாள். ஆனால் அதற்கு முன்பே அவ்வுறவிலிருந்து வெளியேறும் முடிவை அப்பெண்ணோ அவளின் பெற்றோரோ எடுக்கவில்லை என்பது இங்கே கருத்தில் கொள்ளத்தக்கது.

நிச்சயிக்கப்பட்ட மணம் புரிந்த, சென்ற தலைமுறை, குடும்ப வன்முறைக்கு ஆளானாலும் மண முறிவை நாடாத நிலையினையும் யுவ புரஸ்கார் புதினங்கள் வழியாக அறிந்து கொள்ள முடிகிறது. போத்தைய்யா தன் மனைவியை அடித்துத் துன்புறுத்தினாலும் கால்கள் புதினத்தில் மதுவின் தந்தை அவளது தாயைத் துன்புறுத்தினாலும் அவ்வுறவிலிருந்து வெளியேறும் எண்ணமற்றவர்களாகவே இப்பெண்கள் படைக்கப் பட்டுள்ளனர். நித்திலனின் தாயும் சுரண்டலுக்கு ஆட்படும்போது, தன் உரிமையைக் கூட அறியாதவளாகவே இருக்கிறாள்.

காதல் திருமணம் செய்ய விரும்பும் ஆண் பெண் இடையே பொருளாதார நிலை மிகப் பெரிய பங்கு வகிக்கிறது. மனோ, பூவரசி இருவரும் ஒருவரை ஒருவர் விரும்பினாலும் ஒரே சாதியைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும் இருவருக்கும் இடையேயான பொருளாதார ஏற்றத்தாழ்வு காதலுக்குத் தடையாக இருப்பதைக் காண முடிகிறது. படிப்பு, அழகு, பணம் என்கிற தகுதிகள் அவளிடம் இருந்திருந்தால் நான் கோழையாகியிருக்க மாட்டேன். அப்பாட்ட தைரியமா பேசி இருப்பேன்” மலர்வதி, தூப்புக்காரி, ப.88 )என்ற மனோவின் சிந்தனை இதனை உறுதிப்படுத்துகிறது. இதே நிலையை நட்சத்திரவாசிகள் புதினத்தில் வரும் விவேக்கின் காதலிலும் காணமுடிகிறது. அவன் விரும்பிய பெண்ணிடம் காதலை வெளிப்படுத்த விரும்பும் போது அவன் பொருளாதார நிலை மோசமாக இருப்பதாலேயே பின் வாங்குகிறான்.

**துணை நூற்பட்டியல்**:


1. *அபிலாஷ். கால்கள். உயிர்மைப் பதிப்பகம், சென்னை-18, 2011.*
2. *கார்த்திக் பாலசுப்ரமணியன். நட்சத்திரவாசிகள். காலச்சுவடு, நாகர்கோயில், 2019.*
3. *தவசி.ம. சேவல்கட்டு. புதுமைப்பித்தன் பதிப்பகம், சென்னை-83, 2009.*
4. *பக்தவத்சல பாரதி. பண்பாட்டு மானிடவியல். அடையாளம், புத்தாநத்தம், திருச்சி-310, 2018.*
5. *மலர்வதி. தூப்புக்காரி. மதி புக்ஸ், வெள்ளிகோடு, கன்னியாகுமரி-167, 2017.*
6. *வீரபாண்டியன். பருக்கை. பரிசல் புத்தக நிலையம், சென்னை-05, 2019*


**References:**


1. *Abhilash. Kalkal. Uyirmmai Publications, 2011.*
2. *Bharathi, Bhakthavatsala. Panpaattu Maanidaviyal. Adaiyalam, 2018.*
3. *Karthik Balasubramanian. Natchathiravasigal. Kalachuvadu, 2019.*
4. *Malarvathi. Thooppukkari. Mathi Books, 2017.*
5. *Thavasi M. Sevalkattu. Pudhumaippithan Publications, 2009.*
6. *Veerpandiyan. Parukkai. Parisal Book House, 2019.*

தமிழ்மணம் சர்வதேசத் தமிழ் ஆய்விதழ்
**Tamilmanam International Research Journal of Tamil Studies | ISSN(o): 3049-0723**
[Impact Factor: 9.47] Monthly, Peer-Reviewed, Refereed, Indexed Journal with IC Value : 86.87
**Volume - 1, Issue - 09, June - 2025**



DOIs: https://doi.org/10.63300/tmxxxxxxxxxx --:-- Research Paper

# GRAPH THEORY – TREES

**Dr. K.Sangavai**
Professor, Department of Mathematics, PSG College of Technology
Coimbatore – 641004
Email: sks.maths@psgtech.ac.in

***Abstract:*** *Education in the mother tongue plays a vital role in a nation's educational development. It ensures inclusive access to learning for all segments of the population and contributes to raising overall educational standards. Learning in one's native language enhances comprehension, especially of complex concepts. This is particularly true in fields such as engineering and technology, where understanding in the mother tongue can significantly aid practical application. In this article, we introduce the fundamental concepts of Graph Theory—a branch of applied mathematics with wide-ranging applications—presented in our native language, Tamil. We also explore a special class of graph theory: Trees.*

***Key Words:*** *Education, Mother Tongue, Tamil Language, Applied Mathematics, Graph Theory, Trees*

# வரைபடக்கோட்பாடு - மரங்கள்

**முனைவர் கி. சங்கவை,**
பேராசிரியை, கணிதத்துறை
பூ.சா.கோ.தொழில்நுட்பக்கல்லூரி, கோயம்புத்தூர் – 641004
Email: sks.maths@psgtech.ac.in

***Abstract:*** *தாய்மொழி வழிக் கல்வியானது ஒரு நாட்டின் கல்வி வளர்ச்சிக்கு மிகவும் அவசியமானது. இது ஒரு நாட்டின் மக்கள்தொகையின் அனைத்து பிரிவினருக்கும் கல்வி வாய்ப்புகளை வழங்க உதவுகிறது. தாய்மொழி வழிக் கல்வியை ஊக்குவிப்பதன் மூலம், ஒரு நாடு தனது கல்வித் தரத்தை மேம்படுத்தலாம். தாய்மொழியில் கற்கும் கல்வியில் புரிதல் அதிகம். அதுவும் பொறியியல் மற்றும் தொழில்நுட்பக்கல்வியை தாய் மொழியில் கற்கும் போது அதனைப் பயன்பாட்டிற்கு கொண்டுவருவது மிகவும் எளிது. அந்த வகையில் பல்வேறு துறைகளில் பயன்பாடுகள் அதிகம் கொண்டதும் , பயன்பாட்டுக் கணிதத்தின் ஓர் உட்பிரிவானதுமான வரைபடக்கோட்பாடு மற்றும் அதன் சிறப்பு வகுப்பான மரங்கள் குறித்தும் நம் தாய்மொழியாம் தமிழ் வழி இக்கட்டுரையில் அறிவோம்!.*

***குறிப்பு சொற்கள்*** *: பழக்கவழக்கங்கள், திருமணம், காதல் திருமணம், வரதட்சணை, ஆண்மையச்செயல்பாடு, ஆடம்பரம், சுய சாதி*

## 1. முன்னுரை:

எந்த ஒரு பொருளின் அல்லது அறிவின் உண்மையான மதிப்பு, அது எவ்வளவு அரியது அல்லது நுட்பமானது என்பதில் மட்டுமல்ல. நாம் எவ்வாறு திறம்படப்பயன்படுத்தி அதனால் எத்தகைய நன்மைகளை அடைகிறோம் என்பதில்தான் உள்ளது. பயன் படுத்தப்படாத வாள் கூட தன் கூர்மையை இழந்து விடுகிறது. அறிவும் அப்படித்தான். அன்றாட வாழ்க்கையில் ஏற்படும் சிக்கல்களைத்தீர்க்கும் போது தான் அது முழுமையடைகிறது.

**கணிதம்:**

கணிதம் என்பது அளப்பரிய மதிப்புடைய ஒரு துறையாகும். அதன் பயன்பாடு இல்லாத இடமே இல்லை என்று சொல்லலாம். கணிதம் என்பது வெறும் பாடம் மட்டும் அல்ல, அது சிந்திக்கவும், தீர்வு காணவும், முறையான முடிவுகளை எடுக்கவும் உதவும் முக்கியமான கருவியாகும். இது நம் அன்றாட வாழ்வியல், அறிவியல், தொழில்நுட்பம், பொருளாதாரம், மற்றும் புள்ளியியல் உள்ளிட்ட பல துறைகளில் முக்கியப் பங்கு வகிக்கிறது. குறிப்பாக வணிகம், பொறியியல், கணினி அறிவியல், மற்றும் கட்டடக் கலை போன்றவை கணிதத்தின் பயன்பாட்டிற்கு சிறந்த உதாரணங்களாகும். இதனால், கணிதம் என்பது ஒரு பாடமல்ல, வாழ்க்கையின் அங்கமாகும்.

**பயன்பாட்டு கணிதம் (Applied Mathematics):**

பயன்பாட்டு கணிதம் என்பது கணிதக் கோட்பாட்டிற்கும் நடைமுறை பயன்பாட்டிற்கும் இடையிலான பாலமாகும். பொறியியல், இயற்பியல், சுகாதாரம், சுற்றுச்சூழல் ஆய்வுகள், பொருளாதாரம் மற்றும் நிதி போன்ற துறைகளில் உள்ள உறுதியான சிக்கல்களைத் தீர்க்க நிறுவப்பட்ட கணிதக் கருத்துக்களை எடுத்து அவற்றைப் பயன்படுத்துவதை இது உள்ளடக்கியது. கணிதக் கருத்துக்களை அவர்களின் சொந்த நலனுக்காக ஆராய்வது மட்டுமல்லாமல், நம்மைச் சுற்றியுள்ள உலகத்தைப் புரிந்துகொள்ளவும் மனித வாழ்க்கையின் பல்வேறு அம்சங்களை மேம்படுத்தவும் கருவிகளாகப் பயன்படுத்துவதே இதன் குறிக்கோள்.

பயன்பாட்டு கணிதத்தின் ஒரு மூலக்கல்லானது கணித மாதிரியாக்கம் (Mathematical Modelling) ஆகும், இது உலக அமைப்புகளின் நடத்தையை விவரிக்க கணித மொழியைப் பயன்படுத்தும் ஒரு முறையாகும். கணித மாதிரிகள் சில நேரங்களில் எளிய நேரியல் சமன்பாடுகள் அல்லது வடிவியல் வரைபடங்களாக இருக்கலாம்; சில வேளைகளில் கணக்கீட்டு முறைகள் அல்லது அவற்றின் தீர்வுக்கு தேவையான பெரிய தரவுத் தொகுப்புகள் அடங்கிய சிக்கலான உருவகப்படுத்துதல்களாகவும் இருக்கலாம். இக்கட்டுரையில் வடிவியலை அடிப்படையாகக்கொண்டதும், பயன்பாட்டு கணிதத்தின் ஒரு முக்கிய உட்பிரிவானதுமான “வரைபடக்கோட்பாடு” (Graph Theory) பற்றியும் அதன் ஒரு சிறப்புப்பிரிவான மரங்கள் குறித்தும் அறிந்து கொள்ள இருக்கிறோம்.

**2. வரைபடம்(GRAPHS):**

‘வரைபடம்’ என்றால் பெரும்பாலானோர் நினைவுக்கு வருவது கார்ட்டீசியன் வரைபடங்கள் தான். ஆனால், வரைகலை கொள்கையில் ‘வரைபடம்’ என்பது மாறுபட்ட ஒரு பொருளாக கருதப்படுகிறது. இங்கு, இது கருத்தில் கொள்ளப்படும் பொருட்களுக்கிடையேயான இணைவை பிரதிபலிக்கும் ஒரு கணித அமைப்பாக (Mathematical Structure) புரியப்படுகிறது. இந்த வகையில், ஒரு வரைபடம் வலைப்பின்னலின் (Networks) காட்சி பிரதிநிதியாகவும் பார்க்கப்படுகிறது."

**வரைபடக்கோட்பாட்டின் வரைபட வரையறை:**

வரைபடம் என்பது முனைகள் எனப்படும் புள்ளிகள் மற்றும் அவற்றை இணைக்கும் கோடுகளின் (வரிப்பிரிவுகள்) தொகுப்பாக வரையறுக்கப்படுகிறது. இரண்டு புள்ளிகளுக்கு இடையே தொடர்பு அல்லது உறவு இருப்பின், அவற்றை இணைக்கும் ஒரு வரிப்பிரிவு அங்கே அமையும்.

"எடுத்துக்காட்டாக, சமீபகாலமாக அதிக ஆர்வத்தை பெற்ற ஒரு துறையாக இருக்கும் சமூக ஊடகத் துறையை (Social Media) எடுத்துக் கொள்ளலாம். இதை நாம் என்றாவது கணிதப்பார்வையில்

நோக்கி இருக்கிறோமா? அது கூட கணிதத்தின் ஒரு வடிவமே! இத்துறையை நாம் ஒரு வரைபடமாக காட்சி படுத்த முடியும். சமூக ஊடகத் துறையில் உள்ள நபர்களை புள்ளிகளாகக் கொண்டு, 'தோழமை' என்பதை உறவாகக் கொண்டால், தோழர்களாக இருக்கும் இருவர் இடையே ஒரு இணைப்புக் கோடு வரையலாம். இதையே சமூக ஊடக வரைபடம் என்று அழைக்கலாம். உதாரணத்திற்கு நாம்

**அ = {கவின், இனியா, அமுதன், ஓவியா, யாழினி }**

- என்பதை ஊடகத் துறையில் பணிபுரியும் சிலரைக்கொண்ட அணியாகக் கொள்வோம். பின்வரும் வரைபடம் அவர்களுக்கு இடையே உள்ள “தோழமை” என்ற உறவை மாதிரிப் படுத்துகிறது.




**படம் 1: ஊடகத்துறை வரைபடம்**

இந்த வரைபடத்தின் வாயிலாக நாம் அறியும் பல செய்திகளில் ஒன்று, அமுதன் எனும் நபர் குழுவில் உள்ள அனைத்து நபர்களுடன் தோழமையில் உள்ளார். இரண்டு, இனியாவும் ஓவியாவும் கவினுக்கு நேரடி தோழிகள் அல்ல. இது போன்ற இன்னும் பல செய்திகளை இந்த வரைபடம் கொடுக்கின்றது.

### 3. வரை படங்களின் சிறப்பு வகுப்புகள் - மரங்கள்:

வரைபடக்கோட்பாட்டின் கீழ் வரைபடங்கள் சில சிறப்பு வகுப்புகளாகக் கருதப்படுகிறது. இவையே வரைபடக்கோட்பாட்டின் அடித்தளமாக அமைகிறது. வரைபடக்கோட்பாட்டின் ஆய்வின் போது கிடைக்கப்பெறும் முடிவுகள், தேற்றங்கள் ஆகியவை, முதலில் இந்த சிறப்பு வகுப்பு வரைபடங்களுக்கே ஆராயப்பட்டு மெய்ப்பிக்கப்படும். பின்னரே அவை பொதுமைப்படுத்தப்பட்டு ஆய்வறிக்கைகளாக வெளியிடப்படும். அத்தகைய வரைபடச் சிறப்பு வகுப்புகளில் முக்கியமான ஒன்று “மரங்கள்” (TREES). இக்கட்டுரையில் அவற்றின் பண்புகள் மற்றும் பயன்பாடுகள் குறித்து அறிய உ ள்ளோம்.

**3.1 வரையறை:** ஒரு மரம் என்பது சுழற்சிகள் இல்லாமல் இணைக்கப்பட்ட வரைபடம் ஆகும். மரத்தின் ஓரங்கள் கிளைகள் எனப்படும். **n** புள்ளிகள் கொண்ட மரவரைபடம் $T_n$ என்று குறிக்கப்படுகிறது. எடுத்துக்காட்டாக, பின்வரும் படத்தில் இருக்கும் அனைத்தும் மரங்களே. இங்கு ஆறுக்கும் குறைவான புள்ளிகளைக் கொண்ட அனைத்து மரங்களும் காட்டப்பட்டுள்ளன.



**படம் 2: மரங்கள் வரைபடம்**

**3.2 மரங்களின் பண்புகள்:**

ஒரு மரம் என்ற வரைபடம் பின்வரும் சமமான நிபந்தனைகளில் ஏதேனும் ஒன்றைப் பூர்த்தி செய்கிறது:

- ஒரு இணைக்கப்பட்ட சுழற்சிகள் இல்லா வரைபடம்.
- T சுழற்சிகள் இல்லா வரைபடம், மேலும் T உடன் ஏதேனும் வரிப்பிரிவு(Edge) சேர்க்கப்பட்டால் ஒரு எளிய சுழற்சி(Simple cycle) உருவாகும்.
- T ஒரு இணைக்கப்பட்டுள்ள வரைபடம், ஆனால் T இலிருந்து ஏதேனும் ஒற்றை வரிப்பிரிவு (Edge) அகற்றப்பட்டால் துண்டிக்கப்படும்.
- T ஒரு இணைக்கப்பட்ட வரைபடம் மற்றும் முழுமையான வரைபடம் $K_3$ இதன் சிறிய பகுதியாக அமையாது.
- T இல் உள்ள எந்த இரண்டு புள்ளிகளையும் ஒரு தனித்துவமான (ஒற்றை) எளிய பாதை மூலம் இணைக்க முடியும்.
- T இல் n புள்ளிகள் இருந்தால் பின்வரும் நிபந்தனைகளும் உண்மை ஆகும்.
- T ஒரு n – 1 வரிப்பிரிவுகளைக்கொண்ட இணைக்கப்பட்ட வரைபடம்.
- இணைக்கப்பட்ட T ல் உள்ள ஒவ்வொரு துணை வரைபடமும், வரிப்பிரிவுகளே விழாத அல்லது ஒரேயொரு வரிப்பிரிவு மட்டுமே விழுந்துள்ள, குறைந்தது ஒரு புள்ளியைப் பெற்றிருக்கும்.
- T ஒரு எளிய சுழற்சிகள் அற்ற n – 1 வரிப்பிரிவுகளைக்கொண்டது.

## 3.3 மரங்களின் பயன்பாடுகள்:

மர வரைபடங்கள் (Tree Graphs) என்பது கணிதத்தின் ஒரு முக்கிய அம்சமாகும். இது கோட்பாட்டியல் கணிதத்தில் (Graph Theory) பயன்படுத்தப்படும் அடிப்படை ரீதியான கட்டமைப்புகளில் ஒன்றாகும். இவை வேறுபட்ட துறைகளில் பலவிதமான பயன்பாடுகளை கொண்டுள்ளன. கீழே சில முக்கியமான பயன்பாடுகள் கொடுக்கப்பட்டுள்ளன:

### 3.3.1 கணினி அறிவியல் (Computer Science):

கணினி அறிவியல் என்பது நம் வாழ்வியலில் இணைந்து விட்ட ஒரு தவிர்க்கமுடியா அங்கமாகும். இத்துறையிலும் மர வரைபடங்கள் மிகவும் பயன் படக்கூடியதாக விளங்குகிறது.

- **தரவுக் கட்டமைப்பு (Data Structure)**
  இருமை மரம் (Binary Tree), இருமை தேடல் மரம் (Binary Search Tree), மற்றும் AVL மரம் போன்றவை தரவுகளை ஒழுங்குபடுத்தவும் தேடல்களை எளிமைப்படுத்தவும் பயன்படுத்தப்படுகின்றன.
- **கோப்பு முறைமை (File System)**
  கணினியின் கோப்பகங்கள் மற்றும் கோப்புகள் ஒரு மர வடிவத்தில் (hierarchical structure) அமைக்கப்பட்டுள்ளன. இவ்வாறு அமைப்பதால், கோப்பின் உள்ளடக்கம் குறித்து எளிதில் அறியலாம்.
- **பாதை அறியும் வழிமுறைகள் (Routing Algorithms)**
  தரவுகளை வழிமுறை செய்து வலைப்பின்னலின் சரியான பாதையில் செலுத்த மர வரைபடங்கள் பயன்படுகின்றன.

### 3.3.2. உயிரியல் (Biology):

அறிவியலின் ஓர் அங்கமான உயிரியல் துறையிலும் இதன் பயன்பாடுகள் எண்ணிலடங்கா. அவற்றில் சில:

- **உயிரின விளக்க மரம் (Phylogenetic Tree)**

  உயிரினங்களின் பரிணாம வரலாறுகளை விளக்க மற்றும் ஒப்பிட மர வரைபடங்கள் பயன்படுகின்றன.

- **ஒரு உயிரினத்தின் வளர்ச்சி மற்றும் செயல்பாட்டிற்கான மரபணு தகவல்களைக் கொண்டு செல்லும் மூலக்கூறான DNA மற்றும் ஊண் வளர்க்கும் புரத ஆராய்ச்சி**

  மர வடிவத்தில் நிரலிடுதல் மூலம் மரபணுக்களைப் பற்றி விவரிக்கப்பட்டு ஆராய்ச்சி செய்யப்படுகிறது .

**3.3.3. கணிதம் மற்றும் வழிமுறைகள் (Mathematics and Algorithms):**

கணிதமும், கணித அறிவியலும் மிகவும் சார்புடைய துறைகள் ஆகும். கணினி நிரல்களை எழுத பயன்படும் வழிமுறைகள் பெருபாலும் கணிதம் சார்ந்தவையே! அவை பயன் பாட்டுக்கணிதத்தின் ஓர் அங்கமாகும். அவற்றில் முக்கியமானவை சில:

- **குறுகிய பாதை கண்டறிதல் (Shortest Path Finding)**

  டிக்ஸ்ட்ரா (Dijkstra's) மற்றும் பிரிம்ஸ் (Prim's) போன்ற வழிமுறைகளில் மர வரைபடங்களை அடிப்படையாகக் கொண்டுதான் குறுகிய பாதை கண்டறியப்படுகிறது. இதன் அடிப்படையில் தான் கூகுல் வரைபடங்கள் இயங்குகிறது என்பது அறியப்படவேண்டிய ஒன்று

- **முடிவு மரங்கள் (Decision Trees)**

  ஒரு முக்கிய சூழலில் முடிவுகளை எடுப்பதற்கும் ஒவ்வொரு முடிவுக்கும் கிடைக்கும் பலனை கணிக்கவும் முடிவு மரங்கள் பயன்படுத்தப்படுகிறது.

**3.3.4. செயற்கை நுண்ணறிவு (Artificial Intelligence):**

கணினித் துறையில், வருங்காலத்தில் இந்தியாவில் மட்டுமல்லாது உலக அளவில் அதிகமான வேலை வாய்ப்புகளை அளிக்கக் கூடிய துறையாக செயற்கை நுண்ணறிவுத் (Artificial Intelligence) துறை விளங்க உள்ளது அனைவரும் அறிந்ததே. அந்த துறையிலும் இந்த மரங்கள் பல பயன்பாடுகளைக் கொண்டுள்ளது.

- **விளையாட்டு மரம் (Game Trees)**

  சூதாட்ட விளையாட்டில் திட்டமிடல், செஸ் போன்ற விளையாட்டுகளில் முடிவுகளை கணித்தல் போன்றவற்றில் மர வரைபடங்கள் பயன்படுத்தப்படுகின்றன.

- **இயந்திர கற்றல் (Machine Learning)**

  முடிவு மரங்கள்(Decision Trees) மற்றும் சீரற்ற காடு ( Random Forest) போன்ற முறைமைகள் இயந்திர கற்றலில் கணிப்புகள் செய்ய பெரிதும் உதவுகின்றன.

  **3.3.5. நிதி மற்றும் வணிகம் (Finance and Business):**

  நிதி மற்றும் வணிகம் ஆகியவை ஒரு நாட்டை வழிநடத்தவும், அந்நாட்டின் வளர்ச்சியிலும் பெரும் பங்கு வகிக்கும் துறைகள் ஆகும். இத்துறைகளில் மரங்களின் பயன்பாடுகள் சில:

- **முடிவெடுப்பில் உதவி**

  வணிக முடிவுகளை எடுக்க மர வடிவ அமைப்புகள் தீர்மான மரங்களாக(Decision Trees) பயன்படுத்தப்படுகின்றன.

- **பங்குச் சந்தை ஆராய்ச்சி**

  பங்கு செயல்பாடுகளை கணிக்க மர அமைப்புகள் பயன்படுகின்றன.

**3.3.6. மின்னணு பொறியியல் (Electrical Engineering):**

மின்னணு பொறியியல் துறையிலும் இந்த மரங்களின் பயன்பாடுகள் எண்ணற்றவை. அவற்றில் சில:

- **மின்சுற்றை வடிவமைத்தல் (Circuit Design)**

  சரியான வழிமுறையில் மின்சாரத்தை பிரிக்க மர வடிவமைப்புகள் பயன்படுத்தப்படுகின்றன.

- **மிகப் பெரிய அளவிலான மின்னணுக்கள் ஒருங்கிணைப்பு (VLSI)**

  மிகப் பெரிய அளவிலான மின்னணுக்கள் ஒருங்கிணைப்பு (VLSI) என்பது மில்லியன் கணக்கான அல்லது பில்லியன் கணக்கான MOS டிரான்சிஸ்டர்களை ஒரு சிப்பில் இணைப்பதன் மூலம் ஒரு ஒருங்கிணைந்த சுற்று (IC) உருவாக்கும் செயல்முறையாகும். இத்தகைய வேலையின் போது சேதமில்லாத தரவுகளைக் கணக்கிட மர வரைபடங்கள் பயன்படுகின்றன.

**3.3.7. அன்றாட வாழ்வில் மரங்களின் பயன்பாடுகள் (Everyday Applications)**

மேலே குறிப்பிட்டவை மட்டுமின்றி, நம்முடைய அன்றாட வேலைகளிலும் இந்த மரங்கள் பயன்படுகிறது. எடுத்துக்காட்டாக பின்வருவனவற்றைக் கூறலாம்

- **நேர மேலாண்மை**

  பணி ஒழுங்கு அமைக்க, திட்டமிடல் மர வரைபடங்களைப் பயன்படுத்தலாம்.

- **வெளிப்படையான தகவல் தொகுப்பு**

  அனைத்து தகவல்களையும் தரவுச் சரியாக ஒழுங்கமைக்க இது உதவுகின்றது. உதாரணத்திற்கு, மாணவர்கள் தேர்வுக்கு தயார் செய்யும் போது ஒவ்வொரு பாடத்தின் உள்ளடக்கத்தையும் அவற்றின் தொடர்புக்கு ஏற்றவாறு ஒரு மர அமைப்பில் எழுதி வைத்துக்கொண்டால், கடைசி நிமிட நினைவூட்டலுக்கு மிகவும் பயனுள்ளதாக அமையும்.

இங்கு குறிப்பிடப்பட்டவை மரங்களின் எண்ணற்ற பயன்பாடுகளில் சிலவே! மொத்தத்தில், மர வரைபடங்கள் ஏறக்குறைய அனைத்து துறைகளிலும் சிக்கலான தரவுகளை எளிமையாக கையாள உதவும் ஒரு வல்லமை கொண்ட கருவியாக இருக்கின்றன என்றால் அது மிகையாகாது!

---

**முடிவுரை:**

வலைப்பின்னல்கள் (NETWORKS) இல்லா உலகை இன்று நாம் நினைத்துக்கூட பார்க்க முடியாது. எல்லா வகை வலைப்பின்னல்களையும் மாதிரி படுத்தவும் அதனைப் பற்றி ஆராயவும் அவற்றின் பயன்பாட்டின் போது ஏற்படும் சிக்கல்களைத் தீர்க்கவும் மிகவும் பயனுள்ள இந்த பயன்பாட்டுக் கணிதத்தின் உட்பிரிவான வரைபடக்கோட்பாடு குறித்தும் அதன் ஒரு சிறப்பு வகுப்பான மரங்கள் குறித்தும் அறிந்து பயன்பட்டு மகிழ்வோம்!

## சான்றாதாரங்கள்:


1. Blockeel Hendrik , Devos Laurens , Frénay Benoît , Nanfack Géraldin , Nijssen Siegfried, "முடிவெடுக்கும் மரங்கள்: திறமையான கணிப்பிலிருந்து பொறுப்பான செயற்கை நுண்ணறிவு வரை" , Frontiers in Artificial Intelligence, Volume 6, 2023.
2. D. Mienye, N. Jere: "முடிவு மரங்கள் பற்றிய ஆய்வு: கருத்துகள், வழிமுறைகள் மற்றும் பயன்பாடுகள்", IEEE Access, 2024.
3. Douglas B. West, "வரைபடக் கோட்பாட்டின் அறிமுகம்", Pearson Education, India 2015.
4. Enoch, Olanite, Joseph, Oloyede, Emmanuel, Williams, Barnty, Aria, Javiera, Jose, Dylan, Diego, Catalina, "தரவு கட்டமைப்புகள் மற்றும் வழிமுறைகள்: மரங்கள், வரைபடங்கள் மற்றும் ஹாஷ் அட்டவணைகள், வகைப்படுத்துதல் மற்றும் தேடுதல்", 2024.
5. Jonathan Gross, Jay Yellen, "வரைபடக் கோட்பாடு மற்றும் அதன் பயன்பாடுகள்", CRC Press, New York, 2018.

6. KHIN AYE TIN, "வரைபடக் கோட்பாட்டில் மிகக் குறுகிய பரந்த மரம் மற்றும் பாதையின் பயன்பாடுகள்", IRE Journals, Volume 3, Issue 2, 2019.
7. M. C. S. K. P. A. P., "இருமத்தேடல் மரம் மற்றும் அதன் பயன்பாடுகள்: ஓர் ஆய்வு", International Journal on Recent and Innovation Trends in Computing and Communication, 3(11), 6200–6203. 2015.
8. Rajwant K. Kalia, Rakesh Pathak, "மர உயிரியல் மற்றும் உயிரித் தொழில்நுட்பம்", Springer Publications, 2025.

## REFERENCES:

1. Blockeel Hendrik , Devos Laurens , Frénay Benoît , Nanfack Géraldin , Nijssen Siegfried, "Decision trees: from efficient prediction to responsible AI", Frontiers in Artificial Intelligence, Volume 6, 2023.
2. D. Mienye, N. Jere: Survey of Decision Trees: Concepts, Algorithms, and Applications, IEEE Access, 2024.
3. Douglas B. West, "Introduction to Graph Theory", Pearson Education, India 2015.
4. Enoch, Olanite, Joseph, Oloyede, Emmanuel, Williams, Barnty, Aria, Javiera, Jose, Dylan, Diego, Catalina, "Data Structures and Algorithms: Trees, graphs, and hash tables, Sorting and searching algorithms", 2024.
5. Jonathan Gross, Jay Yellen, "Graph Theory and Its Applications", CRC Press, New York, 2018.
6. KHIN AYE TIN, "Applications of The Shortest Spanning Tree and Path on Graph Theory", IRE Journals, Volume 3, Issue 2, 2019.
7. M. C. S. K. P. A. P., Binary Search Tree and Its Applications: A Survey. International Journal on Recent and Innovation Trends in Computing and Communication, 3(11), 6200–6203. 2015.
8. Rajwant K. Kalia, Rakesh Pathak, Tree Biology and Biotechnology, Springer Publications, 2025.

தமிழ்மணம் சர்வதேசத் தமிழ் ஆய்விதழ்
**Tamilmanam International Research Journal of Tamil Studies | ISSN(o): 3049-0723**
[Impact Factor: 9.47] Monthly, Peer-Reviewed, Refereed, Indexed Journal with IC Value : 86.87
**Volume - 1, Issue - 09, June - 2025**



DOIs: https://doi.org/10.63300/tm0109202504 --:-- Research Paper

# Neervazhippadum Puthinam kaattum Navithar samugathin irappu sadangu

**Dr.S.Thirukumar,**
Assistant Professor, Department of Tamil,
Srimad Andavan Arts and Science college (Autonomous), Tiruchirappalli – 05
Email: kumara@andavancollege.ac.in

***Abstract:*** *Rituals are seen as being closely intertwined with human life. From birth to death and even beyond, rituals are deeply embedded, serving as a means to understand the culture and way of life of people. More than participating in auspicious ceremonies, people ensure their presence in funeral rites without fails. In this context, the novel Neervazhippadum by Devibharathi provides insights into the funeral rituals of the Navithar community. This research article aims to explore these rituals and understand the lifestyle of the people within that community.*

***Key Words:*** *Devi Bharathi, water-carrying, navithar, vaikarisi, oppari, cadaver, sambukargal*

# நீர்வழிப்படூஉம் புதினம் காட்டும் நாவிதர் சமூகத்தின் இறப்புச் சடங்கு

[1] **முனைவர் சு.திருக்குமார்,**
[1] உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை,
ஸ்ரீமத் ஆண்டவன் கலை மற்றும் அறிவியல் கல்லூரி (தன்னாட்சி),
திருச்சிராப்பள்ளி – 05.

**Abstract:** *சடங்குகள் மனித வாழ்வோடு ஒன்றிணைந்ததாக காணப்படுகிறது. மனிதனின் பிறப்பு முதல் இறப்பு வரை மற்றும் இறப்பின் பின்னும் சடங்குகள் நிறைந்து காணப்படுவதால் மக்களின் பண்பாடுகளையும், வாழ்வியலையும் அறிந்துகொள்ள சடங்குகள் துணைபுரிகின்றன. மக்கள் மங்கல சடங்குகளில் பங்கெடுப்பதைக் காட்டிலும் இறப்புச் சடங்கில் தவறாமல் பங்குகொள்வர். அவ்வகையில் தேவிபாரதியின் நீர்வழிப்படூஉம் புதினத்தில் நாவிதர் சமூகத்தில் காணப்படும் இறப்புச் சடங்குகள் குறித்த பதிவுகளையும், அம்மக்களின் வாழ்வியலையும் அறிந்துகொள்ளும் வகையில் இவ்வாய்வுக் கட்டுரை அமைகிறது.*

***குறிப்பு சொற்கள்*** *: பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள், குடும்பம், நாகரிகம், சமுதாயம்.*

## முன்னுரை:

நவீன இலக்கியப் படைப்பாளர்களுள் தவிர்க்கமுடியாத எழுத்தாளர்களுள் ஒருவராக விளங்குபவர் தேவிபாரதி. பள்ளி ஆசிரியர், காலச்சுவடு இதழில் பொறுப்பாசிரியர், திரைத்துறை என்று பல்வேறு துறைகளில் பணியாற்றியவர். சிறுகதை, புதினம், கட்டுரை என்று பல்வேறு படைப்புகளைப் படைத்துள்ளார். இவருடைய நீர்வழிப்படூஉம் புதினமானது நாவிதர்களின் வாழ்வியலைப் பேசவதாக அமைகிறது. அவ்வகையில் நாவிதர்களின் இறப்புச் சடங்குகளையும் அதன் வழி பெறப்படும் பண்பாட்டுப் பதிவுகளையும் எடுத்துரைப்பதே இவ்வாய்வுக் கட்டுரையின் நோக்கம் ஆகும்.

ஆதிகாலத்தில் மனிதர்கள் இயற்கையோடு இயைந்த வாழ்வியலை வாழ்ந்து வந்தனர். இயற்கையால் மனிதர்களுக்குக் கிடைத்த நன்மையின் காரணமாகவும் இயற்கையால் உருவாகும் துன்பத்தின் மூலம் வெளிப்படும் பயத்தின் காரணமாகவும் சில செயல்களைச் செய்து வந்தனர். இந்தச்

செயல்கள் மனிதர்களால் தொடர்ந்து பின்பற்றப்படும் போது அவை சடங்குகள் என்று பெயர் பெற்றன. மனிதனின் பிறப்பு முதல் இறப்பு வரை மற்றும் இறப்பின் பின்னும் சடங்குகள் நிறைந்து காணப்படுகின்றன.

சடங்குகள் மக்கள் வாழும் நிலவியல் சூழலின் காரணமாகவும், சாதி சமய வேறுபாட்டின் காரணமாகவும் பல்வேறு வகையில் நடத்தப்பெறுகின்றன. சில சடங்குகள் நிலம் மற்றும் சாதியத்தைத் தாண்டி அனைவருக்கும் பொதுவானச் சடங்குகளாகவும் காணப்பெறுகின்றன. சடங்குகள் அந்தச் சமூக மக்களின் வாழ்வியல் மற்றும் பண்பாடுகளை வெளிப்படுத்துபவையாக அமைகின்றன.

பூமியில் பிறந்த ஒவ்வொருவரும் என்றாவது ஒரு நாள் இவ்வுலக வாழ்வை விட்டு இறக்க நேரிடும். இறந்தவர்களுக்குப் பல்வேறு சடங்கு முறைகளைச் செய்து அடக்கம் செய்வர். இறப்புச் சடங்கு குறித்துத் தொ.பரமசிவன் *“இறந்தாரை நீராட்டுதல் அதிலும் சிறப்பாக எண்ணெய் தேய்த்து நீராட்டுதல், புத்தாடை உடுத்தல், வாயில் அரிசியிடுதல், உண்டு முடித்தவர்கள் போல வாயில் வெற்றிலை இடுதல், நெற்றியில் அல்லது கையில் நாணயத்தை வைத்தல் ஆகிய அனைத்துச் சடங்குகளும் பெரும்பான்மையான சாதியார்களிடம் ஒரே மாதிரியாக அமைந்துள்ளன. இதன் பொருள் இறந்தவர் இல்லாமல் போகவில்லை அவர் இன்னொரு ஊருக்குப் பயணம் செய்கிறார் என்பதுதான். எனவேதான் இறப்புச் சடங்குகள் ஒரு மனிதனை வழி அனுப்பும் சடங்கு போலவே அமைந்துள்ளன.”* (பண்பாட்டு அசைவுகள்,ப.124.) என்று குறிப்பிடுகிறார்.

இறப்பு சடங்கில் பல்வேறு சடங்கு முறைகள் காணப்படுகின்றன. நீர்வழிப்டூஉம் புதினத்தில் காணப்படும் இறப்புச் சடங்குகள் பின்வருமாறு பகுத்துக்கொள்ளப்படுகிறது. 1.வாய் கை கட்டுதல் 2.கைநீட்டி இழவு காணுதல் 3.ஒப்பாரி வைத்தல் 4.பறையடித்தல் 5.வாய்க்கரிசி குத்துதல் 6.குளிப்பாட்டுதல் 7.கொள்ளி வைத்தல் 8.தாலியறுப்பு

**வாய் கை கட்டுதல்**

இறந்தவர்களை நீராட்டிய பின்பு அவர் பயன்படுத்திய வேட்டி சட்டையை அணிவித்து நடு மையத்தில் வைப்பர். இரண்டு கைகளின் கட்டை விரல்களை ஒன்றாகச் சேர்த்து வைத்து வெள்ளைத் துணியால் கட்டுவர். இரண்டு கால்களின் பெரு விரல்களையும் இணைத்துக் கட்டுவர். இறந்தவர்களின் வாய்ப்பகுதியில் மஞ்சள் வைத்து வெள்ளைத் துணியால் தலையுடன் சேர்த்துக் கட்டுவர். பிறகு தேங்காய் உடைத்து எண்ணெய் ஊற்றி விளக்கேற்றி சாமி கும்பிட்டு வழி விடுதல் என்ற சடங்கினைச் செய்வர்.

மேற்கண்ட கருத்தினை வலியுறுத்தும் வகையில் இப்புதினத்தில் காருமாமா என்பவர் இறந்து போனார். அவரது இறப்புக்கு உறவினர்கள் அனைவரும் வந்திருந்தனர். அச்சமயம் *“முத்தையன் வலசுப் பெரியப்பா காருமாமாவின் சடலத்தைப் புரட்டி அவரது ஒடுங்கிய கன்னங்களிலும் வற்றி உலர்ந்த நெஞ்சுக்கூட்டிலும் சிதறி வழிந்து கிடந்த கோழையைத் துடைத்து உடலின் விறப்பைத் தளர்த்தி வாய்க்கட்டு கைக்கட்டு கட்டி மாமாவின் துருவேறிய டிரங் பெட்டியிலிருந்து அவரது உடைமைகளில் எஞ்சியிருந்த பழுப்பேறிய வேட்டியொன்றைத் தேடியெடுத்துப் போர்த்திய போதும் தெற்கு வளவுப் பண்ணாடி வீட்டிலிருந்து வாங்கி வந்திருந்த ஊதுபத்திகளைக் கொளுத்தித் தலைமாட்டில் வைத்த போதும் ஒரிரு மஞ்சள் துண்டுகளுக்காகவும், கொஞ்சம் பஞ்சுக்காகவும் ஒரு அகல் விளக்குக்காகவும் உடையாம்பாளையத்தின் கைவிடப்பட்ட தெருக்களில் அலைந்து திரிந்த போதும் ஓயாமல் ராசம்மா அத்தையை சபித்துக் கொண்டிருந்தாள் அம்மா.”* (நீர்வழிப்படூஉம்,ப.15.) என்று ஆசிரியர் குறிப்பிடுவதன் வழி வாய் கை கட்டும் சடங்கு முறையை அறிந்து கொள்ள முடிகிறது.

மேற்கண்ட சடங்கு முறையைப் பெருமாள் முருகனும் ஏறுவெயில் புதினத்தில் பதிவு செய்துள்ளார். பொன்னையனின் தாத்தா இறந்த பொழுது *“பெரியப்பன் ஒவ்வொன்றாய் ஆக வேண்டிய காரியங்களுக்கு உத்தரவிட்டார். வாயை வெள்ளைத் துணியால் கட்டி உடலைப் போர்த்தி நடுக்கொட்டகையில் கிடத்தினார்கள்.”* (ஏறுவெயில்,ப.164.) என்று கூறுவதன் வழி அறியலாம்.

இறந்தவரின் உடல் விறைத்துக் காணப்படும். ஆகையால் அவரின் வாய் மற்றும் கை கால்களை வெள்ளைத் துணியால் இணைத்துக் கட்டுவதையும், இறந்தவர்களின் உடலில் உள்ள கிருமிகளின் காரணமாக கிருமி நாசினியாகிய மஞ்சள் வைத்துக் கட்டும் அறிவியல் தன்மையையும் உணர முடிகிறது.

**கை நீட்டி இழவு காணுதல்**

இறந்தவர்களின் மகன் மற்றும் அண்ணன் தம்பி உறவுமுறை உடையவர்கள் தங்கள் சட்டையைக் கழற்றிவிட்டு வரிசையாக நின்று இரண்டு கைகளையும் ஒன்றாகச் சேர்த்து முன்னால் நீட்டுவர். இறப்பிற்கு வருபவர்கள் அவர்களின் கைகளைத் தங்கள் கைகளால் நிரவுவார்கள். இப்புதினத்தில் காருமாமா இறந்தபோது அவருடைய மகன் தந்தையினுடைய சடலத்தைப் பார்த்துக் கொண்டிருக்கும் சூழலில் இச்சடங்கு குறித்த செய்தி இடம்பெறுகிறது. இதனை *“பிறகு ஒரு சொட்டுக் கண்ணீருக்கும் இடந்தராமல் வாசலுக்கு வந்து நின்று துக்கம் கேட்டு நின்றவர்களுக்குக் கை நீட்டினான். ஊர்க்காரர்களில் சிலர் வந்து அவனிடமும் முத்தயன் வலசுப் பெரியப்பாவிடமும் சுந்தராடி வலசுப் பெரியம்மாவின் மகன்களிடமும் சாராய நெடியுடன் நின்று கொண்டிருந்த நாச்சிபாளையத்தாரிடமும் சண்முகத்திடமும் நாய்க்கன்வலசு அப்புச்சியிடமும் கை நீட்டி விட்டுப் போனார்கள்.”* (நீர்வழிப்படூஉம்,ப.30.) என்று இப்புதின ஆசிரியர் கூறுவதன் மூலம் கை நீட்டி இழவு காணும் முறையை உணர முடிகிறது.

இறந்தவர் எங்களை விட்டு நீங்கி விட்டார். இனி எங்களுக்கு வேறு துணை இல்லை என்று வருத்தத்துடன் கையை விரித்து நிற்பவர்களுக்கு உங்களுக்குத் துணையாக யாரும் இல்லையென்று நினைக்காதீர்கள் நாங்கள் இருக்கிறோம் என்று இறப்பிற்கு வருபவர்கள் அவர்கள் கையைப் பிடித்து நிரவுவதாக மேற்கண்ட சடங்கு முறையினைக் கருதலாம்.

**ஒப்பாரி**

இறந்தவர்களை நினைத்து பெண்களின் மனதில் உள்ளவைகள் பாடல்களாக வெளிப்படும் போது அவை ஒப்பாரி என்று பெயர் பெறுகின்றன. சென்னைப் பல்கலைக்கழகத் தமிழகராதி ஒப்பாரியை *“ஒப்ப+ ஆரி எனப் பிரித்து ஒப்புச் சொல்லி அழுதல் என பொருள் தருகிறது.”* (நாட்டுப்பு இயல் ஆய்வு,ப.59.) என்று சு.சக்திவேல் தம் நூலில் குறிப்பிடுகிறார்.

இறந்தவரின் வீட்டிற்குச் செல்லும் பெண்கள் ஊருக்குள் சென்றவுடன் சேலையின் முந்தானையைத் தலையில் போட்டுக் கொண்டு ஒப்பாரி வைத்துக் கொண்டே செல்வர். தலையில் முந்தானையால் முக்காடிட்டுச் செல்வது துக்க வீட்டிற்குச் செல்லும் அடையாளமாகக் கருதப்படுகிறது. சடலத்தைச் சுற்றி நின்று பெண்களின் தோள்களைப் பற்றிக் கொண்டு ஒப்பாரி வைப்பர். இக்கருத்தினை வலியுறுத்தும் வகையில் இப்புதின ஆசிரியர் *“துக்க வீடுகளுக்குப் போக நேரும்போது கிடத்தப்பட்டிருக்கும் சடலத்தைச் சூழ்ந்து நின்று ஒருவரையொருவர் தழுவி மாரடித்து அழுது கொண்டே துல்லியமாக அவற்றைப் பாடினார்கள். ஊர் எல்லையை மிதித்த மறுகணம் எல்லோரும் ஒன்றுபோல் தலையில் சேலையைப் போட்டுக் கொள்வார்கள். சீராக கைகளை உயர்த்தி உச்சியில் அறைந்து பாடிக்கொண்டே தூக்க வீட்டை அடைவார்கள்.”* (நீர்வழிப்படூஉம்,ப.31.) என்று கூறுவதன் மூலம் துக்க வீட்டிற்கு வரும் பெண்களைப் பற்றியும் ஒப்பாரி வைக்கும் முறையினைப் பற்றியும் அறிந்து கொள்ள முடிகிறது.

இறந்தவர்களின் உறவு முறைக்கேற்றவாறும் அவர்கள் வாழ்ந்த வாழ்க்கை முறையினையும் கூறி ஒப்பாரி வைப்பர். வாழும் பகுதிகளுக்கு ஏற்றவாறும் ஒப்பாரி பாடல்கள் அமையும். இப்புதினத்தில் காருமாமா இறந்தபோது அவரின் தங்கை கொங்குப் பகுதியில் வாழ்ந்த தங்கா, தன் சகோதரர்களின் சடலங்களைப் பார்த்து ஒப்பாரி வைத்த பாடல்களைப் பாடத் தொடங்கினாள். இதனை இப்புதின ஆசிரியர் *“திண்ணையில் கால்களை மடித்து உட்கார்ந்தபடி குன்னுடையாக் கவுண்டன் கதையில் அண்ணன்மார்களின் சடலங்களைப் பார்த்து தங்கா புலம்பியழும் பாடல்களைத் தன் அண்ணனுக்காக பாடத் தொடங்கியிருந்தாள் அம்மா. துக்க நிகழ்வுகளில் தங்கள் அண்ணன்மார்களுக்காக ஆம்பராந்துக்கரைப் பெண்கள் வழக்கமாகப் பாடும் ஒப்பாரியே அது.”* (நீர்வழிப்படூஉம்,ப.30.) என்று குறிப்பிடுவதன் மூலம் மேற்கண்ட கருத்தினை அறியலாம்.

**பறையடித்தல்**

தமிழர்களின் சடங்குகளில் பறை இசைத்தல் தவிர்க்க முடியாததாக சங்ககாலம் முதல் இன்றுவரை காணப்படுகிறது. நல்ல நிகழ்வுக்கு ஒருவிதமான பறை இசையும் துக்க நிகழ்வுக்கு வேறுவிதமான பறை இசையும் முழக்கப்படுகிறது. துக்க நிகழ்வுக்கு ஒலிக்கும் பறையை நெய்தல் பறை என்று கூறுவர். இதனை புறநானூற்றில்,

*"ஓர்இல் நெய்தல் கறங்க ஓர்இல்*
*ஈர்ந்தன் முழவின் பாணி ததும்ப"* (புறநானூறு,பா.எண்.194.)

என்ற பக்குடுக்கை நன்கணியாரின் வரிகளின் மூலம் உணரலாம்.

இறந்தவர்களை அடக்கம் செய்யும் வரை பறை ஒலிக்கப்படுகிறது. பறை இசைப்பவர்கள் தங்கள் பறைகளை நெருப்பில் நன்றாகக் காய்ச்சிய பின்பு பறையினை முழக்கிக்கொண்டு அப்பறை இசைக்கேற்றவாறு ஆடுவர். இதனை இப்புதின ஆசிரியர் *"தங்கள் பறைகளுடனும் கொம்புகளுடனும் வந்திருந்த சாம்புகர்கள் தம் காலத்தில் வேறு யாருக்கும் இசைத்திராத அபூர்வமான இசைக் கோர்வைகளை அவற்றிலிருந்து எழுப்பிக் கொட்டுமுழக்குப் போட்டு சலங்கை கட்டி ஆடி காருமாமாவை வழியனுப்புவதற்குத் தயாராகிக் கொண்டிருந்தார்கள்."* (நீர்வழிப்படூஉம்,ப.38.) என்று குறிப்பிடுவதன் வழி பறையடித்தல் முறையினை உணர முடிகிறது.

**வாய்க்கரிசி குத்துதல்**

இறந்தவரை இடுகாட்டில் வைத்து அடக்கம் செய்வதற்கு முன்னர் வாய்க்கரிசி இடுதல் எனும் சடங்கு பின்பற்றப்படுகிறது. இச்சடங்கு இருமுறைகளில் அமைகிறது. முச்சந்தி, சுடுசுடலை, சந்திமாடம் என்று பல்வேறு பெயர்களில் அழைக்கப்படக்கூடிய இடத்தில் இறந்தவரை வைப்பர். பெண்கள் சுடுகாட்டிற்குச் செல்ல அனுமதி இல்லாத காரணத்தால் வாய்க்கரிசி இடும் சடங்கினை இவ்விடத்தில் நிகழ்த்துவர். ஆண்கள் சுடுகாட்டில் இறந்தவரை வைக்கும்போது வாய்க்கரிசி இடுவர்.

துக்க வீட்டிற்கு வரும் பெண்களில் சிலர் கோடித்துணி எடுத்து வரும்போது ஒரு பாத்திரத்தில் நெல்லும் கொண்டு வருவர். அந்நெல்லை உரலில் இட்டு அரிசியாக்கும் உரிமை இறந்தவரின் அண்ணன் தம்பி உறவு முறையைச் சார்ந்த பெண்களுக்கு மட்டுமே உரியதாகும். உரலில் முதல் உலக்கை இடும் உரிமை பேத்திகளுக்கே உண்டு என்பதை *"வாய்க்கரிசி நெல்லைக் குத்தும்போது, முதல் உலக்கை இடும் உரிமை மகள் வழிப் பேத்திமார்க்கே உண்டு. பேரன் பேத்தி என்பது சொத்துரிமைக்கு அப்பாலும் மரியாதை பெறும். ஏனெனில் அது உயிர்களின் தொடர்ச்சியைக் குறிக்கும் உறவாகும்."* (தமிழர் உறவு முறைகளும் சமயமும் வழிபாடும், ப.36.) என்று தொ.பரமசிவன் குறிப்பிடுவதன் வழி அறியலாம்.

மேற்கண்ட கருத்தினை வலியுறுத்தும் வகையில் இப்புதினத்தில் காருமாமா இறந்தபொழுது வாய்க்கரிசி யார் குத்துவது என்று பேசிக்கொண்டிருந்தபோது *"மாமா பங்காளி வகையறாவைச் சேர்ந்த பெண்களில் இருவர் தாமே முன்வந்து வாய்க்கரிசி குத்துவதற்கு விருப்பம் தெரிவித்தார்கள்."* (நீர்வழிப்படூஉம்,ப.35.) என்று ஆசிரியர் குறிப்பிடுவதன் மூலம் வாய்க்கரிசி குத்தும் உரிமை பங்காளி வகையறாவைச் சார்ந்த பெண்களுக்கே உண்டு என்பதை அறிந்து கொள்ள முடிகிறது.

**குளிப்பாட்டுதல்**

சடலத்தைப் பாடையில் வைத்து தூக்கிச் செல்வதற்கு முன் துணியால் நான்கு புறமும் மறைத்துப் பிடித்து உறவினர்களை அழைத்துத் தலையில் நெய்யரப்புத் தேய்க்கச் சொல்வார்கள். பின்பு பிறந்த வீட்டுப் பெண்கள் பிடித்து வைத்திருந்த தண்ணீரை சடலத்தில் ஊற்றி குளிப்பாட்டிய பின் புத்தாடை உடுத்தி நான்கு கால் பந்தலின் கீழ் கொண்டுவந்து வைப்பர். இதனை தேவிபாரதி *"நெய்யரப்புத் தேய்த்துச் சடலத்தைக் குளிப்பாட்டி கோடிபோர்த்தி, வாய்க்கரிசி வைத்து, நெய்ப்பந்தம் பிடித்து, பின்னப்பூக்களைத் தூவி கொட்டுமுழக்குகளுடன் மாமாவின் சடலத்தைத் தேரில் ஏற்றிய போது மழை."* (நீர்வழிப்படூஉம்,ப.39.) என்று குறிப்பிடுவதன் வழி சடலத்தைப் பாடையில் வைத்து இடுகாட்டிற்குக் கொண்டு செல்வதற்கு முன்பு குளிப்பாட்டி புத்தாடை உடுத்தும் வழக்கத்தை அறிய முடிகிறது. இறுதியாக சடலத்தின் மீது போர்த்திக் கட்டும் கோடித்துணி பிறந்த வீட்டுப் பெண்கள் கொண்டுவரும் கோடித்துணியாகும். இம்முறை பிறந்தவீட்டுப் பெண்களின் உரிமையைக் குறிப்பிடுவதாகக் காணப்படுகிறது.

**நெய்ப்பந்தம் பிடித்தல்**

இறந்தவரைக் குளிப்பாட்டி புத்தாடை உடுத்தி நான்கு கால் பந்தலின்கீழ் வைத்த பின்பு நான்கு மூலைக்கும் பேரப்பிள்ளைகளை நிற்க வைத்து நெய்ப்பந்தம் பிடிக்கச் சொல்வர். பொருளாதார

வசதிக்கேற்றவாறு நெய்ப்பந்தமோ அல்லது ஊதுபத்தியோ பிடிக்கும் வழக்கம் காணப்படுகிறது. இதனை இப்புதினத்தில் *"தேர்க்கட்ட புள்ளைக இருக்கறாங்களா? பின்னப்பூப்போட நெய்ப்பந்தம் பிடிக்க பேரம் பேத்திதே உண்டுமா?"* (நீர்வழிப்படூஉம்,ப.17.) என்று ஆசிரியர் கூறுவதன் வழி நெய்ப்பந்தம் பிடிக்கும் உரிமை பேரன் பேத்திகளுக்கே உண்டு என்பதை அறிந்து கொள்ள முடிகிறது.

**கொள்ளி வைத்தல்**

இறந்தவருக்குக் கொள்ளி வைக்கும் உரிமை மகனுக்கே உரியது. மகன் இல்லாதபட்சத்தில் அண்ணன் தம்பி உறவு உடையவர்கள் கொள்ளி வைப்பர். எனவேதான் ஒவ்வொருவரும் இறந்த பின்பு தனக்குக் கொள்ளி வைப்பதற்கு ஒரு ஆண் வாரிசு வேண்டும் என்று விரும்புவர். இக்கருத்தினை விளக்கும் வகையில் இப்புதின ஆசிரியர் *"கொள்ளி வெக்கறதுக்கு ஆருமில்லாமப் போவப் போறானே எம்பொறந்தவென்னு மனசொடிஞ்சு கெடந்தா அந்த ரட்டணமூர்த்தி கண்ணத் தொறந்துட்டே, பய வந்து சேந்துக்கிட்டெ என அம்மாவும் பெரியம்மாவும் ஒரே குரலில் சொல்லிக் கொண்டிருந்தார்கள்."* (நீர்வழிப்படூஉம்,ப.28.) என்று கூறுவதன் வழி மேற்கண்ட கருத்தினை விளங்கிக்கொள்ள முடிகிறது.

**தாலியறுப்பு**

கணவன் இறந்த பின்பு மனைவிக்குச் செய்யும் சடங்கு முறையாகும். கணவன் இறந்த ஐந்தாம் நாள், எட்டாம் நாள் அல்லது பதினாறாம் நாள் காரியம் செய்யும் அன்று இச்சடங்கினைச் செய்வர். பெரும்பான்மை எட்டாம் நாளே எல்லோராலும் பின்பற்றப்படுகிறது. காரியத்தன்று மனைவிக்கு வண்ணப் புடவை உடுத்தி, கைகளில் வளையலிட்டுத் தலையில் பூச்சூடி, நெற்றியில் திலகமிட்டு அமர வைப்பர். பெண்கள் அனைவரும் கூடி கணவனை இழந்த பெண்ணின் கைகளில் அணிந்த வளையலை உடைப்பர். நெற்றித் திலகத்தை அழிப்பர். தலையில் உள்ள பூவைக் களைவர். கழுத்தில் உள்ள மங்கல அணியாகிய தாலிக்கயிறை அறுப்பர். இதனை இப்புதினத்தில் *"ஆண்கள் எல்லோரையும் விலகியிருக்கச் சொல்லிவிட்டு அத்தையைக் குளிக்க வைத்து வீட்டுக்குள் அழைத்துச் சென்றார்கள். அத்தை பெருங்குரலெடுத்து அழுதது கேட்டது. அம்மா, பெரியம்மா தவிர உடனிருந்த மற்ற விதவைப் பெண்கள் சிலரது குரல்கள் கேட்டன. அவற்றோடு அத்தைக்கு அணிவிக்கப்பட்டிருந்த கண்ணாடி வளையல்கள் உடைபடும் சிறுசிறு சத்தங்கள். பிறகு கட்டியழும் ஓசை. எல்லாவற்றையும் முடித்துக்கொண்டு வெளியே அழைத்து வந்தபோது அத்தை வெள்ளைச்சேலையொன்றைச் சுற்றிக் கொண்டிருந்தாள்"* (நீர்வழிப்படூஉம்,ப.183.) என்று ஆசிரியர் குறிப்பிடுவதன் வழி மேற்கண்ட சடங்கு முறையை அறிந்து கொள்ள முடிகிறது.

**முடிவுரை**

இறப்புச் சடங்குகள் பெரும்பான்மை அனைத்து சாதியினரிடமும் ஒரே மாதிரியாகவும் சிறுபான்மை அவர்கள் வாழும் வட்டாரங்களுக்கு ஏற்றவாறும் அமைவதைக் காண முடிகிறது. இறந்தவரின் உடல் விறைத்துக் கொண்டிருப்பதாலும் கிருமிகளைப் போக்குவதற்காகவும் மஞ்சள் பூசி வாய், கை மற்றும் கால்களை இணைத்துக் கட்டப்படுவதாக உணரலாம். கைநீட்டி இழவு காணும் சடங்கு அவர்களின் துன்பத்தைப் போக்கும் வகையில் அமைகிறது. கொங்கு நாட்டிற்கே உரிய ஒப்பாரி பாடப்படுவதையும் அறிய முடிகிறது. வாய்க்கரிசி குத்துதல் மற்றும் நெய்ப்பந்தம் பிடித்தல் போன்ற சடங்குகளில் பேரன் பேத்திகளுக்கு முன்னுரிமை கொடுப்பது உயிர்களின் தொடர்ச்சியைக் குறிக்கிறது. கொள்ளி வைப்பதற்காக ஆண் வாரிசை மக்கள் விரும்புவதையும் தாலியறுப்புச் சடங்கு பெண்களால் நடத்தப்படுவதையும் காண முடிகிறது.

**துணைநூற்பட்டியல்**


1. தேவிபாரதி,நீர்வழிப்படூஉம், நற்றிணை பதிப்பகம் (பி) லிமிடெட், எண் 136, தரைதளம், சோழன் தெரு, ஆழ்வார் திருநகர், சென்னை – 87. நான்காம் பதிப்பு - சனவரி 2024.
2. சு.சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, மணிவாசகர் பதிப்பகம், 31,சிங்கர் தெரு, பாரிமுனை, சென்னை-08. எட்டாம் பதிப்பு - சனவரி 2009.
3. பெருமாள் முருகன், ஏறுவெயில், காலச்சுவடு பதிப்பகம், 669, கே.பி.சாலை, நாகர்கோவில்-01. ஆறாம் பதிப்பு - ஆகஸ்டு 2019.
4. தொ.பரமசிவன், பண்பாட்டு அசைவுகள், காலச்சுவடு பதிப்பகம், 669, கே.பி.சாலை, நாகர்கோவில்-01. பன்னிரண்டாம் பதிப்பு - ஆகஸ்டு 2014.
5. தொ.பரமசிவன், தமிழர் உறவுமுறைகளும் சமயமும் வழிபாடும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், 41-B சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை-98. இரண்டாம் பதிப்பு - டிசம்பர் 2022.
6. புலியூர்க்கேசிகன்(உ.ஆ), புறநானூறு மூலமும் உரையும், சாரதா பதிப்பகம், 6/16, தோப்பு வெங்கடாசலம் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை – 05. முதல் பதிப்பு - டிசம்பர் 2010.


**References:**


1. Devibharati. *Nīrvazhippadūum*. Natrinai Pathippagam (P) Ltd., no. 136, Taraitalam, Cholan Theru, Azhwar Thirunagar, Chennai – 87, 4th ed., Jan. 2024.
2. Puliyur Kesikan, commentator. *Puranaanuru Moolamum Uraiyum*. Saradha Pathippagam, 6/16, Thoppu Venkatachalam Theru, Tiruvallikeni, Chennai – 05, 1st ed., Dec. 2010.
3. Perumal Murugan. *Eruveyil*. Kalachuvadu Pathippagam, 669, K.P. Salai, Nagarkovil – 01, 6th ed., Aug. 2019.
4. Tho. Paramasivan. *Panpaattu Asaivugal*. Kalachuvadu Pathippagam, 669, K.P. Salai, Nagarkovil – 01, 12th ed., Aug. 2014.
5. Tho. Paramasivan. *Thamizhar Uravumuraigalum Samayamum Vazhipadum*. New Century Book House (P) Ltd, 41-B, Sidco Industrial Estate, Ambattur, Chennai – 98, 2nd ed., Dec. 2022.
6. Su. Sakthivel. *Naattuppura Iyal Aaivu*. Manivasagar Pathippagam, 31, Singer Theru, Parimunai, Chennai – 08, 8th ed., Jan. 2009.